# உங்கள் மகள் சிரமப்பட்டுப் படிப்பது மட்டுமே போதாது.
# அவளுக்கு ஒளிமயமான எதிர்காலத்தை உருவாக்க நீங்கள் திட்டமிட வேண்டும்.



வழங்குகிறோம்




இரவு முழுதும் கண்விழித்து படித்து, முன்னேற வேண்டும் என்ற மன உறுதி. அதோடு யூடிஐ வழங்கும் 'காலேஜ் & கேரியர் ஃபண்டில்' நீங்கள் செய்யும் முதலீட்டைப் பயன்படுத்தி, அவள் அந்த உச்ச நிலையை எய்தும் குறிக்கோளை சாதிப்பதற்கு சாத்தியமாகும்.

உங்களுடைய குழந்தை/மகள் 15 வயதிற்குட்பட்டிருப்பின், நீங்கள் இப்போதே முதலீடு செய்து அவளுடைய ஒளிமயமான எதிர்காலத்திற்கு வழிவகுக்கலாம். அது அவளுடைய கல்லூரி மேற்படிப்பிற்கோ அல்லது தொழில் துவங்கவோ கை கொடுத்து உதவும். ஃபண்டின், படிப்படியாக பணத்தை திருப்பி எடுக்கவல்ல சௌகரியம், அந்த புருஷன் மேலும் மற்ற செலவுகளுக்கு தேவையான போது பெரிதும் உதவிடும். ஆண்டாண்டு தோறும் அதிகமாய் முதலீடு செய்வீர்களேயானால், அவளுடைய எதிர்காலம் அதிக ஒளிமயமாய் அமையும். இந்த ஃபண்ட் வளர்ந்து கொண்டே இருக்கிறது. உங்கள் குழந்தை வளர்வதைப் போன்றே வளரும் வகையில் உங்கள் பணத்தை யூடிஐ முதலீடு செய்வதுதான் அதற்குக் காரணம்.

**சி ற ப் பு   அ ம் ச ங் க ள்**

- ☐ ஒரு ஓப்பன் — என்டெட் திட்டம்.
- ☐ 15 வயதுக்குட்பட்ட குழந்தைகளுக்கான திட்டம். 18 லிருந்து 23 வயதுவரை படிப்படியான முறையில் பணத்தைத் திருப்பி எடுக்கவல்லது.
- ☐ ஒவ்வொரு யூனிட்டும் ரூ.10, குறைந்தபட்ச முதலீடு ரூ.2000, மற்றும் அதற்கு மேல் ரூ.500-ன் மடங்கில், 15 வயதுக்குட்பட்ட உங்கள் குழந்தைக்கு.
- ☐ பண்டில் ஏற்படும் வளர்ச்சி போனஸ் யூனிட்டுகளாக அதற்குரிய காலவரையில் சேர்க்கப்படும்.
- ☐ ஒவ்வொரு ஆண்டும் இருமுறை பகுதியளவு பணத்தைத் திருப்பி எடுத்தல் அனுமதிக்கப்படும் — 18 வயதில் 50% பிறகு ஒவ்வொரு ஆண்டும் அதோடு 10% கூடுதலாக 23 வயதுவரை.
- ☐ ஒன்றுவிட்ட அடுத்த குழந்தைக்கு (15 வயதுக்குட்பட்டவர்) நியமன வசதி.

விண்ணப்ப பாரங்களுக்கு ஏதேனும் யூனிட் ட்ரஸ்ட் காரியாலயம், முக்கிய பிரதிநிதி அல்லது ஏஜெண்டுகளையோ அணுகவும்.



**யூனிட் டிரஸ்ட் ஆஃப் இந்தியா**
உங்கள் ஒளிமயமான எதிர்காலத்திற்காக

**CHILDREN'S COLLEGE AND CAREER FUND**
UNIT PLAN-93

ஏனெனில் உங்கள் குழந்தைக்கு நீங்கள் கடமைப்பட்டிருக்கிறீர்கள்.

**தி ட் ட ம்   து வ ங் கி ய   தே தி :   ஜூ லை   1 2 ,   1 9 9 3**

மண்டல அலுவலகம்: 29, இராஜாஜி சாலை, சென்னை 600 001. போன்: 517101
கிளை அலுவலகங்கள்: • கோயம்புத்தூர். போன்: 210399 • சென்னை. போன்: 517101, 517190 • மதுரை. போன்: 38186. • திருச்சி. போன்: 32619

UTI 57 93 TM R

அக்டோபர் 93 | ஸ்ரீமுக-ஐப்பசி | மலர் : 46 | இதழ் : 6

# அமுதசுரபி

எங்கள் தமிழ்மொழி எங்கள் தமிழ்மொழி
என்றென்றும் வாழியவே - பாரதியார்



● விலை ரூ.5/- ● ஆண்டுச் சந்தா ரூ.60/- ● பதிப்பாளர் : ஏ.வி.எஸ்.ராஜா ● கௌரவ இலக்கிய ஆலோசகர் : என்.வி. சுப்பிரமணியன் ஐ.ஆர்.டி.எஸ்.
● ஆசிரியர் : கலைமாமணி விக்கிரமன் ● இதழ் ஆப்செட் அமைப்பு : சிவகுமார்
● மேலட்டையில் : பேபி ஷாம்லியின் பிள்ளைக்கனியமுதத் தோற்றங்கள். படம் : யோகா

# நலம் காண நன்னாளில் சேரனின் நல்வாழ்த்துக்கள்!

**புதிய சீட்டு குரூப்புகள் ஆரம்பம்!**

| வ.எண் | தவணையும். மாதமும் | சீட்டின் மதிப்பு |
|---|---|---|
| 1 | 500 × 50<br>1,000 × 25<br>1,250 × 20 | 25,000 |
| 2 | 1,000 × 50<br>2,000 × 25<br>2,500 × 20 | 50,000 |
| 3 | 2,000 × 50<br>4,000 × 25<br>5,000 × 20 | 1,00,000 |
| 4 | 8,000 × 25<br>10,000 × 20<br>5,000 × 40 | 2,00,000 |
| 5 | 7,500 × 40<br>10,000 × 30 | 3,00,000 |
| 6 | 20,000 × 25 | 5,00,000 |
| 7 | 10,000 × 50<br>20,000 × 50<br>40,000 × 25 | 10,00,000 |

**அறிமுகம்செய்வோருக்கும் உறுப்பினர்களுக்கும் அதிர்ஷ்டப் பரிசுகள்! 1.10.93 முதல் 25.10.93 வரை!**

நீங்கள் தொட்டதெல்லாம் துலங்கப்போகும் விஜயதசமி நன்னாளும் வந்து விட்டது ! இவ்வினிய வேளையில் சேரன் சிட்பண்ட்ஸில் புதியதொரு சீட்டுக்கணக்கைத் தொடங்கி உங்கள் நல்வாழ்வை மங்களகரமாக ஆரம்பித்திடுங்கள்.

அடுக்குமாடிக் கட்டிடங்கள், வணிகமையங்கள், உயிர்காக்கும் மருந்துகள் உற்பத்தி, ரேடியேட்டர் & ஆயில் கூலர், தேயிலை, டெக்ஸ்டைல்ஸ், கல்விநிலையங்கள், பைனான்ஸ் முதலிய துறைகளில் ஈடுபட்டு மாபெரும் வெற்றி பெற்ற சேரன் குரூப்பின் ஓர் அங்கம்தான் சேரன் சிட்பண்டஸ் (பி) லிமிடெட்.

நம்பிக்கை, பரிபூரணப் பாதுகாப்பு, நற்சேவை - இம்மூன்றும்தான் சேரன் சிட்பண்ட்ஸ் (பி) லிமிடெட் என்ற பாரம்பரியம் மிக்க சீட்டு நிறுவனத்தின் தாரக மந்திரம். விஜயதசமி விழாவை முன்னிட்டு வியக்க வைக்கும் பல சீட்டுத் திட்டங்களும் பரவசமூட்டும் பல பரிசுகளும் உங்களுக்கென காத்திருக்கின்றன ! நீங்கள் விரைந்து செயல்பட இதுவே தருணம்.

பதிவு மற்றும் தலைமை அலுவலகம் :

**சேரன் சிட் பண்ட்ஸ் (பி) லிமிடெட்**

'சேரன் டவர்ஸ்', 78-85, அரசு கலைக்கல்லூரி சாலை,
கோயமுத்தூர் - 641 018. போன் : 216197, 217658, 217690

விபரங்களுக்கு :-

- சென்னை : எண் 15, 3வது மாடி ராஜா அண்ணாமலை பில்டிங்ஸ், 19, மார்ஷல்ஸ் ரோடு, போன் : 8273538, 8277965
- மதுரை : 3வது மாடி, K.J.R. காம்ப்ளக்ஸ், 16, வடக்கு வெளி வீதி, போன் : 37276
- திருச்சி : 'ஸ்ரீ காம்ப்ளக்ஸ்' எண் : 2D பிளாக், தரை தளம், 18 & 21, மதுரை ரோடு, போன் : 48210 (PP)
- ஈரோடு : திருக்குமரன் பில்டிங்ஸ், 11-F, மேட்டூர் ரோடு, போன் : 77636
- திருப்பூர் : முதல் மாடி, பிரிமியர் பிளாஸா, குமரன் ரோடு போன் : 25000
- சேலம் : கனகராம் காம்ப்ளக்ஸ், எண் : 80, J.K. செர்ரி ரோடு, ஃபாரஸ்ட் ஆபீஸ் எதிரில்

# அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டி 1993

வெல்வெட் ஷாம்பு நிறுவனத்தாரும் 'அமுதசுரபி' வெளியீட்டாளர்கள் ஸ்ரீராம் டிரஸ்டும் இணைந்து அளிக்கும் இலக்கியச் செல்வர் அமரர் சின்னி கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டி – மொத்தப் பரிசு ரூ.7,000/-

டிசம்பர் 90ல் நடைபெற்ற ஸ்ரீராம் டிரஸ்ட் - சுஜாதா பிலிம்ஸ் லிட். இலக்கியப் பரிசளிப்பு விழாவில், வெல்வெட் ஷாம்பு நிறுவனத்தின் தலைவர் ஸி.கே. ராஜ்குமார் சிறந்த சிறுகதைகளுக்குப் பரிசளிப்பதாக அறிவித்தபடி அமுதசுரபி - வெல்வெட் ஷாம்பு நிறுவனம் இணைந்தளிக்கும் சிறுகதைப் போட்டியை இந்த ஆண்டும் அறிவிப்பதில் மகிழ்ச்சியடைகிறோம்.

| | |
|---|---|
| முதல் பரிசு | ரூ.3000/- |
| இரண்டாம் பரிசு | ரூ.2000/- |
| மூன்றாம் பரிசு | ரூ.1000/- |

தேர்ந்தெடுக்கப்படும் 10 சிறுகதைகளுக்கு ரூ.100 வீதம் ரூ.1000.

**நிபந்தனைகள் :**

1. இந்தச் சிறுகதைப் போட்டியில் அனைவரும் கலந்து கொள்ளலாம். ஒருவரே எத்தனை கதைகள் வேண்டுமானாலும் அனுப்பலாம்.
2. கதை, 'அமுதசுரபி'யில் ஐந்து பக்கங்களுக்கு மேற்படாதவாறு இருத்தல் வேண்டும். (முழு வெள்ளைத்தாளில் பத்து பக்கங்களுக்கு மேற்படாமல்) சரித்திரம், சமூகம், நகைச்சுவை என எந்த வகைக் கதையையும் எழுதலாம்.
3. எழுதுபவரின் சொந்தக் கற்பனையாக இருக்க வேண்டும். மொழி பெயர்ப்பாகவோ, தழுவலாகவோ, மற்றவர்களின் சொந்த வாழ்க்கையைப் பிரதிபலிப்பனவாகவோ இருக்கலாகாது.
4. கதைகளைச் சுருக்கவும், கதைத் தலைப்புகளை மாற்றி அமைக்கவும் ஆசிரியருக்கு முழு உரிமை உண்டு.
5. பரிசு பெற்ற கதைகளின் பூரண காபி ரைட் உரிமை 'அமுதசுரபி' வெளியீட்டாளர்களைச் சாரும்.
6. முழு வெள்ளைத்தாளில் தெளிவான கையெழுத்தில், ஒரு பக்கத்தில் மட்டுமே எழுதி அனுப்ப வேண்டும். பிரசுரத்துக்குத் தேர்ந்தெடுக்கப்படாவிட்டால் கதையைத் திரும்பப் பெற கதையுடன் போதிய தபால் தலை இணைக்க வேண்டும்.
7. போட்டிக்கான சிறுகதைகள் வந்து சேர வேண்டிய கடைசித் தேதி : 20.10.93 முடிவுத் தேதி எக்காரணம் கொண்டும் மாற்றப்பட மாட்டாது.
8. போட்டி சம்பந்தமாக எந்தவிதக் கடிதப் போக்குவரத்தும் வைத்துக் கொள்ள இயலாது.
9. ஆசிரியரின் தீர்ப்பே இறுதியானது.

'அமரர் சின்னிக் கிருஷ்ணன் நினைவுச் சிறுகதைப் போட்டி 1993' என்று மேல் உறையின் மீது குறிப்பிடவும்

**சிறுகதைப் போட்டி – 1993**

**மொத்தப் பரிசு ரூ.7,000**

**முடிவுத் தேதி 20.10.93**

**சிறுகதைகள் அனுப்ப வேண்டிய முகவரி :**

**'அமுதசுரபி'**

த.பை. எண். 5043

145, லிங்கச் செட்டி தெரு,

சென்னை – 600 001.

'கர்மயோகி'

# ஏரிக்கரை



மகாராட்டிர மாநிலத்தில் ஒரு கிராமம். வானம் பார்த்த பூமி, அதற்கேயுரிய வறுமை. வறுமையின் மற்ற சின்னங்களான திருடு, படிப்பின்மை, சாராயம் காய்ச்சுதல் ஆகியவை மலிந்திருந்தன. ஆரம்பப்பள்ளி மட்டும் இருந்தது.

இராணுவத்திலிருந்து ஓய்வு பெற்றுத் தன் சொந்த கிராமத்திற்குத் திரும்பியவர், தன் கிராமத்தின் நிலையைக் கண்டு, மனம் நொந்து, தான் ஏதாவது செய்ய முடியுமா என்று கருதி, யோசனை செய்த பொழுது, யார் மூலமாகவோ அவருக்கு ஒரு கருத்து கிடைத்தது. அதை அவர் நம்பினார். கிராமம் வறட்சியால் இப்படியிருக்கிறது. நீர்வளத்திற்கு வழி ஏற்பட்டுவிட்டால் வறட்சி போய் விடும். ஆறு, ஏரி, நீர்ப்பாசன வசதியில்லாத ஊருக்கு எப்படி நீர்வளம் கிடைக்கும்? பம்ப் செட் போட்டு நீர் பாய்ச்சலாம். நீர்மட்டம் வெகு ஆழத்திலிருப்பதால் பம்ப் தண்ணீரை எடுக்காது. அவருக்கு கிடைத்த (idea) கருத்து மிக உயர்ந்தது. ஓர் உபாயத்தால் நீர்மட்டத்தை உயர்த்தலாம். அந்த உபாயம் அவருக்குக் கிடைத்தது. ஊரில் நீரோட்டம் ஓடும் சரிவின் நடுவில் ஒரு கரையை கட்டினால் மழைநீர் வழிந்து ஓடுவதைக்கரை தடுக்கும். இது ஏரிக் கரை போலிருக்கும். மழை அதிகமாக இல்லாததால் கரையால் தடுக்கப்பட்ட நீர் பூமியில் ஊறி மறைந்து போகும். பூமிக்கு மேல் ஏரியாக தங்கி நீர்ப்பாசனத்திற்கு உதவாது. உதவாது என்றாலும், கடலை நோக்கி ஓடுகின்ற நீர், கரையால் தடுக்கப்பட்டு பூமியில் ஊறுவதால், நீர்மட்டம் உயரும் என்பது தத்துவம். சுமார் 50 அல்லது 100 ஆண்டுகளாக இன்ஜினீயரிங் கல்லூரிகளில் போதிக்கப்படும் பாடம் இது. ஆசிரியர், மாணவர்கள் இதை நம்புவதில்லை. இதெல்லாம் நடக்காது. வீண் முயற்சி என்று பாடத்தோடு சொல்வார்கள். இதெல்லாம் பாடத்திற்கு சரி, நடைமுறைக்கு ஒத்து வராது என்பார்கள். எல்லா இன்ஜினீயர்களுக்கும் தெரிந்த உபாயம் இது.

ஆசிரமத்தில் இதுபோன்ற வறண்ட எஸ்டேட் ஒன்றில் கரை கட்டலாம் எனக் கருதி அன்னையைக் கேட்ட பொழுது, அன்னை சம்மதம் தெரிவித்தார். ஏராளமான செலவில் கரை கட்டினார்கள். கரையால் தண்ணீர் தேங்கவில்லை. கரைக்குக் கீழே ஒன்றும் செய்ய முடியாது என்று பரம்பரையாக விட்டுவிட்ட நிலத்தில் 300 ஏக்கர் தென்னை எழுப்பினார்கள். செழிப்பாக வருகிறது.

இராணுவ வீரர் இந்த உபாயத்தை ஏற்றுக் கொண்டார். அவரிடம் பணமில்லை. கிராமத்து மக்களைத் திரட்டினார். சேவை செய்யும்படி சொன்னார். இணைந்து ஏற்றுக் கொண்டார்கள். கரை எழுந்தது. அடுத்த மழைக் காலத்தில் தண்ணீர் ஊரைத்தாண்டி ஓடவில்லை. கரை தடுத்தது. ஊரிலுள்ள கிணறுகளில் நீர் மட்டம் உயர்ந்தது. பம்ப் போடும் அளவுக்கு உயர்ந்தது. ஓரிருவர் பம்ப் போட்டார்கள். ஓரிரு வருடங்களில் ஏராளமான பம்ப் செட் வந்தன. இறைவைப்பயிர் ஊரை வளமாக்கியது. ஒருவேளை சாப்பாடு மூன்றுவேளை சாப்பாடாயிற்று. ஆரம்பப்பள்ளி உயர்நிலைப் பள்ளியாயிற்று. திருடு நின்றது. சாராயம் காய்ச்சுவதில்லை. வளமைக்குரிய இதர எல்லா சின்னங்களும் ஏற்பட்டன. கிராமம் செழித்துவிட்டது. இதிலிருந்து நாமறிவது என்ன?

1. சேவா உணர்ச்சியிருந்தால், ஒருவர் முயன்றாலும், ஊர் ஒத்துழைக்கும்.

2. அடிப்படைக்கருத்து சரியானதாக இருந்தால், எளிய முயற்சிக்கும் பெரும் பலனுண்டு.

3. அறிஞர்கள் விலக்கும் கருத்திலும் அறிவும், பயனும் இருப்பதுண்டு.

4. சோதனை செய்யாமல், படித்தவர்களும், ஒரு நல்ல கருத்தை மறுப்பார்கள்.

5. வறுமையின் கடுமைக்கும், வளத்தின் சிறப்புக்கும் உள்ள இடைவெளி சிறியதே.

6. மனிதன் தன்னால் முடிந்ததைச்செய்து விட்டால், தெய்வம் உதவும்.

7. வழியேயில்லை எனப் பலரும் நினைத்தாலும், பலநாள் அப்படியிருந்தாலும், முயற்சிக்கும், சிந்தனைக்கும் வழி ஏற்படுவதுண்டு.

ஓர் எளிய இராணுவ வீரர் செய்த முயற்சியின் பலன் பெரிது, மனிதன் தன் வழக்கமான வாழ்க்கைப் பாட்டையை விட்டு, தெளிந்து சிறப்படையும் வழிகள் பல. அவற்றுள் சிலவற்றைக் குறிக்கின்றேன்.

- தன்னிடம் உள்ள முக்கிய குறை ஒன்றைக் கண்டு அதை விலக்குவது.

- தனக்குத் தற்சமயம் இல்லாத ஒரு நிறைவைப் பெறுதல்.

- தன் வாழ்வில் தொடர்பின்றித்தனித்தனியே இயங்கும் இரு அம்சங்களை ஒன்று சேர்த்தால், புது வாழ்வு மலரும்.

- இரு அம்சங்கள் சேர்ந்ததால் ஏற்படும் தொந்தரவை, அவற்றைப் பிரித்து விலக்குவது

- புது வாய்ப்பு வாழ்வில் உற்பத்தியாவது

- தவறான பண்பொன்றை நல்ல பண்பாக மாற்றுதல்

- இதுவரை எவர் கண்ணிலும் படாத ஒரு பெரும் நல்ல காரியத்தை கண்டு பயனடைதல்

- நம் திறமைகளைச் சேர்த்து, திரட்டி அதிகப் பலன் தருமாறு செய்வது.

- பலன்தரும் திறன் எது என்று நம் திறனை ஆராய்ந்து தெளிதல்.

- நமக்கு ஏற்கனவேயுள்ள சிறப்பான திறனை வலுப்படுத்துதல்.

அன்னையை வழிபட ஆரம்பித்தபின் மேற்சொன்ன மாறுதல்கள் தானே தம் வாழ்வில் ஏற்படுவதை அன்பர்கள் கண்டிருக்கிறார்கள். "இப்பொழுதெல்லாம், முன்போல் நீங்கள் மறுத்துப் பேசுவதில்லை" என நண்பர்கள் ஓர் அன்பரிடம் சொல்லிய பொழுதுதான், தன் வாழ்வில் ஏற்பட்ட மாறுதலை அவர் அறிவார். மறுத்துப் பேசுவதை ஒருவர் நிறுத்தினால் அவர் வாழ்வு வளம் பெறும். தான் சிறந்த உழைப்பாளி என்பதை அறியாமல், தன் தகுதிக்கு மூன்று நிலை குறைந்த வாய்ப்பை ஏற்றுக் கொண்டவருக்கு, அவர் உழைப்பின் திறனை எடுத்துச் சொல்லி, அதற்குரிய உயர்ந்த நிலையை நாட வேண்டும் என்று சொன்னதால், அதை அவர் ஏற்றுக் கொண்டதால், அவர் வாழ்வில் பெரும் மாற்றம் ஏற்பட்டது. இந்தியாவில் வேலையில்லாதவர் எண்ணிக்கை அதிகமாவதைத் தடுக்க வழியில்லை என்று நினைத்தபொழுது, இதுவரை எவரும் கருதாத தென்னை நடும் விவசாயத்தில் 10 கோடி வேலையை உற்பத்தி செய்யலாம் என்பதை ஒருவர் கண்டுபிடித்தார். அதன் பலன் நினைப்பும், நிலையும் மாறுவதாக இருக்கிறது. இரகசியம் வலிமை என்றும் கருதியவரை அது பலவீனம் என்று கருதச் சொன்னவுடன், அந்த மாற்றத்தால் அவர் தொழில் பெருகியது. SSLC முடித்து அண்ணனைப் போல் தம்பியும் குமாஸ்தாவாகப் போக முயன்ற நேரம், தற்செயலாய் மற்றொருவர் பாலிடெக்னிக்கைப் பற்றி எடுத்துச் சொல்லியதால், இன்று அவர் என்ஜினீயராகி விட்டார். மனிதன் பொதுவாக முயற்சியுடையவனில்லை. சிலர் முயற்சியால் முன்னுக்கு வருகிறார்கள். அதன் முறைகளில் சிலவற்றைக் குறிப்பிட்டேன்.

அன்னையை ஏற்றுக் கொண்டு, முயற்சியைத் தொடர்ந்தால் அடுத்த உயர்ந்த நிலையில் பெரும் பலன் கிடைக்கும். முயற்சியுடையவர், முயற்சியை முழு முயற்சியாக்கி முழுப்பலன் பெறுபவரும் ஓரிருவர் உண்டு.

முயற்சிக்கு அடுத்த கட்டம் நம்பிக்கை. முழு முயற்சியின் பலனை, நம்பிக்கையால் பொறுமையாகவும், சாந்தமாகவும் பெறலாம். 10 வருஷமாக சர்க்கார் ஆபீஸுக்கும், மார்க்கட்டுக்கும், பாக்டரிக்குமாக அலைந்து ஒருவர் பெற்ற செல்வத்தை (அரிபொருளாக) மற்றவர் பொறுமையாக இருந்த இடத்திலிருந்தே பெறுவதையும் நாம் ஏதோ ஒரு சமயம் பார்த்திருக்கிறோம். பொறுமையாக இருந்த இடத்திலேயே இருந்து சாதிக்க உழைப்பின் சாரத்தை ஒருவர் பெற்றிருக்க வேண்டும். இது மிக அரிது, என்றாலும் நம் அனுபவத்தில் உண்டு. இராஜேந்திர பிரசாத் உழைப்பாலும், தியாகத்தாலும், இறைச் செல்வத்தாலும், அரசியல் சேவையாலும் பெற்ற பதவியை, இராதா கிருஷ்ணன் மேற்சொன்ன எதுவுமின்றி பெற்றார் எனில் அவர் பெற்ற ஞானம் பெரிது.

அன்னையை ஏற்றுக் கொள்வது ஞானம். ஏற்றுக் கொண்டால் அந்த ஞானத்திற்குரிய பலன் உண்டு. நம்பிக்கையோடும், முயற்சியோடும், பொறுமையோடும் ஏற்றுக் கொண்டால், ஆன்மிகத்திலும், வாழ்விலும் பெறும் பலன்கள் பெரியவை.

முயற்சியின் ஆயிரம் உருவங்களில் ஒன்றின் பலனை விளக்கும் ஏரிக்கரையை சொல்லி இக்கட்டுரையை ஆரம்பித்தேன். முயற்சியின் முடிவு நம்பிக்கை. நம்பிக்கையின் உயர்வு பக்தி. பக்தியுள்ள நம்பிக்கை சமர்ப்பணத்தில் முடியும்.

நம் ஜீவனை அன்னைக்கு சமர்ப்பணம் செய்யும் நோக்கம் உயர்ந்தது.

உயர்ந்த அந்த நோக்கம் உடையவருக்குப் பிரார்த்தனை தேவையில்லை.

நமக்குத் தேவையான எதிர்காலத்தை அன்னை தெரிந்தெடுத்து தானே நமக்கு வழங்கும் நிலையை அது நம்முள் ஏற்படுத்தும்.

# தாராசுரம் ஐராவதேசுவரர்

தாமரைக்கண்ணன்

## இருப்பிடம்

தஞ்சாவூர் மாவட்டம் கும்பகோணத்திற்குத் தெற்கில் உள்ளது தாராசுரம் இரயில் நிலையம். கும்பகோணத்திலிருந்து தஞ்சைக்குச் செல்லும் வழியில் அரிசிலாற்றைக் கடந்து இரண்டாவது கிலோ மீட்டர் தூரத்தில் இருக்கிறது.

## பழையாறையும், தாராசுரமும்

பழையாறைப் பகுதி, கும்பகோணத்தைச் சார்ந்த பகுதி. இது வரலாற்றுக் காலத்துக்கு முற்பட்ட நனி நாகரிகச் செழிப்புடையது.

காஞ்சியைத் தலைநகராகக் கொண்டு ஆட்சி புரிந்த மகேந்திரவர்மன் காலத்தில் வாழ்ந்த திருநாவுக்கரசர். (கி.பி. 600-630) பழையாறை நகரில் கட்டப்பெற்றிருந்த 'வடதளி' கோயிலைப் பாடியுள்ளார். தற்போது, வள்ள லார் கோயில் என்றும் தருமபுரீசுவரர் கோயில் என்றும் அக்கோயில் அழைக்கப் பெறுகிறது. பழையாறையைச் சேர்ந்த பட்டீச்வரம் (திருச் சத்தி முற்றம்) சிவக்கொழுந்து ஈசுவரர் கோயி லையும் பாடியுள்ளார்.

பழையாறைப் பகுதியிலிருந்த நந்திகேச்வரம் (நந்திவனம்) எம்பெருமானையும், (அரிச் சந்திரம்) அரிஷபுரம், (அரிபுரம்) பாற்குளம், முழையூர் கோயில்களையும் திருநாவுக்கரசர் வைப்புத்தலமாகப் போற்றியுள்ளார்.



1A



திருநாவுக்கரசரின் சமகாலத்தில் வாழ்ந்த திருஞானசம்பந்தரும் பழையாறையின் பகுதி களான பட்டீச்சரம் பழசை (பழையாறை) கோயில்களை வைப்புத்தலமாகப் பாடி யுள்ளார்.

நந்திபுரவிண்ணகரான நாதன் கோயிலைத் திருமங்கை மன்னன் (கி.பி. 710-775) மங்களா சாசனம் செய்துள்ளார்.

இரண்டாம் நந்திவர்மப் பல்லவன் (கி.பி. 710-775) பழையாறையைத் தன் காவல் நகராகக் கொண்டிருந்தான். மூன்றாம் நந்திவர்மன், சோழப் பேரரசர்களான முதற் பராந்தகன் (907-53), இரண்டாம் பராந்தகன் (957 970) உத்தம சோழன் (970-85) முதலாம் இராசராசன் (985-1014) முதலாம் இராசேந்திரன் (1012-1044) முதலாம் இராசாதிராசன் (1018 54) முதலாம் குலோத்துங்கன் (1070 1120) விக்கிரம சோழன் (1118-1136) ஆகியோர் ஆட்சிக் காலங்களிலும் பழையாறை மிகச்சிறந்த தலைநகரமாக விளங் கியது. சுந்தரசோழன் (இரண்டாம் பராந்தகன்) முதல், முதலாம் இராசேந்திரன் வரை பழை யாறையையே தலைநகராகக் கொண்டு ஆண்டனர். முதலாம் இராசேந்திரன், கங்கையை வெற்றி கொண்ட பின் கங்கைகொண்ட சோழபுரத்தை உருவாக்கி அதனையே தன் தலைநகராக அமைத்துக் கொண்டான்.

சோழப் பேரரசர்கள் பலர் இங்கு முடி சூடிக் கொண்டதால், 'முடிகொண்ட சோழபுரம்' என்ற பெயரையும் பழையாறை பெற்றிருந்தது.

இரண்டாம் குலோத்துங்கன் கி.பி. 1150இல் மறைந்த பின்னர், கி.பி. 1146 முதல் இளவரச னாக இருந்து வந்த அவன் மகன் இரண்டாம் இராசராச சோழன் சோழ நாட்டுச் சக்கர வர்த்தியாகக் கங்கை கொண்ட சோழபுரத்தில் முடி புனைந்தான்.





னோடு சோழ மன்னர் மரபின் ஆட்சி முடிவுற்றது.

இவனுக்குப் பின், முதலாம் குலோத்துங்கன் ஆட்சிப் பொறுப்பினை ஏற்றான். இவனுடைய

அவனே, பழையாறையைத் தன் முதல் நகரமாக அமைத்தான். அதனால், பழையாறை 'இராசராசபுரம்' எனப் பெற்றது. இராசராசபுரமே, மருவி தற்போதுள்ள 'தாராசுரம்' ஆயிற்று.

## புதிய சோழர் மரபு

பிற்காலச் சோழர் மரபு விசயாலயன் (கி.பி. 846–881) சோழர் ஆட்சியை நிறுவியது. அம் மரபினர், வீரராசேந்திர சோழன் மகன் அதிராசேந்திர சோழன் (கி.பி. 1070) வரையில் சோழ நாட்டை ஆண்டனர்.

அதிராசேந்திரனுக்கு மகன் இல்லாததாலும், வேறு சோழ அரச இளைஞர்கள் முடிசூட்டிக் கொள்ளும் தகைமை பெறாததாலும் அவ

தாய் கங்கைகொண்ட சோழ மன்னனான முத லாம் இராசேந்திரனுடைய மகள், அம்மங்கை தேவி! தந்தை கீழைச் சாளுக்கிய மன்னனாகிய இராசராச நரேந்திரன்!

எனவே, தந்தையின் மரபை ஒட்டி இவன் கீழைச் சாளுக்கியர் மரபினன் ஆவான். ஆயி னும், இவன் பிறந்தது முதல் தன் பாட்டனாகிய முதலாம் இராசேந்திரன் அரண்மனையில், கங்கை கொண்ட சோழபுரத்திலேயே வளர்ந்து வந்தமையால் தமிழ் மொழியையே தாய் மொழியாகக் கொண்டு, தமிழ்ப் பண்பாட்டில் ஊறினன். அதனால், இவனே சோழப் பேரரச னாகப் பொறுப்பேற்று ஐம்பது ஆண்டுகள் சிறப்புடன் ஆட்சி புரிந்தான்.

இவனுடைய பெயரன், இரண்டாம் குலோத் துங்கன். இரண்டாம் குலோத்துங்கன் மகன் தான், இரண்டாம் இராசராசன். இவன் இராச ராசபுரத்தில் (பழையாறையில்) பெரிய அரண் மனையும் பெரிய கோயிலும் கட்டிச்சிறப்புடன் ஆண்டமையால், இவனுடைய வரலாற்றை நாம் அறியவேண்டியிருந்தது.

## இராசராசனும், இராசராசபுரமும்

இரண்டாம் இராசராசன் (கி.பி. 1146-1163) பதினேழு ஆண்டுகள் அரசாண்டான். இவனை யும் இவனுடைய இனிய பண்பாடுகளையும் மெய்க்கீர்த்திகள், மெய்சிலிர்க்குமாறு புகழ் கின்றன.

இவன் காக்கும் திருநாட்டின் இயல் இது வென நின்று காவல் நெறி பூண்டவன்; நெறியல் லனவற்றை நினையாதவன்; தந்தையில்லோர் தந்தையாகியும், தாயாரில்லோர் தாயாராகியும், மைந்தரில் ஒரு மைந்தராகியும், மன்னுயிர்கட்கு உயிராகியும், விழிபெற்ற பயன் என்னவும், மெய் பெற்ற அருள் என்னவும், மொழி பெற்ற பொருள் என்னவும், முகம் பெற்ற பனுவல் என்னவும், எத்துறைக்கும் இறைவன் என்னவும் வாழ்ந்து அருளாட்சி புரிந்தவன்!

தமிழிலும், வடமொழியிலும் புலமை பெற் றிருந்ததால், இவனை 'முத்தமிழுக்குந் தலை வன்' என்றும், 'இராச பண்டிதன்' என்றும் பாராட்டினர்.

இவன் பாட்டனார் விக்கிரம சோழன், இவன் தந்தை இரண்டாம் குலோத்துங்கன் ஆகி யோரின் அவைக்களப் புலவராக இருந்த கவி ராட்சசர் ஒட்டக்கூத்தப் பெருமானே இவனுக்குத் தமிழ் கற்பித்தார்.

இராசராசன், பழையாறை நகரைப் பல வகைகளிலும் சிறப்புறச் செய்து, அங்கிருந்து ஆண்டதால், அதன் பெயரை 'இராசராசபுரம்' என்று மாற்றி அமைத்தான்.

ஒட்டக்கூத்தர், 'எண்டிசைத் தேவரும் புகுதும் ராசராசபுரி' என்றும், 'செம்பொன் மாடநிரை இராசராசபுரி' என்றும் தம்முடைய தக்க யாகப் பரணியில் பாடுகிறார். 'குலோத்துங்க சோழ வளநாட்டுக் கீழ்ப் பழையாறு ஆயின இராச ராசபுரம்' என்று கல்வெட்டு கூறுகிறது. கி.பி. 1486-இல் இவ்விடம் 'இராசாசுரம்' என்று வழங்கி நாளாவட்டத்தில் 'தாராசுரம்' என வழங்கலாயிற்று.

## ஸ்ரீராசராசேச்சுரம்

சோழப் பேரரசர்களுள் மூவர் நல்லாட்சி, தமிழச் சொல்லாட்சிகளில் மேன்மை பெற்ற துடன் புகழ்மிக்க கலையாட்சியில் தங்கள் பெயரை நிலைநாட்டிச் சென்றனர். அதனால் காலத்தை வென்று அக்கலைக் கோயில் களுடன் தாங்களும் கம்பீரமாக வானளாவி நிற்கின்றனர்.

முதலில் தஞ்சையில் இராசராசேச்சுரம் எனும் பெருங்கோயிலை நிறுவினான், முதலாம் இராசராசன். இரண்டாவதாக, தன் பெயரில் கங்கை கொண்ட சோழபுரம் எனும் நகரையும் 'கங்கை கொண்ட சோழீச்சரம்' எனும் கலைக் களஞ்சியக் கோயிலையும் எடுப்பித்தான், முதலாம் இராசேந்திரன்.

மூன்றாவதாக, பழையாறை நகரின் கிழக்குப் பகுதியில் 'இராசராசேச்சுரம்' என்று தன் பெயரில் வரலாற்றுக் களஞ்சியமாகவும் சிற்பக் களஞ்சியமாகவும் அரிய கோயிலைக் கட்டி, அப் பகுதியை 'இராசராசபுரமாக' ஆக்கி னான், இரண்டாம் இராசராசன்.

## ஐராவதேசுவரர் திருக்கோயில்

இரண்டாம் இராசராசன் கட்டிய இராச ராசேச்சுரமே, தற்போது ஐராவதேசுவரர் கோயில் என வழங்கப் பெறுகிறது.

எழிலார்ந்த சிற்பங்களையும், வரலாற்றுப் பெயர்களைக் கொண்ட சிற்பங்களையும், வேறெங்கும் காண இயலாத அரிய சிற்பங் களையும் கொண்ட இத் திருக்கோயில் ஈடு இணையற்ற வரலாற்றுக் கலைக்கூடம் ஆகும்.

கோபுரம், 'ஈகை மூவேந்திரையர் திருக் கோபுரம்' என்னும் பெயருடையது. கோபுரத் தின் அடிப்பகுதியில் நான்கு புறமும் அழகிய சிற்பங்கள் இருந்துள்ளன. கூடுகளில் இருந்த அந்தச் சிற்பங்களின் பெயர்கள், கூடுகளில் பொறிக்கப் பெற்றுள்ளன. அம் மாடச் சிற்பங் களில் ஒன்றுகூட இப்போது இல்லை.

கோபுரத்தின் வடக்குப் பகுதியில் ஆதிசண் டேசுவரர், தும்புருநாரதர், வைச்ரவணன், சந்திரன், மகாசாத்தன், நாகராசா, வாயு ஆகி யோர் திருவுருவங்கள் வைக்கப் பெற்றிருந்தன.

இவற்றுள் வைச்ரவணன், வாயு ஆகியோர் உருவங்கள் எப்படி இருந்தன என்பதை நம்மால் கற்பனை செய்துகூடப் பார்க்க முடிய வில்லை.

கோபுரத்தின் மேற்குப் பகுதியில் அரிலேக தேவி, ருத்ராணி, வைஷ்ணவி, பிராமணி, வருணன், நந்திகேசுரர், பெரிய தேவர், சந்யதீத சக்தி, சாந்தி சக்தி, வித்யா சக்தி, பிரகிஷ்டா சக்தி, நிருதி சக்தி ஆகியோர் உருவங்கள் இருந்தன. மேலைப் பகுதியில் மட்டும் பெண் தெய்வங்களை அதிகமாக ஏன் வைத்தார்கள் என்பது தெரியவில்லை. தென்







பகுதியில் தட்சபிரஜாபதி, யமுனாதேவி, இரதி, மன்மதன் சிலைகளை வைத்திருந்தார்கள்.

கிழக்குப் பகுதியில் அக்னிதேவி, அகத்தியர், ஸ்ரீதேவி, கொற்றவை, தேவேந்திரன், பதுமநிதி, சுப்பிரமணியர், க்ஷேத்திரபாலர், சரசுவதி, விஸ்வகர்மா, ஈசானதேவர் ஆகியோர் சிலைகள் இருந்தன. இவற்றுள் 'அக்னி தேவனை' அக்னிதேவியாகச் சித்திரித்திருப்பது புதுமைக்கும் சுவைக்கும் உரியதாகும்.

## அழகிய பலிபீடம்

பலிபீடம், அற்புதமான வடிவமைப்பு கொண்டது. யானையும் யாளியும் அதனை

இழுப்பது போன்ற படிக்கட்டுகளுடன் அமைந்துள்ளது. பலிபீடத்தில் காணப்பெறும் விநாயகரும் அழகுக் கன்னியரும் அற்புதமான வேலைப்பாடு உடையவை.

### இராசகம்பீரன் திருமண்டபம்

இக் கோயிலைக் கட்டிய இரண்டாம் இராச ராசனுடைய சிறப்புப் பெயர்களுள் ஒன்று, இராசகம்பீரன் என்பது. இராசகம்பீரன் என்ற பெயரில் அழகிய திருமண்டபமும் அவன் கட்டினான்.

இம் மண்டபத்தில் உள்ள சிற்பங்களில் நம்மை அதிகமாகக் கவர்வது, மூன்று தலை களை உடைய 'மாதொருபங்கன்' போன்ற சிற்பமே. வலப்பக்கம் ஆண் உருவமாகவும் இடப்பக்கம் பெண் உருவமாகவும் காணப் பெறும் இந்த 'அர்த்தநாரீசுவரர்' மூன்று தலைகளிலும் கரண்டமுடியைக் கொண் டுள்ளார். மூன்று தலைகளிலும் சூரிய மண்டல ஜோதி அமைக்கப்பட்டுள்ளது. உருத்திராக்ஷ மாலை, கத்தி, கட்வாங்கம், தாமரை, பாசம், அபயம், தண்டம், கபாலம் ஆகியவை எட்டுக் கைகளிலும் உள்ள இது, ஓர் அரிய சிற்பம் ஆகும்.

நான்முகன், திருமால், சிவன் ஆகிய மும்மூர்த்திகளும் இணைந்த இச்சிற்பம் 'மகா மாயாசக்தி' என்று அறிஞர்கள் கருதுகின்றனர்.

இம் மண்டபத்தின் அழகிய தூண்களில் முக் கண்ணன் முப்புரம் எரித்த காட்சி, அறுமுகன் திருவரலாறு, திருமணக் காட்சி முதலானவை செதுக்கப் பெற்றுள்ளன. மண்டபத்தில் உள்ள மாடங்களில் அதிகாரநந்தி, கண்ணப்பர், அன்னபூரணி, கலைவாணி ஆகியோர் உள் ளனர்.

### தேவியின் திருக்கோயில்

இராசகம்பீரன் மண்டபத்திற்கு வடக்கே அன்னையின் திருக்கோயில் உள்ளது. நான்கு கைகளுடன் நின்ற நிலையில் அன்னை அருள்பாலிக்கிறாள். நுழைவாயிலில் யமுனை யும் கங்கையும் துவாரபாலிகைகளாக எழிலே உருவாக அமைந்துள்ளனர்.

### மகாமண்டபம்

இம் மண்டபத்தில் உள்ள 'போக விநாயகர்' சிலை குறிப்பிடத்தக்கது. விநாயகர் தன் மனைவியை இடப்புறத் தொடைமீது அமர வைத்துத் தம் துதிக்கையால் தேவியின் உணர்வைத் தூண்டுகிறார். தேவி அவரை ஒரு கையால் இறுகத் தழுவி, இன்னொரு கையால் விநாயகரின் உணர்வைக் கிளர்ந்தெழச் செய் கிறாள். அதனால், இதனை 'போக விநாயகர்' என்றனர். மற்றும் இங்கு நந்தி, வாயிற் காவலர், விநாயகர், முருகன் ஆகியோர் சிலை களும் உள்ளன.

### விமானத்தில் நாயன்மார்கள்

உண்ணாழிகை விமானத்தின் வெளிச் சுவரில் அறுபத்து மூன்று நாயன்மார்களின் உருவங்களும் ஒன்பது தொகை அடிகளாரின் உருவங்களும் அமைக்கப்பட்டுள்ளன. இவ் வுருவங்களின் மேல்பாகத்தில், அவர்களின் பெயர்களைப் பொறித்துள்ளனர்.

ஆய்வு அறிஞர் திரு வே. மகாதேவன் அவர்கள் அந்நாயனார் பெயர்கள் அமைக்கப் பெற்றுள்ள பாங்கினை மிகவும் அழகாகப் பிரித்துக் காட்டியுள்ளார்.

அதனை அப்படியே இங்கு காண்போம் :

"சிற்பங்களின் மேல் அமைந்த தொடர் களால் சில செய்திகள் புலனாகின்றன. கூற்றுவனார், நெடுமாறனார், கழற் சிங்கனார், புகழ்ச்சோழனார், அய் யடிகள் காடவர் கோனார் என நாயன் மாரின் பெயருடன் ஆர் விகுதி சேர்த்து வழங்கப் பெற்றுள்ளன.

"ஆண்டார் என்னும் சொல்லால் சில நாயன்மார்கள் கூறப் பெறுவர். நேசாண் டார், கோழ்ப்புலியாண்டார், செருத் துணை ஆண்டார், இடங்கழியாண்டார், கணம்புல்லாண்டார், சக்தியாண்டார், கலிக்காம ஆண்டார், கணநாதாண்டார், சிறப்புலியாண்டார், ஏயர்கோன் கலிக் காமாண்டார் எனப் பெயர் கூறப்பட்டமை யால் இதனை உணரலாம்.

"அதிபத்தர் கதை, கலிக்காமாண்டார் கதை, கணநாதாண்டார் கதை, சேரமான் பெருமாள் கதை, சிறுத்தொண்டர் கதை என்று கதை என்ற சொல்லோடிணைந்து எழுதப் பெற்றுள்ளன!"

மற்றும், சுந்தரமூர்த்தி சுவாமிகளின் வர லாற்றுச் செய்திகள் பற்றிய சிற்பங்களும், வாத வூரர் தொடர்புடைய சிற்பங்களும் கண்ணையும் கருத்தையும் கவர்கின்றன.

### சரபர் திருவுருவம்

இக் கோயிலில் காணப் பெறும் சரபர் உருவம் வலிவும் பொலிவும் வாய்ந்தது.

இரணியனை வதம் செய்த நரசிம்மர் பெரு உக்கிரத்துடன் திரிகிறார். அந்த உக்கிரத்தை அடக்க சிவபெருமான் சரப வடிவம் எடுக் கிறார். மனிதத்தலை, மிருக உடல், பறவையின் சிறகுகள் ஆகியவை கூடிய இச் சரபமூர்த்தி, எட்டுக் கைகளையுடைய நரசிம்மமூர்த்தியின் கோப வெறியை அடக்க அவரைக் கீழே தள்ளி




அவர் வயிற்றின் மீது தன் பின்கால்கள் இரண்டையும் அழுத்தமாக ஊன்றி நிற்கிறார்.

நரசிம்மரின் சங்கும் சக்கரமும் கீழே நழுவிக் கிடக்க, தன்வலிவு இழந்த அவர், சரபரை நோக்கி இரண்டு கைகளையும் கூப்பி வணங்குவது பரிதாபமாக உள்ளது. தேவர்கள் மேலிருந்து இக்காட்சியைக் காண்கின்றனர்.

உயிருள்ள சிற்பமாகச் சிற்பி இதனை வடித்துள்ளான்.

## வைணவச் சிற்பங்கள்

சிறந்த சிவன் கோயிலாகிய இக்கோயில், திருச்சுற்று மாளிகையில் இராமாயணத் தொடர்புடைய காட்சிகளும் அமைக்கப்பட்டுள்ளன. இது அக்காலத்திய நம் முன்னோர்களின் சமயப் பொறையினை நமக்கு அறிவுறுத்துகிறது. 108 சிவாசாரியர்களின் திருவுருவங்களும் அவர்களுடைய பெயர்களுடன் காணப்பெறுகின்றன.

வடக்குத் திருச்சுற்று மாளிகையும் சிற்பக் களஞ்சியமாகத் திகழ்கிறது.

## கங்காளர்

ரிஷி பத்தினிகளை மயக்கும் கங்காள மூர்த்தியும் ஆடைகள் நழுவ மயங்கி நிற்கும் பத்தினிப் பெண்டிரும் பெரிய திருவுருவங்களாக இங்கே இருந்துள்ளனர். தற்போது அந்தச் சிற்பங்கள், தஞ்சை அரண்மனையில் உள்ள கலைக்கூடத்தில் வைக்கப் பெற்றுள்ளன.

## உலகநாயகி திருக்கோயில்

இக் கோயிலுக்கு வெளியில் அன்னைக்குத் தனிக் கோயில் இருக்கிறது. அன்னையின் திருப்பெயர், உலகநாயகி. இக்கோயில் மூன்றாம் குலோத்துங்கன் காலத்ததாக இருக்கலாம்.

## வரலாற்றுச் செய்திகள்

இரண்டாம் இராசராசனால் கட்டப்பெற்ற இக்கோயிலுக்கு அவனே பல கொடைகளை அளித்துள்ளான்.

மூன்றாம் குலோத்துங்கன் பொன் தகடுகள் வேய்ந்தான்.

மாறவர்மன் வீரபாண்டியன், மாறவர்மன் ஸ்ரீவல்லபதேவன் முதலான அரசர்களும், குலோத்துங்க சோழ வளநாட்டு ஊட்டத்தூர் சபையார், சோழ மண்டலத்தைச் சேர்ந்த கண்டியூர்க் கோயில் காலிங்கராயன் முதலானோரும் கோயில் விழாக்களுக்காகவும் திருப்பணிகளுக்காகவும் பல கொடைகளை அளித்துள்ளனர்.

## நிறைவுரை

உயிருள்ள சிற்பங்களைக் கொண்ட மிகப் பெரிய இக் கலைக்கூடத்தை நாம் நேரில் சென்று கண்டு மகிழும்போது, பார்க்கும் இடமெல்லாம் இதனைக் கட்டிய இராசராசனுடைய புன்னகை பூத்த முகம் தெரிகிறது.

கவிராட்சசர் ஒட்டக்கூத்தர், நம் இராசராசன் மீது உலா எழுதி, அவைக் களப்புலவராகவும் இருந்து, இங்கே தக்கயாகப் பரணியையும் அரங்கேற்றியதால் அவரும் இங்கு உயிருடன் நடமாடுவதைப் போன்ற உணர்வையும் நாம் பெறுகிறோம்.

# வானமெல்லாம் ஆசைக்காற்றாடி

பி.வி.ஆர்.

## 17

நாராயணனால் வாக்களித்தபடி பாரதியை அழைத்துக் கொண்டு எஸ்டேட்டில் இரண்டு மூன்று நாள்கள் தங்க இயலாமல் போயிற்று. தவிர்க்க முடியாத சில வேலைகளும், ஓரிரு சந்திப்புகளும் அவனைப் பாலக்காட்டிலேயே கட்டிப்போட்டு வைத்தன. ஆனால் அவனால் வீட்டிலும் நினைத்தபடி இருக்கவோ தங்கி ஓய்வெடுக்கவோ முடியவில்லை.

பாரதிக்கு ஏமாற்றமாக இருந்தாலும் அவள் காட்டிக் கொள்ளவில்லை. அவள் அவனுக்காகக் காத்திருந்தாள்.

ஐந்தாறு நாள்களாக வீட்டில் அவளுக்குப்பல வேலைகள் இருந்து வந்தன. அத்தை முன் போல் தொட்டதெற்கெல்லாம் முகத்தில் அடிப்பதுபோலப் பேசவில்லையென்றாலும், தங்கம்மாவின் போக்கு புதுவிதமாகப் பாரதிக்குப் பட்டது.

"எந்தக் காய்களை நறுக்கணும்?" என்று அவள் கேட்டால்,

'உன் இஷ்டம்போல எதை வேணும்னாலும் நறுக்கு' என்றாள்.

'நான் சகஸ்ரம் சித்தப்பா வீட்டுக்குப் போறேன்'.

'இதை எங்கிட்ட சொல்லுவானேன்?'

'தேவகி போன் பண்ணினா. கார்ல வந்து அழைச்சுட்டுப் போறாளாம்'.

'நான் தடுத்து நிறுத்தலையே?'

'அத்திம்பேருக்கு அடை மிருதுவா இருக்கணுமா இல்லை முறுகலா?'

'நீ எப்படித் தட்டிப் போட்டாலும் அவர் திம்பார்'.

ஒருநாள் பாரதி, "அத்தே நீங்க மாறிப் போயிட்ட மாதிரிப் படறது" என்றாள்.

**ரூ.10,000ம் பரிசு பெற்ற நாவல்**

இதன் பிறகு பாரதி தங்கம்மாவிடம் தானா வலிய வந்து பேசவில்லை. எப்பவாவ ஏதானும் கேள்விகள் கேட்டால் ஓரிரு வார்த்த களில் பதில்களைக் கூறினாள்.

மொத்தத்தில் மற்றவர் அறியாமல் அவ களிடையே ஒரு மௌன யுத்தம் துவங்கியது.

மற்ற எல்லோரும் எப்போதும் போல இய பாக நடந்து கொண்டார்கள். 'பொண்ணே பொண்ணே' என்று சுபாவமாக அவ அழைப்பதை ஈசுவரன் நிறுத்தவில்லை. பாட் பழைய கதைகளைத் தொடர்ந்தாள். அவ சின்னப் பெண்ணாக இருந்தபோது ஒரு வீட்டி குட்டிச்சாத்தான் செய்த திரிசமன்கள விவரித்தாள். ஒரு தடவை மூன்று வய ஈசுவரனை அழைத்துக் கொண்டு திருப்பதி பஸ்ஸில் சென்றதையும், திரும்பி வரும்பொழு புத்தூர் அருகே விபத்து நேர்ந்ததையும் கன போல விவரித்தாள். கோந்தை அமெரிக்க வுக்குப் படிக்கச் செல்லுவதற்கு முன் அவ நமஸ்கரித்ததையும் அப்போது அவள் பொங்க பொங்க அழுததையும் கண்ணீர் மல்க கூறினாள்.

மெல்ல மெல்ல அதிகாலையில் தூங் எழுந்திருக்கும் பழக்கம் ஏற்பட்டது. இதை தங்கம்மா வாய் வார்த்தையால் பாராட்ட விட்டாலும், முகபாவனையால் திருப்தியை வெளிப்படுத்தினாள். பல் தேய்த்ததும் அவ காப்பியைத் தேடி வரவில்லை. குளித்துவிட் புடைவை மாற்றிய பிறகே சமையலறைக் வந்தாள். அவளே தன்னுடைய காப்பியையு கலந்துகொண்டாள்.

அவளுடைய நடவடிக்கைகளைக் கண் வந்த ஈசுவரன் அவளைத் தம் அறைக் வரவழைத்தார்.

"பொண்ணே, வா, ஒக்காரு".

"பரவாயில்லே அத்திம்பேர்".

"ஒக்கார்னா ஒக்காரணும். நான் பெறலை னாலும் என் புள்ளையோட பொண்டாட்டி எ பொண் மாதிரி தான்".

பாரதி உட்கார்ந்தாள்.

"ஒங்கிட்ட ஒரு மாத்தம் தெரியறது".

"இல்லையே அத்திம்பேர். நான் எப்பவும் போலத்தான் இருக்கேன்".

"ஒம்பது மணி வரைக்கும் தூங்கறியா?"

"இல்லை".

"குளிச்சுட்டு நீயே ஒன் காப்பியைக் கலந்துக் கறாய்".

"அது...அது..."

பாரதி பதில் சொல்லவில்லை.

"மின்ன மாதிரி தங்கமும் ஒன்னை இஷ்டப் படிக் கரிச்சுக் கொட்றதில்லை".

"அத்தை கரிச்சுக் கொட்டினாக்கூடத் தாங்கிக்கலாம் போலிருக்கு, அத்திம்பேர்! ஆனா வாயைத் திறக்காமலே இருக்கா... நான் என்ன தப்பு செய்ஞ்சேன்னு எனக்கேத் தெரி யலை".

"வந்த புதுசுல நோக்கு ஒண்ணும் தெரியாம இருந்தது. அத்தை, அத்திம்பேர் தானேன்னு கொஞ்சம் அசிரத்தையா இருந்தே... அப்ப, 'நான் அத்தை அல்ல. ஒன் 'மாமியார்'னு சொல்ல தங்கத்துக்கு சான்ஸ் கிடைத்தது... இதெல்லாம் இருக்கட்டும். இப்ப எப்படி எல்லார்ட்டேயும் சௌஜன்யமா இருக்க உன்னாலக் கழியறது?"

"எங்கிட்ட எல்லாரும் அன்பா நடந்து கொள்றா அத்திம்பேர். நீங்க, அவர், சகஸ்ரம் சித்தப்பா, கமலம், ராஜி, சித்திகள், பாட்டி, தாத்தா எல்லோரும் என்னை ஒரு பொண்ணா மதிச்சு கனிவா நடத்தறா. இவங்களெல்லாம் இப்படி இருக்கறப்ப, நான் என்னோட அதிருப்தியிலே, அலட்சியமா இருக்கலாமா, அத்திம்பேர்? அது அநாகரிகமில்லையா? அன்கல்ச்சர்ட் இல்லையா? எனக்குச் சின்ன வயசிலிருந்தே ஒண்ணு ரெண்டு கெட்ட சுபாவங்கள் உண்டு..."

"நானும் தெரிஞ்சுக்கறேனே?"

"என்னை மதிச்சா நானும் மதிப்பேன். என்னைத் தூக்கி எறியப் பார்த்தா நானும் தூக்கி எறிவேன்".

"இது கெட்ட குணம்னு ஆரு சொன்னா? நமக்குன்னு ஒரு இண்டிவிஜிவாலிட்டி- தனித் தன்மைன்னு சொல்லலாம். இல்லியா - அதை விட்டுக் கொடுக்கறது கோழைத்தனம். உம் அப்புறம் வேற என்ன கெட்ட குணம்?"

"பிடிவாதம். நான் பிடிச்ச முயலுக்கு மூணு காலுனு அடிச்சுச் சொல்ற அளவுக்குப் பிடி வாதம். ஜன்ம குணம். இதுக்காக அம்மா என்னை கொஞ்சமாவா அடிச்சிருக்கா, கிள்ளியிருக்கா! காலேஜ்லகூட என் பிடிவாதம் காரணமா ஒரு தடவை சஸ்பெண்ட் பண்ணி யிருக்கா".

"நல்ல காரியங்களுக்காகப் பிடிவாதம் பிடிக்கறது குத்தமில்லை பொண்ணே... ஆமாம், இப்படிப் பிடிவாதம் உள்ள நீ எப்படி கல்யாண விஷயத்திலே கோட்டை விட்டே?"

"மொதல் காரணம் அப்பா - ரெண்டாம் காரணம் உங்க புள்ளை..."

"மூணாவது நான்".

"நாலாவது தங்கம்!" என்றார் ஈசுவரன்.

"ஆமாம். ஆனா அப்பாவோட மனசு கதறினப்ப என்னாலே பிடிவாதமா இருக்க முடியலே".

"பி.எச்.டி. விஷயத்திலே ஒன் பிடிவாதம் இப்ப எந்த அளவிலே இருக்கு?"

"பரமபத சோபான படம் மாதிரி அத்திம் பேர்".

"மனசிலாகலை".

"டில்லி, எம்ஃபில் இதெல்லாம் நினை வுக்கு வர்றப்ப ஏணி வழியா உச்சாணிக் கொம்புக்கே போயிடறேன். அவரையும் இந்தக் குடும்பத்தையும் நினைக்கறப்பவும் கைலா சத்தைப் பத்தி நினைக்கறப்பவும் தேவகி பேசிய பேச்சு காதிலே ஒலிக்கறப்பவும் திபுதிபுன்னு பாம்பு வழியா இறங்கிடறேன்".

ஈசுவரன் வாய்விட்டுச் சிரித்தார்.

"மின்னால தேவகி என்ன சொன்னாங் கறதைச் சொல்லு".

"நான் பி.எச்.டி. பண்றது என்னோட லட்சியம்னு சொன்னேன். அது லட்சியம் இல்லே, வெறும் ஆசைதான்னு தேவகி சொன்னா. இது என்னைத் திங்க் பண்ண வைச்சது".

"ஏன் அப்படிச் சொன்னா அவ? பி.எச்.டிங்கறது ஒரு புட்பால் கோல் போஸ்ட். நீ அறிவு, படிப்புங்கற பந்துகளை வைச்சுண்டு... அந்த கோலுக்கு ஓடணும்னு துடிக்கறே.." "கோல் போடறது லட்சியம் இல்லையாம்".

"காரணம்?"

"ஆசைக்காக, திருப்திக்காக எதையாவது ஒண்ணை அடைஞ்சா அது சுயநலம் காரண மாகத்தான் இருக்குமாம். பி.எச்.டியை முடிச் சுட்டு டீச்சிங் லைனுக்குப் போய் என்னால நூத்துக் கணக்கான பேருக்கு உபயோகமா இருக்கணும்னு நான் நினைச்சிருந்தா ஒரு லட்சியம், ஒரு பர்ப்பஸ் இருக்குமாம். இதை நான் ஒரு லட்சியவாதி மூலமாத்தான் கத்துக்க

முடியும்னு அவள் என்னை கைலாசம் வீட்டுக்கு அழைச்சுட்டுப்போனா!"

"பேஷ் பேஷ்... சுவாரசியமா இருக்கே. இதை ஏன் எங்கிட்ட நீ மின்னாலேயே சொல்லலை?"

"அன்னிக்கு ராத்திரிதான் அத்தையை பாம்பு கடிச்சுது. அதுக்கு அப்றம் சொல்ல சந்தர்ப்பம் கெடைக்கலே".

"கைலாசத்தை நேக்கு நந்நாத் தெரியும். அவன் ஒரு ஜீனியஸ்... பாரஸ்ட்ரியில மன்னன், இந்நைக்கும், ஆப்பிரிக்கா அமெரிக்காவில் இருந்தெல்லாம் லெக்சர் பண்ண அழைப்பு வர்றது. காங்கோ காட்லே மூணுமாசம் இருந்திருக்கான். இப்ப என்ன சேயறான் தெரியுமா?"

"தெரியும்".

"ஆனா இந்த லட்சியம் அவனுக்குப் படிக்கறப்பவோ வேலையில இருக்கறப்பவோ தீர்ச்சையா இருந்திருக்காது. இருந்திருந்தா அந்நைக்கே இந்நைக்குச் சேயறதைத் தொடங்கி இருப்பன். காட்ல இருக்கறப்ப காட்டுவாசிகளோட நிலைமையைப் பார்க்கறப்ப மனசில ஏதோ ஒண்ணு தட்டியிருக்கணும். இல்லாட்டா ஆராவது அவாளுக்கு நடுவிலதான் வாழ்வேன்னு வாழ்வாளா? அவன் ஒய்ஃப் மீனாட்சி அவனைவிடப் பெரிய ஐடியலிஸ்ட்".

"இவங்களை நினைச்சுப் பார்க்கறப்ப மனசு தளர்ந்து போறது..."

"பாம்பு வழியா எறங்கியுடறாய் அல்லவா?"

"ஆமாம்".

"ஆருக்கு எப்ப என்ன லட்சியம் மனசில ஞானோதயம் மாதிரி பொறக்கும்னு ஆராலும் சொல்ல முடியாது. பொண்ணே... ஒனக்கு ஒண்ணு தெரியுமா?"

"என்ன அத்திம்பேர்?"

"நம்ப களத்தில ஏழெட்டு ஏக்கர் நெலத்தில கோந்தை மரச்சீனி போட்டிருக்கான்".

"டாபியோக்கா".

"கரெக்ட். வர்ஷா வர்ஷம் பத்து இருபதாயிரத்துக்கு மேல கெடக்கறது. அத்தறை ரூபாயையும் என்ன சேயறான் தெரியுமா?

"தெரியாது, அத்திம்பேர்".

"களத்துக்கு அஞ்சு கிலோ மீட்டர் தூரத்தில வயசான அநாதைகள் சௌகரியமா இருக்க ஒருத்தன் நிலம் கொடுத்தான். இன்னொருத்தன் கட்டடம் கட்டிக் கொடுத்தான். பல பேர் டொனேஷன் கொடுக்கறா. கோந்தை, அவாளோட வைத்தியச் செலவுக்குன்னு இந்த



# அட பாவி சூரியனே!

## கொல்லங்குடி உடையப்பன்

அட, பாவி சூரியனே

அடங்காத சினமடைய
யாருன்னை என்ன சொன்னா?
அடுப்பெரியும் சுடுநெருப்பை
அள்ளியெங்கள் மீதெரிய
யாமென்ன கெடுதல் செய்தோம்.

தினமும்நீ விழிக்கையிலே
தெய்வமென நினை வணங்கும்
சிந்தனைக்குத் தண்ட னையோ?
மனை வாசல் நீர் தெளித்துக்
கோலமிட்டு வரவேற்றோம்,
வாரியனல் வீசு தற்கோ!

காரிருளை விரட்டி விட்டாய்
கடல் குளித்து நீ எழுந்தாய்
கருணையுடன் காப்பாய் என்றே
ஊருன்னைப் போற்றுங் கால்
உன்மத்தம் ஏன் கொண்டாய்
உனையுமிங்கே யார் கெடுத்தார்?

நீர் சுரந்த வான மெல்லாம்
தீயெரிந்து காய்ந்ததுவால்
வேர் குடிக்க நீரு மின்றி
வேர்வையே தினங்குடித்து
விதவையென நிலமகளும்
வெளிரியந்தோ தளர்ந்து விட்டாள்!

காய்ந்தெரிக்கும் கதிரவனே!
கருக்கியிந்த வானிடித்துத்
கடல் குடித்த நீரை யெல்லாம்
வாய் திறந்து கக்கவைப்பாய்
வணங்கிநிற்கும் வையகந்தான்
வதங்காமல் வாழ்வி ப்பாயே!

மரச்சீனி வித்த பணத்தை நாலஞ்சு கொல்லமாக் கொடுத்து வர்றான். ஆராவது செத்துப் போயிட்டா, இவனுக்குத்தான் மின்னால சொல்லி அனுப்புவா. அநாதை ஆச்சே? கொள்ளி போட ஆர் இருக்கா? இவன் சவத்தையும் தலைமாட்ல தூக்கி வைச்சுண்டு நடப்பன். மசானத்திலே கொள்ளியும் போடுவன்!

"எனக்கு இதெல்லாம் தெரியவே தெரியாது, அத்திம்பேர்."

"எனக்கே போன வர்ஷம்தான் தெரியும். அதுவும் எப்படி? ஆடிட்டர் வந்து சொல்லி, 'ஒங்க புள்ளை மரச்சீனி வரவைக் காட்டிட்டு சொந்தச் செலவுக்கு எடுத்துண்டதா கணக்குக் காட்டறான் சார்'னு" சொன்னான். நான் ஒடனே விசாரிக்கலை. அவன் இல்லாதப்ப களத்துக்குப் போனேன். அங்கே ஆசிரமத்தை நடத்தறவா இரண்டு பேர் கோந்தையைக் காண வந்திருந்தா. அப்ப அவா சொன்னா."

பாரதி திகைத்துப் போய் ஈசுவரனைப் பார்த்தாள்.

"இப்ப என்ன சொல்றாய், பொண்ணே? இது ஆசையா, லட்சியமா? அவன் இப்படிச் செயறது அவனுக்கும், எனக்கும்தான் தெரியும். நாங்க வர்ஷா வர்ஷம் எங்க லாபத்தைப் பங்கு போட்டுக்கறப்ப மரச்சீனிப் பணத்தை நாங்க எடுத்துண்டாச்சுன்னு எழுதிப்போம்".

"பி.எச்.டி. என்னோட ஆசைதான் என்கிறதை ஒத்துக்கறேன் அத்திம்பேர், ஆனா இந்த ஆசை நிறைவேறணும்ங்கற பேராசையும் எங்கிட்ட இருக்கே!"



"இதை அடக்க ட்ரை பண்ணு! ஒன் வாழ்க்கை அமோகமாக இருக்கும் பொண்ணே!"

"அடக்க முடியாமப் போச்சுன்னா!"

"கோந்தைகிட்ட டிஸ்கஸ் பண்றேன். நீயும் பேசு. ஒரு மாசத்துக்குள்ள ஒன்னோட முடிவைச் சொல்லு".

"உங்களுக்குப் பிடிக்காத முடிவா இருந்தா?"

"இந்தக் குடும்பத்துக்கு சகிச்சுக்கற சாமர்த்தியம் உண்டு".

"நான் வரேன் அத்திம்பேர்".

"ஒன் ஆசைதான் ஒன் லைஃப்ல முக்கியம்னு நீ தீர்மானிச்சா நாங்களே ஸீட் வாங்கித் தர்றோம்!"

வியப்புடன் பாரதி அவரைப் பார்க்க, அவர் அவளுடைய கண்களைச் சந்திக்காமல் எங்கேயோ பார்த்துக் கொண்டிருந்தார்.

பாரதி மாடிக்குச் சென்றாள்.

தான் ஒரு சுயநலக்காரி என்ற எண்ணம் அவளையும் மீறி எழுந்து அறைந்தது. அதே சமயம் நாராயணன் உதவி மூலம் உதவி பெறும் அநாதைகளையும், அந்த ஆசிரமத்தையும் பார்க்க வேண்டும் என்ற ஆசையும் பிறந்தது.

ஈசுவரன் பாரதி வெளியேறியதும் அறையை விட்டு வெளியேறி ரேழிக்கு வந்தார்.

தங்கம்மா நின்று கொண்டிருந்தாள்.

"என்ன தங்கம் இங்க நிக்கறாய்? உள்ளே வா".

மீண்டும் அவர் நாற்காலியில் உட்கார, எதிரே தங்கம்மா நின்றாள்.

"உம் சொல்லு".

"ரெண்டு பேரும் என்ன பேசிண்டிருந்தேள்?"

"விசேஷமா ஒண்ணுமில்லை தங்கம்".

"கட்டின பொண்டாட்டிக்கிட்டக் கூடச் சொல்லப்படாத விஷயமாக்கும்".

"ஒனக்குத் தெரியாம இந்தாத்திலே ஏதாவது நடந்திருக்கா? தீர்ச்சையா கொஞ்ச நாள்லே உனக்கு நானே சொல்றேன்".

"ஓ, அப்படியா?"

"அப்படித்தான்".

"நான் அவகிட்ட கேக்க ரொம்ப நேரமாகாது".

"அப்ப எந்துக்கு இப்ப என் மென்னியைப் பிடிக்கிறாய்?"

"அந்நைக்கு பாம்பு கடிச்சுதே, அந்நைக்கே நான் போயிருக்கணும்".

"இதப்பாரு தங்கம்... பாம்பு கடிச்சது ஒரு கண்டம். அதைத் தாண்டறதும் தாண்டாததும் நம்ப கையிலே இல்லை".

"நேத்தைக்கு வந்தவளைக் காட்டிலும் நான் இளப்பமாப் போயிட்டேன், இல்லையா?"

"இல்லை".

"அப்ப என்னென்னு சொல்லுங்கோ"

"சரி சொல்லி யுடறேன், ஆனா நீ அவகிட்ட மூச்சு விடப்படாது".

"கண்டிஷன் போட்டா. நீங்க சொல்லண் டாம்".

"அவ ரெண்டு ரெண்டரைக் கொல்லம், நம்மாத்ல இருக்க மாட்டா".

"எங்க போறா?"

"முக்காலே மூணு வீசமும் மதிராசியாத் தான் இருக்கும்".

"எந்துக்கு?"

"படிக்க".

"மின்ன சொன்னாளே, பி.எச்.டி, அதுவா?"

"அதேதான்".

"நீங்க சம்மதிச்சேளா?"

"இல்லை".

"கோந்தை?"

"இல்லை!"

"அப்ப ஆர் சம்மதத்தோட அவ இந்த ஆத்தைவிட்டுப் போறா? சம்மதம் இல்லாதைக்கு இத்தறை கொழுப்பா?"

"கொழுப்பும் இல்லை. கொலஸ்ட்ராலும் இல்லை. அவமேல படிக்க ஆசைப் படறா. அந்த ஆசையை அடக்க நான் ட்ரை பண்றேன். நல்ல தனமாச் சொன்னா வழிக்கு வருவள். நாம அதட்டி மிரட்டிப் பேசினா, போடா, போன்னு போவள். எப்படிப் பேசணும்னு நீ விசாரிக்கறாய், தங்கம்?"

தங்கம்மா உடனே பதில் சொல்லவில்லை.

ஓரிரு நிமிட மௌனத்துக்குப் பிறகு, "அப்ப நம்ப பிள்ளை பொண்டாட்டி இல்லாதைக்கு ரெண்டு ரெண்டரை வர்ஷம் தள்ளணுமா?" என்றாள்.

"எத்தறையோ இடங்கள்லே கல்யாணத் துக்கு அப்றம் பொண்டாட்டிமார் ஆம்படையான் களோட ஒரு வர்ஷம் ரெண்டு வர்ஷம் வாழாம இருக்கா. நம்ப சாத்தப்புரம் விசுவனாதன் புள்ளை மணி என்ன சேதான்? தாலியைக் கட்டிப்புட்டு ஸ்டேட்ஸ் போனான். வர்ஷம் ரெண் டாறது. அவளுக்கு இன்னம் விஸா கெடைச் சுட்டில்லை. இதுக்கு என்ன சொல்றாய்?"

"நீங்க சொல்ற மணிக்கு ஆறுமாசக் குழந்தை இருக்கு, இது தெரியுமா ஒங்களுக்கு? இந்த ரெண்டு வர்ஷத்தில அவன் மூணு பிராவசியம் வந்தாச்சு".

"இப்ப குழந்தை பெத்துக்கறதா பெரிய காரியம்...? எந்துக்கு நீயும் நானும் தர்க்கம் பண்ணனும், தங்கம்? கோந்தை என்ன சொல்றான்னு பார்ப்போமே?"

"கோந்தை என்ன வேணம்னாலும் சொல் லிண்டு போகட்டும். அவ இந்த வீட்டுப் படியை விட்டு எறங்கி மெட்ராசுக்கு வண்டி ஏறினா அம்புட்டுதான். அப்றம் இந்தாத்துப் படியில கால் வைக்க மாட்டா".

"அவ ஒன் அண்ணா பொண்"

"அது தாலி ஏர்றதுக்கு மின்னால! இப்ப என் மாட்டுப் பெண். குடும்பம் நடத்த வந்த பெண்".

"அப்படியே அவ படி இறங்கிப் போனா என்ன சேவாய்? அவளைப் படி ஏத்த மாட்டாய்? இப்படிச் சேதா, அப்ப நம்ப கோந்தை கதி என்னவாகும்?"



"ஒரு டைவொர்ஸ் நடக்கும். இன்னொரு கல்யாணத்துக்கு மேளம் கொட்டும்".

"நீ இப்படியெல்லாம் பேசுவாய்னு தெரிஞ்சு தான் எல்லாத்தையும் அப்ரமாச் சொல் றேன்னேன்... நான், சகஸ்ரம், தேவகின்னு எல்லாரும் நல்லதனமாப் பேசி அவ ஆசைங்கற விஷத்தைக் கொஞ்சம் கொஞ்சமா எறக்கப் பாக்கறோம். நீ குறுக்கே வந்து காரியத்தைக் கெடுக்காதே!"

"நல்லதெல்லாம் நான் சேயறப்ப, எல்லார் வாயிலேயும் கொழக்கட்டை அடைச்சுண் டிருக்கும். நான் குறுக்கே வரேனாம், கெடுக்க றேனாம்".

தங்கம் வெளியேறினாள்.

அவளை ஈசுவரனால் புரிந்து கொள்ள முடிந்தது. அவள் அவர் மீதோ, மருமகள் மீதோ கோபப்பட்டுப் பேசவில்லை. அவ ளுடைய பிள்ளையை நேற்று வந்த ஒருத்தி பறித்துக் கொண்டு போய் விட்டாளோ என்ற பயத்திலும் பீதியிலும் கத்துகிறாள். இப்போது பாரதி வெளியேறிப் போய்ப் படிப்பதையும் எதிர்க்கிறாள். டிவோர்ஸ் என்று பிதற்று கிறாள்.

பிள்ளைக்கு ஒரு மனைவி வேண்டும். தான் மாமியாராக இருக்க வேண்டும். ஆனால் பிள்ளை தனக்கு மட்டுமே சொந்தம். ஒவ் வொரு தாயாரின் மனதிலும் பிள்ளையின் மணவாழ்க்கையின் ஆரம்ப காலத்தில் இப்படிப் பட்ட விந்தையான எண்ணங்கள் ஏன் தோன்று கின்றன?

ஈசுவரன் பழைய நாள்களை நினைவு கூர்ந் தார். ஊருக்கெல்லாம் நல்லவளாக இருந்த அவளுடைய தாயார் மருமகள் தங்கத்தை மட்டும் எதிரியாகக் கருதினாள்.

அவருக்குச் சிரிப்பதா அழுவதா என்று தெரியவில்லை.

# 18

ஙங்கவரத்தில் –

சந்திரமௌலி சாப்பிட்டுவிட்டு அன்றைய 'இந்து' நாளிதழை மீண்டும் விவரமாகப் படிக்க சாய்வு நாற்காலியில் உட்கார்ந்தார். அந்தச் சமயம் பார்த்து, தபால்காரர் ஒரு கடிதத்தைத் திண்ணையில் போட்டுவிட்டுச் சைக்கிளில் சென்றார். ஏற்கனவே தபால்காரர் 'போஸ்ட்' என்று குரல் கொடுத்திருந்ததால் மௌலி மெல்ல எழுந்தார்.

"நான் போய் எடுத்து வரேன். பாரதிதான் போட்டிருப்பா" என்றாள் சுசீலா.

சுசீலா ஏமாற்றத்துடன் கடிதத்துடன் திரும்பி வந்தாள்.

"உங்களுக்குத்தான். ஈச்சா எழுதியிருக்கி றார்".

"கையெழுத்திலேந்து கண்டு பிடிச்சியா?" கூறிக்கொண்டே அவளிடமிருந்து கடிதத்தை வாங்கினார் மௌலி.

"இன்லண்ட் பின்னாடிதான் பி.என். ஈசுவரன், பள்ளிப்புறம், பாலக்காடு சிக்ஸ்னு கொட்டை கொட்டையா எழுதி இருக்கே?"

அவளுடைய வார்த்தைகளைக் காதில் வாங்கிக் கொள்ளாமல், மௌலி கடிதத்தை உடைத்துப் படித்தார். அவருக்குத்திடுக்கிட்டது.

"என்ன எழுதி இருக்கார் உங்க தங்கை புருஷன்?"

"தங்கை புருஷன் எழுதலே, சுசீலா".

"பின்னே?"

"சம்பந்தி".

"என்னவாம்?"

"நான் இன்னிக்கு பாலக்காடு புறப்படறேன். ரெண்டு நாள்லே திரும்பறேன்".

"என்ன விஷயம் அதைச் சொல்லுங்க".

"திரும்பி வந்தப்புறம் சொல்றேன்".

"பாரதியைப் பத்தியா?"

"ஆமாம்".

"என்ன நடந்திருக்கு?"

"அதான் வந்து சொல்றேன்னேனே?"

"அவ உங்களுக்கு மட்டும் பெண் இல்லே, எனக்கும் தான். அந்த லெட்டரை இப்படிக் கொடுங்கோ".

"நீ மனசு கஷ்டப்படுவே சுசீலா".

"பாரதியாலே நான் என்னிக்கு மனசு கஷ்டப் படாம இருந்திருக்கேன்? அதைத் தாங்கோ".

"சரி, உன் இஷ்டம்".

சுசீலா கடிதத்தைப் படித்தாள். ஆங்கிலத் தில் இருந்தது.

ஒரு தடவைக்கு இரண்டு தடவைகளாகப் படித்த பிறகு –

"நம்ப பெண்ணுக்கு புத்தி ஏன் இப்படிப் போறது?"

"எல்லாம் உன்னால்தான்".

"அது சரி... இப்ப இதுக்கு நான்தான் காரணம்ங்கறீங்களா?"

"முழுக்காரணம்னு இல்லைன்னாலும் நீயும் அவளுடைய இந்தப் போக்குக்குக் காரணமா இருந்திருக்கே!"

"எப்படி? சொல்லுங்கோ, கேட்கலாம்".

"தனக்கு பாரதியைப் பண்ணிக்கொள்ள இஷ்டமில்லை, தன்னால் அவளுக்கு சுகமான வாழ்க்கை கிடைக்காதுன்னெல்லாம் அன்னிக்கு இங்க வந்தப்ப நாராயணன் சொன்னான். அதுக்கு ஈச்சா அவ சம்மதிச்சா நீ சரின்னு 'சொல்லுவியா'ன்னு அவன்கிட்டக் கேட்டார். நாம என்ன செய்ஞ்சோம்? பாரதியை இழுத்துண்டு வந்து அவகிட்டத் தனியாப் பேசினோம். அப்ப நீ என்ன சொன்னே? சரின்னு சொல்லு பாரதி, நிச்சயமா உன் ஆசையும் நிறைவேறும். 'ஒரு கோடீசுவரன் வீட்டு சௌகரியங்களும் கிடைக்கும். நாராயணனும் ராஜா மாதிரி இருக்கான்' இப்படிப் பேசினே நீ! நினைவு இருக்கா?"

"நன்னா நினைவு இருக்கு. ஆனா அன்னிக்கு நான் ஏன் அப்படிப் பேசினேன்? அது தெரியுமில்லையா? பி.எச்.டிக்கு அவ ஒத்தக்கால்லே நின்னுட்டிருந்தா. அதை ஒடிச்சாத்தானே கல்யாணம் நிச்சயமாகும்? நம்ப பாரம் இறங்கும்?

"அதுக்காகப் படிச்ச பெண்கிட்ட ஆசை வார்த்தைகளை அள்ளிக் கொட்றதா? நான் என்னோட இல்லாமையையும் இயலாமையையும் சொல்லி அவ காலைப் பிடிச்சேன். நீ பொய்யான தொடுவானத்தை அவளுக்குக் காட்டினே. அவளும் அதை மெய்னு நினைச்சு சம்மதிச்சா".

"அப்படிப் பார்த்தா உங்க ஈச்சா ஏன் தேன் ஒழுகப் பேசணும்? மூணு மணி நேரத்திலே கோழிக்கோடு போலாம். எர்ணாகுளம் போலாம். அங்கெல்லாம் யூனிவர்சிட்டி இருக்குன்னு அவர் ஏன் தூண்டில் போடணுமாம்?"

"அவன் அப்படிச் சொன்னதுக்கு இப்ப அனுபவிக்கறான். நீ ஆசை காட்டினதுக்கு, நீ அனுபவிக்கப் போறே."

"பாரதி ஒண்ணும் பாலக்காட்டை விட்டுப் போகலையே".

"போனா எல்லார்க்கும் தலைக்குனிவுதானே சுசீலா?"

"நானும் உங்ககூட வர்றேன்".

"எதுக்கு? காரியத்தைக் குட்டிச்சுவராக்கவா?"

---

• ஒரு நாடகக் கோஷ்டியின் தலைவருக்கு ஓர் அழகிய பெண் இருந்தாள். தன்னுடைய நடிகர்களில் யாரையும் அவள் காதல் புரியக்கூடாது என்று அவர் கண்டிப்பு செய்திருந்தார். இருந்தும் அந்தப் பெண், ஒருவனைக் காதலிக்க ஆரம்பித்து, அவனைக் கல்யாணம் பண்ணிக் கொள்ளப் போவதாகத் தகப்பனாரிடம் சொன்னாள்.

இதைக் கேட்டதும், தகப்பனுக்கு ஏக கோபம் வந்தது. "நான்தான் என் நடிகர்களில் ஒருவரையும் நீ காதலிக்கக் கூடாது என்று கண்டிப்பு செய்திருந்தேனே! அதிலும் நடிப்பு என்றால் என்னவென்றே தெரியாத அந்த மூடனையா நீ கல்யாணம் செய்து கொள்ள விரும்புகிறாய்?" என்று கேட்டார்.

"நீங்கள்தான் நடிகனைக் கல்யாணம் பண்ணிக்கொள்ளக் கூடாது என்று சொல்லியிருக்கிறீர்களே, அப்பா!" என்று கேட்டாள் அந்தப் பெண்!



• சார்லி சாப்ளின் பிறரைப் போலவே பேசுவதிலும், செய்வதிலும் மிகவும் கெட்டிக்காரர். ஒரு சமயம் அவர் ஒரு கூட்டத்தில், அவர்களுக்குத் தெரிந்த பலரைப்போலப் பேசி நடித்தும் காண்பித்தார். எல்லாரும் கைதட்டினார்கள். கடைசியில் அவர் ஒரு அ... கான பாடலைப் பாடினார். "உங்களுக்கு இத்தனை ந... றாகப் பாடத் தெரியுமா?" என... எல்லாரும் ஆச்சரியப்பட்டார்கள். அதற்கு சார்லி சாப்ளின் "எனக்கு உண்மையில் பாட... தெரியாது. புகழ் பெ... காருசோ எப்படிப் பாடுவ... என்று பாடிக் காண்பித்தே... அவ்வளவுதான்" என்றார்.

★ ஆண்களின் தரத்... பெண்களைக் கொண்டு... பெண்களின் தரத்தைத் ... கத்தைக் கொண்டும், ... கத்தின் தரத்தை நெல்லை... கொண்டும் அறிந்து கொள... லாம்.

— நாபே...

"ஏன் அப்படி நினைக்கறீங்க? பொறந்த முப்பதாம் நாள்லேயே பாரதிக்குப் பிடிவாதமும் பொறந்தாச்சு. சின்ன வயசிலே கொஞ்சமா சாட்டியம் பிடிச்சிருக்கா? புரண்டு புரண்டு அழுவள்".

"நீ மொத்து மொத்துன்னு மொத்துவே... பிடிவாதம் செய்ஞ்சா அம்மா என்ன செய்வா. அடிப்பா. அவ்வளவுதானேன்னு அவளுக்குத் தோணித்து. பலன் பிடிவாதம் வளர்ந்தது".

"சரி இப்ப என்ன நடக்கும்னு உங்களுக்குத் தோணறது?"

"நீதான் லெட்டரைப் படிச்சியே? ஈச்சாவுக்கு இஷ்டமில்லை. மாப்பிள்ளைக்கு இஷ்டமில்லை. எல்லாத்துக்கும் மேலா என் தங்கை தங்கம்மாவுக்கும் இஷ்டமேயில்லை".

"இந்த மூன்று பேர் பேச்சையும் மீறிண்டு பாரதி பிளச்டிக்கு ஓடறாள்னு வைச்சுப்போம். அப்புறம் என்ன நடக்கும்?

"அப்புறம்னா எப்புறம், சுசீலா?"

"படிச்சு முடிச்சப்புறம்".

"என் தங்கையைப் பத்தி உனக்குத் தெரியாது. தன் புள்ளைக்கு வேறொருத்தியைக் கல்யாணமே பண்ணி வைச்சுடுவா".

"சட்டப்படி அது செல்லாதே?"

"கல்யாணமான ஒரு மாசத்துக்குள்ளே பெண் வீட்டை விட்டு யார்ட்டேயும் சொல்லிக்காமப் போயிட்டா, கான்ஜுகல் ரைட்ஸ் அதான் கல்யாணம் ஆனப்புறம் ரெண்டு பேருக்கும் உள்ள உரிமைகளைப் புறக்கணிச்சுட்டாள்னு கேஸ் போடுவா. கேஸ் வர்றப்ப வாதம் மட்டும் பேசாது. பணமும் பேசும். ஈச்சா பணக்காரன். தங்கம்மா ரோஷக்காரி".

"அடக் கடவுளே!"

"இன்னும் மிஞ்சிப் போகலை. அதான் ஈச்சா என்னை வரச் சொல்லியிருக்கான்".

"சரி போய்ட்டு வாங்கோ. எனக்குத் திட்டவும், அடிக்கவும்தான் தெரியும். உங்களை மாதிரி உணர்ச்சி நெகிழ்ச்சியோட அழுகைக் குரல்லே பேசத் தெரியாது".

"அழ வேண்டிய இடத்தில் அழுதுதான் காரியத்தைச் சாதிச்சுக்கணும். அப்ப நாமும் குழந்தைகள் மாதிரி ஆயிடறோம்".

"வேதாந்தம் போறும். கிடைக்கற முதல் வண்டியைப் பிடியுங்கோ".

"ரெயில்லே போறேன். திருச்சியிலிருந்து ஒரு எக்ஸ்பிரஸ் இருக்கு. கொச்சிக்குப் போறது. ஏழரை மணிக்குப் புறப்படும்".

"அது பாலக்காட்டுக்கு அர்த்த ராத்திரியிலே போகாதா?"

"ஆமாம். போகும். ரெண்டு மணிக்குப் போகும். பிளாட்பாரத்தில் நிறைய சிமெண்ட் பெஞ்சு இருக்கும். ஒண்ணிலே காலை நீட்டிக்கறேன். விடிஞ்சப்புறம் பள்ளிப்புறம் போறேன்".

"இப்படிக் கஷ்டப்பட்டுப் போகணுமா?"

"பொண்ணைப் பெத்தவன் எவன் சுகப் பட்டிருக்கான்... ஆளை விடு".

ரெயில் பிரயாணத்தில் மௌலிக்கு உடல் களைத்துப் போகவில்லை. மனம்தான் வலித்து வலித்துக் களைத்துப் போயிருந்தது.

பாரதி முரண்டு பிடிக்கிறாள் என்பது நிதர்சனமாகத் தெரிகிறது.

ஈச்சா நல்ல மனிதர். நிறைந்த குடும்பத்தில் பிறந்து பாரம்பரியப் பெருமையைக் காப்பாற்றுகிறவர். வெளித்தோற்றத்தில் நல்லவனாகத் தெரிகிறார். எளிமையான உடை, குரலை உயர்த்தாமல் பேசும் குணம். தங்கம்மா ஒருத்திதான் வாயாடக் கூடியவள். இவர்களிடமெல்லாம் பாரதி இத்தனை நாள்களாக எப்படி நடந்து கொண்டிருக்கிறாள்? யாராவது அவளிடம் ஒரு வார்த்தை கடுமையாக பேசிவிட்டால் புலிபோலப் பாய்வாள். ஏழு வயதிலிருந்து பதினாறு வயது வரை அவள் எத்தனை சக மாணவிகளிடமும் அக்கம் பக்கத்துப் பெண்களிடமும் சண்டை பிடித்துக் கொண்டிருக்கிறாள்! வடக்கத்திக்காரப் பெண்ணுக்கு இணையாகச் சளைக்காமல் ஹிந்தியில் பேசக்கூடாததெல்லாம் பேசுவாளே? கல்லூரி வாழ்க்கையிலும் எத்தனையோ பிரச்னைகள். எல்லா பரிட்சைகளிலும் முதல் வகுப்பில் தேர்வு பெற்றாலும், ஆசிரியர்களிடம் நல்ல பெயர் இல்லை.

மௌலி மனம் குழம்பிப் போனார். என்னதான் பாரதி அவரிடம் மட்டும் அதீத பாசத்துடன் பழகினாலும் அவருடைய புத்திமதிகளுக்குச் செவி சாய்த்தாலும், இப்போது முளைத்துவிட்ட பிரச்னையைச் சுமுகமாகத் தீர்க்க முடியும் என்ற நம்பிக்கை வரவில்லை. பெற்ற தகப்பன் சொல்லியாவது மகள் மனம் மாறுவாளா என்ற நப்பாசையில்தான் ஈச்சா அவருக்குக் கடிதம் எழுதியிருக்க வேண்டும்.

ரெயில் பாலக்காட்டை அடைந்தது. ஈச்சாவையோ, நாராயணனையோ எதிர்பார்க்காத மௌலி, ப்ளாட்பாரத்தின் ஒரு கோடியில் வெறிச்சோடிக் கிடந்த சிமெண்ட் பெஞ்சியை அடைந்தார். உட்கார்ந்தார். சற்றைக்கெல்லாம்

கால்களை நீட்டிக் கொண்டால் சௌகரியமாக இருக்கும் என்று நினைத்தார். முடிவில், கைப்பெட்டியைத் தலையணையாக மாற்றிப் படுத்துக்கொண்டார்.

அரைப் பிரக்ஞை, அரைத் தூக்கத்தில் தவிக்க நாலா புறங்களிலிருந்தும் அவருடைய பெண் பாய்ந்து வந்து தாக்குவதான பிரமை உண்டாயிற்று,

ஒரு பக்கத்திலிருந்து பத்து வயது பாரதி.

வலது புறத்தில் கல்லூரியில் படிக்கும் பாரதி.

கால்களை யாரோ தாக்குவது போலப் பட்டது. பார்த்தார். கல்யாணமாகிவிட்ட பாரதி கோபக் கனல் கண்களில் வீச நின்று கொண்டிருந்தாள்.

அவர் பள்ளிப்புரத்தை அடைந்தபோது காலை ஐந்தரை.

பெண் பாரதிதான் முதலில் அவரைப் பார்த்தாள்.

"வாங்க அப்பா! ஒரு பெரிய ப்ளெசன்ட் சர்ப்ரைஸா இருக்கு! உட்காருங்க. அத்தைட்ட சொல்றேன். அத்திம்பேர் பூப்பறிச்சுட்டிருக் கார். இப்ப வந்துடுவார். மொதல்ல காப்பி கொண்டு வரேன்".

பாரதி உள்ளே ஓடினாள்.

ஆச்சர்யத்தில் மௌலி ஸ்தம்பித்துப் போனார். ஈச்சாவின் கடிதம் அவர் மனதில் ஒரு பாரதியை உருவாக்கியிருந்தது. ஆனால் இப்போது அவர் பார்க்கிற பெண் வேறு பாரதியாக இருக்கிறாளே? எட்டு மணி வரை தூங்கிப் பழகியிருந்த அவள் ஐந்தரை மணிககு முன்னதாகவே குளித்து நெற்றி நிறையக் குங்குமமும், ஈரத்தலையைக் காட்டிக் கொடுக் கும் துண்டுமாக நிற்கிறாளே?

இப்போது பார்க்கிற பாரதியா ஒரு பிரச்னையை உருவாக்கியிருக்கிறாள்? இவள் பொருட்டா ஈச்சா அவரை நங்கவரத்திலிருந்து கொக்கி போட்டு இழுத்திருக்கிறார்?

காப்பியுடன் வந்த பாரதி, "ஏம்ப்பா அம்மாவையும் கூட்டிக்கிட்டு வந்திருக்கலாமே? அம்மா எப்படி இருக்காப்பா...? காப்பியைக் குடியுங்கோ. அவளுக்கு நான் இல்லாதது வீடே வெறுச்சுன்னு ஆயிருக்குமே? அவளோட மல்யுத்தம் நடத்த இன்னொரு பெண்ணும் இல்லே... காப்பியைக் குடிங்கப்பா. கையி லேயே வைச்சுட்டிருந்தா எப்படி?

"நீ நன்னாயிருக்கியாம்மா?"

"ஒரு குறைச்சலும் இல்லாமல் திவ்யமா இருக்கேம்ப்பா".

"மாப்பிள்ளை எங்கே?"

"நேத்து கோழிக்கோடு போனார். ஏதோ ஸெமினாராம். அதோ அத்தை வர்றா. உங்க ளுக்குத் தெரியாதே... அத்தையை பத்துநாள் முன்னாலே பாம்பு கடிச்சுது. நல்ல பாம்பு!"

"ஐயய்யோ, எனக்குத் தெரியவே தெரி யாதே... அப்புறம்?"

"பாம்புக்கடி இந்த ஊர்ல தலைவலி மாதிரிப்பா. மாத்திரை போட்டுண்டதும் வலி போறதே... அது மாதிரி...

"அண்ணா நீ எப்ப வந்தே?" தங்கம்மா அருகே வந்தாள்.

"இப்பத்தான்",

"இப்ப ரெயில் இருக்கா என்ன?

"ரெயில் ரெண்டு மணிக்கு வந்தது. அசமயத் திலே இங்கே வருவானேன்னு ஸ்டேஷன்லேயே இருந்துட்டேன்".

"ஏதானும் விசேஷமா?"

மின்னலாகப் புரிந்தது மௌலிக்கு, ஈச்சா வின் கடிதம் பற்றி தங்கம்மாவுக்கு ஏதும் தெரியாது என்று.

"அதெல்லாம் ஒண்ணுமில்லே, தங்கம்மா".

"இவர்ட்ட பணம் கிணம் ஏதானும் கடன் வாங்க வந்திருக்கியா?"

"சேச்சே, பொண்ணைக் குடுத்த இடத்திலே கடன் வாங்கக் கை நீட்டுவேனா?"

"யார் கண்டா? இந்தக் காலத்திலே என்ன வேணும்னாலும் நடக்கும்".

"பாரதியைப் பார்க்கணும் போல இருந்தது. அதான் வந்தேன்".

"இதுமாதிரி மன்னிக்குத் தோணலையோ? அவ வயத்திலே பொறந்தவதானே இவ?"

மௌலி பதில் சொல்லவில்லை. சின்ன வயசில் தங்கம்மா இப்படித்தான் நெஞ்சைக் குத்துகிற மாதிரி பேசுவாள். அது அடங்கி விட்டது என்று கல்யாணத்துக்கு முன்னாலும், கல்யாணத்தின் போதும் அவர் நினைத்தது எவ்வளவு பெரிய தப்பு? யாராக இருந்தால்

## பஞ்சாங்கம்

☐ கரணம், திதி, நட்சத்திரம், யோகம், வாரம் ஆகிய ஐந்து அங்கங்களைக் கொண்டதாலேயே 'பஞ்சாங்கம்' என்ற பெயர் ஏற் பட்டது.

க.சு. மணியன்

என்ன, சுய ரூபத்தைக் காட்டாமல் இருக்க மாட்டார்கள்!

"நீ திரும்பிப் போறப்ப வேணும்னா இவளையும் கூட்டிண்டு போ. நீயும், மன்னியும் இவளை நன்னா வளர்த்தி இந்த வீட்லே தள்ளியிருக்கீங்க! இன்னம் கொஞ்ச நாள் உன் வீட்ல சீராட்டுங்கோ. திருச்சியிலிருந்து மெட்ராஸ் போறது இன்னும் சுலபம்".

சொல்லிவிட்டு அவள் நகர, மௌலி பரிதாபமாகப் பாரதியைப் பார்த்தார்.

தங்கம்மா கண்ணைவிட்டு அகன்றதும், "அத்தை ஒரு மெண்ட்டல் கேஸ் அப்பா. நீங்க பார்த்த தங்கை, நான் பார்த்த அத்தை டாக்டர் ஜெகில். இப்ப மிஸ்டர் ஹைடா மாறி இருக்கா. ஸைக்யாட்ரிக் ஸ்பெஷலிஸ்ட்கிட்ட கூட்டிண்டு போக வேண்டிய கேஸ்".

"இப்படியெல்லாம் பேசாதே, பாரதி".

"மத்தவா எல்லாரும் எங்கிட்ட நன்னா அன்பாப் பழகறப்ப அத்தைக்கு மட்டும் என்ன வந்ததாம்?"

"ஈச்சா வர்றார்".

ஒரு கூடையில் பற்பலவிதமான பூக்களை வழிய விடாமல் ஜாக்கிரதையாக எடுத்துக் கொண்டு முன்னேறி வந்த ஈச்சா, முன் தாழ்வாரத்தை அடைந்ததும் மௌலியைப் பார்த்தார். கூடையை ஊஞ்சலின் மேல் வைத்து விட்டு, -

"எப்ப வந்தாய் மௌலி...? பொண்ணே, ஒன் அப்பாவுக்கு காப்பி கொடுத்தியா?"

"வந்து அரை மணி நேரமாறது. வந்ததுமே பாரதி காப்பி தந்தா".

"தங்கம்... தங்கம்".

"அத்தை வந்து அண்ணாவைப் பார்த்துப் பேசிட்டு உள்ளே போயாச்சு, அத்திம்பேர்".

"சரி வாடா மௌலி. சகஸ்ரத்தாத்துக்குப் போவோம். பொண்ணே ஒன் அப்பாவுக்கு என்ன பிடிக்கும்னு ஒன்க்குத்தான் தெரியும். அதுபோல சமைச்சு வைக்கிறியா?"

"சரி அத்திம்பேர்".

"அஞ்சாறு நாளா ஒன் பொண்தான் சமையல் உள்ளில. சொல்லிக் கொடுத்தா டக்குன்னு பிடிச்சுக்கறா... வா, போலாம்".

இருவரும் சகஸ்ரத்தின் வீட்டை அடைந்தார்கள். சகஸ்ரம் ஊஞ்சலில் உட்கார்ந்து காம்போதியை இழுத்துக் கொண்டிருந்தான். இருவரையும் பார்த்துவிட்டு, "வா, அண்ணா, வாங்கோ சந்திரமௌலி..." கூறி, "ராஜி... ராஜி..." என்று கத்தினார்.

● பிரிட்டனின் கடற்கரையில் காணப்படும் பெலாஜியா (Pelagia) என்ற உயிரினமும் பிரகாசமாக ஒளிரும். இவை குடை போன்ற அமைப்புடன் காட்சியளிக்கும். இந்த உயிரினத்தைப் பிடித்து அழுத்தினால் ஒளியுடைய ஒரு திரவம் சுரக்கும்!

"இப்ப ஒண்ணும் வேண்டாம்பா சகஸ்ரம். ராஜியைக் கூப்பிடாதே!" என்றார் ஈசுவரன். பிறகு தொடர்ந்து, "ஒன் ஆலோசனைப்படி மௌலிக்கு எழுதிப் போட்டேன். அவனும், உடனே பொறப்பட்டு வந்துட்டான்" என்றார்.

"பாரதியைப் பார்த்தா ஒரு பிரச்னையும் இல்லாதது மாதிரி இருக்கு ஈச்சா".

"ஒன் பொண் புத்திசாலி, கெட்டிக்காரி. இதமாப் பேசினா இதமா நடந்துக்கற பொண். எல்லாம் சம்மதிக்கிறேன். இந்த ஆத்ல எல்லார்ட்டேயும் - அவ அத்தையை ஒழிச்சு - அனுசரணையோட பழகறா. சம்மதிக்கிறேன். ஆனா இந்த பிளச்டி விஷயத்திலே மாத்ரம் பிடிவாதமா இருக்கா. எங்களாலே அவளை அடக்கி இங்கேயே ஆணி அடிச்ச மாதிரி ஒக்கார வைக்கக் கழியும். ஆனா அப்படி சேதா நாங்களும் அவளுக்கு விரோதிகளா யிடுவோம். எங்களுக்கும் ஒரு நல்ல பொண்ணு பறிபோன மாதிரி ஆயிடும்".

"நான் என்ன செய்யணும், ஈச்சா?"

"என்ன சேயப் படாதுன்னு கேளு சொல்றேன். மேற்படிப்புக்கு அவ போறதால உண்டாகப் போற விபரீதங்களை அவ தீர நெனைச்சுப் பார்க்கலை".

"அதையெல்லாம் எடுத்துச் சொல்லி சமாதானப்படுத்தணுமா?"

"அதான் இல்லை".

"பின்னே?"

"ஒரு சூத்திரம் இருக்கு".

"யூ மீன்... தந்திரம்?"

"கரெக்ட்".

"என்ன அது?"

"சகஸ்ரம் இது ஒன்னோட ஐடியா. நீயே சொல்லு".

"அதுக்கு மின்னாலே ஓர் அரைக்கிளாஸ் காப்பி!"

சொல்லிவிட்டு சகஸ்ரம் உள்ளே செல்ல, மௌலி உள்ளூர பயந்து போய் உட்கார்ந்திருந்தார்.

(தொடரும்)

# அடிக்கரும்பும் கசக்கும்

அருகில் மனைவி இல்லாததால் ஒற்றை ஆளாய்த் திணறிக் கொண்டிருந்தான் ரங்கன். ஒன்பது மணிக்கே கத்தரி வெயில் தகிப்பதைப் பொருட்படுத்தாமல் கீழ சந்நிதித் தெரு சுற்றுலாப் பயணிகளால் நிரம்பத் தொடங்கியது. நடராஜர் உபயத்தால் பாதையோரக் கடைகள் பிழைப்பு செழித்தது.

அவன் வேறு இரண்டு நாளாய் இல்லை. எல்லா வேலையும் ரங்கனே செய்ய வேண்டி இருக்கிறது.

இரண்டு நாளாய் குப்புசாமிக்கு அனல் ஜுரம். நேற்று தர்மாஸ்பத்திரியில் சேர்த்து, அஞ்சலை அங்கேயே இருப்பதால்தான் ரங்கனுக்கு இத்தனை வேலை.

## நளினி சாஸ்திரி

ரங்கன் தோல் உடுத்த பாம்பாய் நீண்ட கரும்பினை சக்கரங்களுக்கு இடையில் நுழைத்து கியர் இணைந்த பெரிய சக்கரத்தைக் கைப்பிடி கொண்டு சுழற்றினான். இடை இடையே ஒரு மூடி எலுமிச்சையும் காரத்திற்கு கொஞ்சமாய் இஞ்சியும் கரும்போடு சேர்ந்தது.

பக்கெட்டில் சேர்ந்த கரும்புச் சாற்றை டம்ளர்களில் ஊற்றி ஐஸ் துண்டுகளை மிதக்கவிட்டு காத்திருந்தவர்களைக் குளிர்வித்தான்

மனைவி அஞ்சலை இருந்தால் இவ்வளவு சிரமம் இல்லை. அவளே டம்ளர்களில் ஊற்றித் தந்துவிடுவாள். ரங்கன் சக்கரம் சுற்றினால் மட்டும் போதும். ஐந்து வயது மகன் குப்புசாமி காலி டம்ளர் வாங்கி பக்கெட் நீரில் கழுவி தயாராய் அடுக்கி விடுவான்.

"சுற்றுலா வந்த பள்ளிச் சிறுவர்கள் ஆறு பேர் மூளைக் காய்ச்சலால் ஆஸ்பத்திரியில் அனுமதி" என்று காலைச் செய்தியைச் சுடச்சுடப் படித்த ஒருவர் கூடவே ஆச்சரியம் காட்டினார், "அட நம்ம ஊருக்கு சுற்றலா வந்தவங்க!"

செய்தியால் பாதிக்கப்படாத ரங்கன் பெரிய ஐஸ் கட்டியை டியூபில் போட்டு உருட்டுக் கட்டையால் தட்டி உடைத்துக் கொண்டிருந்தான்.

"என்னப்பா, கரும்புச் சாறு ரெண்டு ரூபாயா? அதிகமா தோணுதே" முண்டாசு கட்டிய கிராமத்துக்காரர் பேரம் பேசிப் பார்த்தார்.

"எங்கண்ணே, கரும்பு கெடக்க மாட்டேங்குது. எல்லாம் சக்கர ஆலைக்கே போயிடுது. தேடிப் பிடிச்சு வாங்கறதுக்குள்ளே கால் தேயுது. ஐஸ், எலுமிச்சை வில வேற. அடக்கமே, ஒன்னே முக்கா ரூவா ஆவுது - கடல போய் ஒரு புருட்டி குடிங்க, அஞ்சு ரூவா சொல்றான். ஆனா ரெண்டு ரூவால ஒடம்புக்கும் குளுமை. எளனிகூட நாலு ரூவா. யோசிக்காதீங்கண்ணே. இதுலதான் பொழப்பே ஒடுது. இந்தாங்க ஐஸ் தூக்கலா, அடிக் கரும்பா போட்ருக்கேன். ஜில்லுன்னு அடிங்க".

எதிர்வரிசை சிங்காரப் கடைக்குச் சற்று அதிக கூட்டப் சேர்ந்தது. எடுத்துத் தரு பவள் சிங்காரத்தின் மனைவி கரும்புச்சாறு குடும்பத் தொழி லாகப் போய்விட்டது. அஞ் சலை இருந்திருந்தால் கூட்டம் தன்னிடமே வந்திருக்கும் என்று ரங்கன் மனம் கணக்குப் போட்டது.

பொண்டாட்டியைக் காட்டிப் பொழப்பு நடத்தறது ரங்கனுக்கும் பிடிக்கவில்லைதான் வேறு வழியில்லை. பெண்கள் இல்லாத கடையே இல்லை. மெடிகல் ஸ்டோரில் கூடப் பெண்தான்.

ரங்கன் யோசித்துக் கொண்டே, வடிகட்டுகையில் திடீரென்று பக்கத்தில் கூடை களில் மாம்பழம், பலாச்சுளை பூ விற்பவர்கள் கூடைகளைத் தூக்கிக் கொண்டு சந்து களில் மறைந்தார்கள், "ரங்கா தொப்பிக்காரன் வரான். ஓடு".

ஆனால் ரங்கனால் ஓட முடியாது. அவன் வண்டியும் எந்திரமும் ஏராள கனம். எதி கொள்ளத் தயாராய் தெரு முனை நோக்க ஒரு கான் டபிள் வந்து கொண்டிருந்தார்!

ரங்கன் அருகில் வந்து "உஸ் அப்பாடா! ஒரு டம்ளர் ஜில்லுன்னு போடப்பா" என் தொப்பியை கழற்றினார்.

"என்ன ரங்கா, வியாபார ரொம்ப பிஸி போலருக்கு".

"எங்கய்யா, காலலருந் அஞ்சு கரும்புகூடப் பிழியல".

"எங்கிட்டயே காது குத்த
ப? கரும்புச் சக்கயப்
த்தா பதினஞ்சு ஒடிருக்
போலருக்கு" துப்பறியும்
ர்களால் நோக்கினார்.

"ஹி... ஹி..." என்று தலை
ாறிந்தான் ரங்கன். "அது...
துங்க, அது நேத்தைய
கைங்க" என்றான். காவி
ளர் வைக்கும் சாக்கில்
ருக்கும் தெரியாமல் பத்து
ாய்த்தாள் ஒன்றை கீழிருந்த
பர் தொப்பியில் வைத்தான்.
தை யாரும் அறியாவண்ணம்
ணிந்து கொண்டார்.

"ரங்கா, நான் வந்த விஷயமே
ற, சரி இதுவும் இருக்
டும்".

"என்னங்கய்யா?" ரங்கன்
லில் பவ்யம்.

"இங்கே ஊர் வந்த ஸ்கூல்
ளைங்க ஆறு பேர் மூளைக்
ய்ச்சல் வந்து பெரியாஸ்
திரில சேத்திருக்காங்க.
துல மூணு பேர் காத்தால
த்துட்டாங்க".

"அடப்பாவமே, அதுக்கு
ம என்னங்க பண்றது?"

"கலெக்டரம்மா போன்ல
டர் போட்டாங்க. காரணம்
ண்டு பிடிக்கணும்னு. அந்தப்
ங்க இங்க ஏதாவது ஜூஸ்
ச்சாங்களா?"

"ரெண்டு நாளாக
ளைக்குக் காயலாருந்ததால
ன் கடையே போடல சாமி"
ணிந்து பொய் சொன்னான்
கன்.

"இங்க ஈ மொய்க்கற வட
குமே, ஒரு கௌவி. அது
கே?"

"ஏஞ் சாமி?"

"அனாலதான் காச்சல் வந்த
ம். அந்த ஈக்காரனத் தேடித்
ன் நாங்க அலய்றோம்.
ன் மட்டும் கைல கெடச்சா
ாலஞ்சான்" என்று கான்ஸ்
ன் மாமூல் வேலை முடிந்த
ல் எதிர்சாரி சென்றார்.



"கடக்காரரே, கொஞ்சம் பாத்து, ஈ இல்லாம ஜூஸ் போடப்பா, பயமாருக்கு" கான்ஸ்டபிள் சொன்னதைக் கேட்ட ஒருவர் பயந்து கரும்புச் சாறு குடிக்கும் எண்ணத்தை விட்டுவிடலாமா என்றுகூட நினைத்தார். பிரெய்ன் ஃபீவர் எல்லாம் குழந்தைகளுக்குத் தான் வருமென்று தேற்றிக் கொண்டார்.

ஜூஸ் குடிக்க நின்ற இன்னொருத்தர் மேதாவிலாசத்தைப் பறைசாற்றிக் கொண்டார்.



"ஒரு படம் பார்த்தேன். ஸ்பானிஷ் ப்ளைனு பேரு. ஒருவித ஈ. குடிக்கற பானத்துல விழுந்து செம கிக். அப்புறம் அத தேடிப் பிடிச்சு எல்லா பாட்டில்லயும் கலக்குறாங்க. இங்கிலீஷ்காரன் மூளையே மூளை".

'அப்படி ஒரு ஈ நம் நாட்டிலே கிடைத்தால் நன்றாக இருக்குமே' என்று ரங்கன் நினைத்துக் கொண்டான். கிடைத்தால் யாருக்கும் தெரியாமல் கரும்புச் சாறில் கலக்கலாம். அப்புறம் விற்க அஞ்சலையைக் காட்ட வேண்டி வராது. நம்மூர் ஈ கூடவா மோசமாருக்கணும்?

அப்போது வியர்க்க விரு
ருக்க அஞ்சலை வந்தாள்.
ந்தானையால் முகத்தில்
ழிந்த வியர்வையைத் துடைத்
ாள்.

"அஞ்சலை, குப்புசாமி
ப்படி ருக்கான். தேவலையா?
ளைச்சிருக்கியே ஐஸ் போட்டு
ரட்டுமா புள்ளே!"

"அதான்யா குறச்சல்.
க்டர் சீரியஸ்னு சொல்றார்.
ந்த மருந்து வேணுமாம்.
ம்பது ரூபா தா. கடய
டிட்டு ஆஸ்பத்திரிக்கு
ாய்யா. தனியா பயமாருக்கு".
ஞ்சலை கண்களில் நீர் திரை
ட்டது.

"ஏம்புள்ளே பயப்படறே.
த்தாவ வேண்டிக்க. கைவிட
ாட்டா. இப்பதான் அஞ்சு பஸ்
ந்திருக்கு. நல்ல வேவாரம்.
ாமி கும்பிட்டுட்டு எல்லாரும்
ர நேரம். இன்னைக்குக்
டையை மூடினா நூறு ரூபா
வுட். வேணா நீ கடையைப்
ாத்துக்க. நான் ஒடிப்போய்
துக்குள்ள குப்புசாமியைப்
ாத்துட்டு வந்துடறேன்".

"தனியாவா? என்னால
காது. நீ இருந்தாலே ஒவ்
வாருத்தன் பார்வையைத்
ாங்க முடியல. தனியா,
ட்கவே வேண்டாம். அன்
ிக்குத் தனியா விட்டுட்டு நீ
ாப்பிடப் போனப்ப ஒத்தன்
ன்ன கேட்டான் தெரியுமா?
ரு டம்ளர் பால் கிடைக்கு
ான்னு மார பாத்துக் கேக்கு
ான். அப்புறம் முறைச்சதுக்
ப்புறம் ஒரு டம்ளர் கரும்புப்
ால் வேணும்னு மாத்தறான்.
ைக்கெதுக்கய்யா வீண் வம்பு?
பசாம, நீயே கடயப் பாத்
துக்கோ. குழந்தையப் பாக்க
ராட்டி பரவாயில்ல, நானே
பாய்க்கிறேன்" என்றவள்
ாஜா படம் போட்ட தகர
ாக்கெட் டப்பா திறந்து ஐம்பது
பா பொறுக்கிக் கொண்டு
ிரைந்தாள்.

பையனைப் பார்க்கக்கூடப் போகாமல் இதென்னடா பிழைப்பு என்று ரங்கன் சற்று எரிச்சல் பட்டான். வியாபாரம் விடவும் மனசில்லை. குப்பு சாமி தூங்கிக் கொண்டிருப்ப தாகத்தானே அஞ்சலை சொன்னாள் என்று தன்னையே சமாதானப் படுத்திக் கொண்டான்.

காடாறு மாதம், நாடாறு மாதம் என இன்னும் இரண்டு மாசம்தான் கரும்பு சீசன். அதுக்குள்ள நாலு காசு சேர்த்தாதான் உண்டு. அடுத்த சீசனுக்கு வேற தொழில் தேடியாகணும். சக்கரம் நடுவில் மாட்டி சாறு போக சக்கையாய் வெளிவருவது கரும்பு மட்டுமன்று. வாழ்க்கையும்தான் என்று ரங்கனுக்குத் தோன்றியது.

அதற்குள் மீண்டும் கூடைக் கார வியாபாரிகள் தூக்கிக் கொண்டு ஓட, திரும்பிய ரங்கன் துவண்டான். இந்த முறை போலீஸ் இல்லை. மாறாக சுகாதார அதிகாரி.

அவர் கேள்வி கேட்கும் முன் ஒரு டம்ளர் சாறு நீட்டினான் ரங்கன்.

"என்னப்பா விவகாரம் பண்றே, இப்படி ஈ மொய்க்குது?"

"என்னங்க பண்றது? பலாச்சுளை, முருக்கு வியாபாரம்னா வலை போட்டு மூடலாம். இப்படிப் பெரிய கரும்பு எந்திரத்தை எப்படிய்யா மூடறது. நீங்களே, வழி சொல்லுங்க" ரங்கன் எதிர்க்கேள்வி கேட்டவாறே பத்து ரூபாய் எடுத்து இடது கை மூலம் அதிகாரி கை மாற்றினான்.

"நீ சொல்றதும் சரிதான். வழியில்லதான். இருந்தாலும் வண்டில மருந்து தெளிச்சு ஈ வராம பாத்துக்க. ஈனால காய்ச்சல், காலரா வந்து நாலு பசங்க செத்துட்டாங்க. அதனால கலெக்டர் கண்காணிக்க உத்தரவு. ரிப்போர்ட் அனுப்பணும். நாளைக்கு வரச்சே, ஈ இருந்தா கடை காலி" என்றவாறு நகர்ந்தார் ஹெல்த் இன்ஸ்பெக்டர்.

மீண்டும் கரும்பு திணித்துச் சக்கரம் சுற்ற ஆரம்பித்தான். எண்ணமும் ஓடிற்று. இரண்டு நாள் முன்பு பள்ளிக்கூட பஸ் ஒன்று வந்து சிறுவர்கள் சிலர் கரும்புச்சாறு இரண்டு வாங்கி அதையே ஆறு பேர் பகிர்ந்து குடித்தது நினைவுக்கு வந்தது. காலையில் முதல் போணி. முதல் நாள் கழுவாமல் ஈ மொய்த்த பாத்திரத்தில் சாறு பிழிந்தது நினைவுக்கு வந்தது.

வழக்கம்போல முதலில் மகன் குப்புசாமிக்கும், அஞ்சலைக்கும் ஒரு டம்ளர் தந்து விட்டுத்தான் தொழில் ஆரம்பிப்பான். அதுதான் ராசி. மடமடவென்று வியாபாரம் சூடு பிடிக்கும். ஒருவேளை அந்த ஈக்கள்தான் சிறுவர்கள் ஜுரத்துக்குக் காரணமோ என்று லேசாக ஒரு எண்ணம் ஓடிற்று.

வந்த எண்ணத்தை விரட்டினான். யாரோ செத்தா நமக்கென்ன? விதி வந்தது. உயிர் போச்சு என்றவாறு வியாபாரத்தில் மும்முரமானான் ரங்கன். திடீரென்று ஊரில் ஈ, ஹீரோவானது போலிருந்தது. வீட்டருகில்தான் எத்தனை ஈ? பக்கத்து வீட்டில் பன்றியும் மாடும் வளர்க்கிறான் பழனிச்சாமி. அந்த வீட்டிலிருந்துதான் ஈ வரும். முதலில் அவனை மிரட்டணும்.

அப்போது தூரத்தில் அஞ்சலை ஓடிவருவது தெரிந்தது. முகத்தில் பதட்டம்.

"என்ன புள்ளே குப்புக்கு ஒண்ணுமில்லையே?"

"என்னத்த சொல்றது? புள்ளைக்கு ஏதோ மூளைக் காச்சலாம். ஈனால வருதாம். பன்னிலயிருந்து வருமாம். பிழைக்கறது கஷ்டம்னு டாக்டர்



இவ்விரு குழந்தைகளும் ஆதரவற்ற நிலையில் சிவானந்த ஆசிரமத்தில் சேர்க்கப்பட்டு அன்பும் அரவணைப்பும் கிடைக்கப் பெற்று அமைதியான சூழ்நிலையில் வளர்கின்றனர்.

செல்வி அம்லு என்று அழைக்கப்படும் குழந்தை திருவள்ளூர் இரயில் நிலையத்தில் மூன்று மாதங்கள் நிர்க்கதியாக விடப்பட்டு பின்பு சிவானந்த ஆசிரமத்தில் அடைக்கலம் புகுந்தது.

அஞ்சலி என்று நாங்கள் பெயரிட்டு அழைக்கப்படும் மற்றொரு குழந்தை கிழக்கு தாம்பரம் பூங்காவில் இருந்து ஆதரவற்ற நிலையில் எங்களிடம் வந்து சேர்ந்து வளர்ந்து வருகிறது.

இப்படிப்பட்ட எண்ணற்ற சிறார்களுக்கு மனமகிழ்ச்சி தருவது தங்களுடைய அன்பும், பொருளுதவியும்.

அவர்களுடைய தேவையான உடையும், உணவும் நாம் எவ்வளவுதான் அளித்தாலும் பெற்றோர்கள் தங்களுக்கு இல்லையே என்ற ஏக்கம் நெஞ்சில் இருக்கத்தான் செய்யும். அதனைப் போக்கத்தான் நாங்களும் அனைத்து முயற்சிகளும் எடுத்துக் கொண்டு வருகிறோம்.

பண்டிகைகளும், விழாக்களும் மனித வாழ்வில் மனமகிழ்ச்சியை ஏற்படுத்தி உற்றார் உறவினருடன் பாசத்தினை பகிர்ந்து வாழ வழிவகை செய்கிறது. இப்படிப்பட்ட குழந்தைகளுக்கும், நிர்க்கதியாக நிற்கும் முதியோர்களுக்கும் தாங்கள் தானே உற்றார் உறவினர்! ஒவ்வோர் ஆண்டும் தீபாவளி திருநாளை இச்சிறார்களுக்கு இப்பத்திரிகை மூலமாக வாசகர்களின் உதவியுடன் கொடுக்கப்படும் நிதியிலிருந்து இரண்டு ஜோடி புத்தாடைகளும், பட்டாசுகளும், இனிப்புகளும் வழங்கப்பட்டு தாழ்வு மனப்பான்மையினைப்போக்கி சிறப்பாகக்கொண்டாடுகிறோம்.

சிவானந்த ஆசிரமத்திலுள்ள சுமார் 250 ஆதரவற்ற குழந்தைகளுக்கும், முதியோர்களுக்கும் இந்த தீபாவளித் திருநாளை மகிழ்ச்சியுடன் கொண்டாட பொதுமக்கள் மனமுவந்து உதவுமாறு வேண்டுகிறோம். இதனைப் படிக்கும் தாங்கள் தங்களுடைய காணிக்கையாக ஒவ்வொருவரும் குறைந்த பட்சம் தலா ஒரு ரூபாய் இவ்வறப்பணிக்கு அர்ப்பணம் செய்தால், இத்திருப்பணி தங்கள் ஆசியுடன் பரிபூர்ணமாக நிறைவேறும் என்பதல்லாமல் இந்நாட்டில் உள்ள அனைத்து ஆதரவற்றோருக்கும் பயன் பெறும்.

பொதுமக்கள் அளிக்க விரும்பும் நன்கொடை பணம், பொருள் எதுவாக இருந்தாலும், அக்குழந்தைகளின் நலனை முன்னிட்டு ஏற்றுக் கொள்ளப்படும். வருமான வரி விலக்கும் அளிக்கப்படும். பொதுமக்கள் தங்களால் இயன்ற உதவியை பணமாக அல்லது பொருட்களாக,

**நிர்வாகி**

**"சிவானந்த சரஸ்வதி சேவாஸ்ரமம்"**

**நெ.20, கம்பர் தெரு, கிழக்கு தாம்பரம்,**

**சென்னை 600 059.**

**தொலைபேசி எண்கள்: 401078, 402354**

*என்ற விலாசத்திற்கு அனுப்பி வைக்கும்படி கேட்டுக் கொள்கிறோம்.*

சொல்லிட்டார். தூங்கிட்டே இருக்கான். கண்ணே திறக்கல. திறக்காமலே போயிடுவானோனு பயமாயிருக்குய்யா. இதே வியாதில ஸ்கூல் புள்ளைங்க நாலு பேர் வேற பூட்டாங்களாம். நீ கூட வாய்யா. எத்தனை மணி நேரமோன்னு பயமாயிருக்கு".

விரைந்து கடை கட்டினான் ரங்கன். இப்போது அவன் மனம் உண்மையில் துடிக்க ஆரம்பித்தது. குழந்தைகள் சாவுக்குக் காரணம் அவன்தான் என்று உள்ளுணர்வு சொன்னது. வீட்டில் வைத்த பாத்திரத்தில் பழனிச்சாமியின் பன்றியிலிருந்து வந்து ஈக்கள் வியாதி பரப்பி இருக்கும்.

ஐயோ கடவுளே!

என்ன செய்வது?

குப்புசாமியைக் காப்பாற்று!

குலதெய்வம் மதுரவீரனை வேண்டிக் கொண்டான். ஆஸ்பத்திரி நெருங்குவதற்குள் மயக்கம் வரும்போல இருந்தது. யாரோதானே பாதிக்கப்படுகிறார்கள் என்று அசட்டையாக இருந்ததை நினைத்து வேதனைப்பட்டான். தனக்கென்று வந்தபின் ஞானோதயம்.

"ஒரே மகனை எடுத்துக் கொண்டு விடாதே" என்று மனதில் பலவித எண்ணங்கள் ஓட, வேகமாக ஓடினான் ரங்கன்.

"ஆத்தா, கைவிட்றாதே!"

ஆனால், ஆஸ்பத்திரியில் குப்புசாமி கண் மூடி மூச்சு விட்டுக்கொண்டிருந்தான்.

"ஏதோ, கடவுள் புண்ணியம். பையன் அபாய நிலை தாண்டிவிட்டான். சமயத்தல வரலேன்னா சொல்ல முடியாது. இனி ஜாக்கிரதையாகப் பாத்துக்குங்க. கவல வேணாம்" டாக்டர் தெய்வமாக சொல்லிப் போனார்.

ரங்கனுக்குள் ஏதேதோ எண்ணங்கள் அலை மோதின, சண்டையிட்டன. கடைசியில்,

"அஞ்சல எனக்கு ஒரு முக்கிய வேல இருக்கு. பையன பாத்துக்க, வந்துடறேன்" என்ற ரங்கன் தெளிந்த மனதுடன் தெருவிறங்கிப் போலீஸ் ஸ்டேஷன் நோக்கி நடக்க ஆரம்பித்தான்.

∴

# ப்ரியா காவேரியாகி விடக்கூடாது!

**கா**வேரி அத்தை சொன்னதைக் கேட்டுத் திடுக்கிட்டாள் சந்தியா. "என்ன, அத்தை, நீங்களா இப்படிச் சொல்கிறீர்கள்?"

"ஏன், எழுபது வயதுக் கிழவியின் பேச்சா இது என்று ஆச்சர்யமாக இருக்கிறதா? இங்கு வயதுடன் அனுபவமும் பேசுகிறது. சந்தியா நான் பழைய காலத்தவள் - ஆனால் புதுமைவாதி!"

"அத்தை, என் தம்பி என்ன சொன்னான் தெரியுமா? ஏன், ஜானு சித்திகூட அதைத்தான் சொன்னாள்."

"என்னவென்று? கல்யாணத்திற்கு முகூர்த்தம் வைத்திருக்கும்போது இப்படி திடீரென்று உன் புருஷனுக்கு, என் மருமானுக்கு, வந்து விட்டதே - அது அபசகுனம். அந்த ப்ரியா துக்கிரி ஜாதகம். கல்யாணத்தை நிறுத்தி விடு என்று உபதேசம் செய்திருப்பார்கள். அப்படித்தானே?"

"நிஜமும் அதுதானே, அத்தை! முதலில் இவர்தான் ஆரம்பித்தார். ஒருநாள் கோயிலில் அந்தப் பெண்ணைப் பார்த்தாராம். இப்படி குத்து விளக்கு போல ஒரு பெண் தன் வீட்டு மருமகளாக வந்தால் நன்றாக இருக்குமே என்று ஆசைப்பட்டாராம். ப்ரியாவின் அப்பாவும் இவரும் சிறு வயதில் ஒரே மரத்தடியில் கோலி விளையாடிய நண்பர்கள் என்று தெரிந்ததும் ஜாதகம் பரிமாறிக் கொண்டிருக்கிறார்கள்! அதுவும் பொருந்தின பின்தான் என் காதுக்கே செய்தி வந்தது. பிள்ளையைத் தந்தி கொடுத்து பம்பாயிலிருந்து வரவழைத்தார். எப்போதும் லீவு எடுக்க முனகும் அவனும் உடனே வந்ததே நல்ல சகுனம் என்று எண்ணினார் இவர். அதுவரை எல்லாம் சரிதான். ஆனால் அதன்பின்தான் கல்யாணத்திற்கு ஒருமாதம்கூட இல்லாதபோது இப்படி ஆகிவிட்டதே! இது நல்லதுதானா, அத்தை, சொல்லுங்கள்" சந்தியா குரலில் துக்கம் வெளிப்பட்டது.

"என்ன செய்வது? ஸ்கூட்டரில் ராஜா இன்று நேற்றா போகிறான்? ஓர் இடத்தில் வண்டி ரிப்பேர் ஆகி ஒருநாள் கூடத் தள்ளிக்கொண்டு வந்ததில்லை என் ராஜா. அப்படிப்பட்ட அவன் ஸ்கூட்டரில் ஓர் ஆட்டோ வந்து மோதுவானேன். கீழே உருண்டு விழுந்த அவன் கால் மேலேயே அது ஏறிப் போவானேன்? டாக்டர்கள் நம்பிக்கை தராமல் மழுப்புவானேன்? ஆனாலும், அதற்காக இந்தக் கல்யாணத்தை - அவன் ஆசைப்பட்டதை நிறுத்தினால் அவன் பிழைத்து விடுவானா, சொல் நிறுத்தி விடலாம். அல்லது அவன் சந்தோஷப் படுவானா சொல். நானே பெண் வீட்டிற்கு எழுதி நிறுத்தி விடுகிறேன். இரண்டும் இல்லை. சந்தியா, ராஜா ஆசைப்பட்ட ஒன்றை நடத்தி வைக்க வேண்டிய கடமை உனக்கில்லையா யோசித்துப் பார்."

"கடமை? எப்படி? என வாழ்க்கையே ஊசலாடு போதா? கல்யாணமாகும் முன மாமனாரை ஆட்டி வைக்கு இப்பெண் இன்னும் இந்த கிரக லட்சுமியினால் என்னவெல்லாம் நடக்குமோ?"

"சரி. இனி அந்தப் பெண்ணின் கதி என்ன? கொஞ்சம் யோசித்துப் பார். சந்தியா கல்யாணம் நிச்சயமானபின அந்தப் பிள்ளையோடு ஊரறி இரண்டு நாட்கள் சினிமா, ஏரிக்கரைப் பூங்கா என்று சுற் விட்டு இன்று கல்யாணத்தை அதுவும் மாமனாருக்கு ஆபத் வந்தது என்று நிறுத்தினா வேறு எந்த மாமியார் இ அந்தப் பெண்ணைத் துணிந் வரவேற்பாள்? எந்த வாலிப அவளைக் கட்டுவான்?"

சந்தியா சற்று நிதானித்தாள். ஆனால் அவளா அத்தையின் கூற்றையும் ஜீரணிக்க முடியவில்லை 'அத்தை, ஒரு சந்தேகம்! சந்தியா ஆரம்பித்தா "அத்தை, நீங்கள் என்ன பெண் வீட்டுக்காரரா, பிள்ளைவீட்டுக்காரரா? தெரியவில்லையே பெரிசாகப் பெண்ணுக்கு வக்காலத்து வாங்குகிறீர்களே

"அடிப் பைத்தியமே! நானு ஒரு பெண்தானே அதனா தான்"

சந்தியா கடகடவென்று சிரித்தாள். "ஓ, அத்தை நீங்களும் பெண்தானா? இ தனை நாள் அது தெரியாம போயிற்றே." 'பட்'டென்று அவள் முகம் இறுகியது "நாங்களெல்லாம் பெண் இல்லாதவர்களா? உங்களுக்குத்தான் பிரமாதமா...

சுப்ரியா

பெண்மை, ஈவு, இரக்கம் இருக்கிறதா? நாங்கள் ராட்சசிகளா? எல்லாம் தனக்கு வந்தால் தெரியும். இது போல ஒரு நிலை...'' சட்டென்று நாக்கைக் கடித்துக் கொண்டாள் சந்தியா. இதுபோன்ற ஒரு நிலை? எதிரே அத்தையைப் பார்த்தாள் அவள். ஒரு கணம் அவள் பார்வை 'திக்' கென்றது. என்ன பேச்சுப் பேசி விட்டோம்?

"நீ சொன்னாயே, அதேதான் காரணம், சந்தியா. ஆனால் நீ கேட்டாயே உனக்கு இன்று ஏற்பட்டிருப்பது போன்ற ஒரு நிலை எனக்கு வந்தால் என்று ஆனால் நான் பட்டது, ப்ரியாவிற்கு வந்திருப்பது போல் ஒரு நிலை, சந்தியா அதனால்தான் முதலிலேயே சொன்னேன் என் வயதுடன் அனுபவமும் பேசுகிறது என்று".

"அத்தை" சந்தியா குற்ற உணர்வுடன் தவித்தாள். எதிரே செக்கச்சிவந்த மேனி தலை நிறைய அள்ளி முடிந்த கறுப்பும் வெளுப்புமான கூந்தல் முடிச்சு. கன்னி கழியாததால் மெருகு குலையாத 'சிக்'கென்ற உடற்கட்டு. சிதைந்த சிற்பம் போன்ற நெற்றியில் மட்டும் ஒரு கீற்று விபூதியுடன், கை, காது, கழுத்து, மூக்கு எல்லாம் உருவி விட்டதுபோல் மூளியாக நின்ற அத்தையின் உருவம் அவள் நெஞ்சைக் குடைந்தது. 'அத்தை! தப்பாகப் பேசியிருந்தால் மன்னித்து விடுங்கள். ஏதோ என் வேதனையில்..."

"இல்லையம்மா. உனக்குத் தெரிந்ததெல்லாம் அத்தை கல்யாணமாகிப் புக்ககம் படிஏறியும் கன்னி கழியாமலே விதவையானவள் என்பதுதான். ஆனால் ஏன் ஏற்பட்டது அந்த நிலை? பதினைந்தே வயதான என்னை அறுபது வயதுக் காரனுக்கு நிச்சயிக்கத் தூண்டிய நிகழ்ச்சி என்ன? தெரியுமா?"

"புரியவில்லை, அத்தை."

"எனக்கும் சின்ன அகமுடையான், அழகானவன், கம்பீரமான அழகன்தான் வர இருந்தான் சந்தியா... ஆனால்..''

✡ ✡ ✡

காவேரிக்கரையில் ஒரு செழிப்பான கிராமத்தில் பிறந்து, விளையாடி, வளர்ந்தவள்தான் காவேரி. உள்ளூர்த் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் மூன்றாவது வரை படித்தாள். மூன்றாவது! ஒரே திண்ணையில் மூலைக்கு இரண்டு மூன்று பேரை உட்கார்த்தி வகுப்புப் பிரித்து பாடம் நடத்தினார் போஸ்ட் மாஸ்டர், கம் பள்ளிக்கூட வாத்தியார் கம் ஜோசியர் கம் மணி வாத்தியார்.

கோடிவீட்டு சீதாராமையர் வீட்டில் கல்யாணம். தெரு அடைத்துப் பந்தல். மற்ற எவர் வீட்டிலும் அடுப்பெரியவில்லை. கல்யாண வீட்டில் வண்டி வண்டியாக அக்கம் பக்கத்துக் கிராமத்து தாயாதிகள் வேறு கூடினர். அவர்களுள் ஒருவரான பழனத்தூர் மிராசுதார் பாபு ஐயர் காவேரியைப் பார்த்தார். தன்னிடம் காரியஸ்தராக இருந்த ராமையா மகன் வரதனுக்கு அவளைக் கட்டி வைக்க முடிவெடுத்தார். பெண்கள் இல்லாத அந்த வீட்டில் காவேரி வந்து விளக்கேற்றுவாள். சமத்தாகக் குடித்தனம் செய்வாள் என்று தீர்மானித்தார் அவர். பையன் கட்டுக் குடுமியுடன் ராஜா மாதிரி இருந்தான். ருத்ரம், சமகம், ஸ்பஷ்டமாகச் சொன்னான். காவேரியின் அதிர்ஷ்டத்தைப் பாராட்டாதவர்கள் இல்லை. காவேரிக்கு ஒன்றும் புரியவில்லை. மிராசுதார் வீட்டு வில்வண்டி 'ஜல் ஜல்' என்று சப்திக்க அவன் குறுக்கும் நெடுக்குமாக கடை கண்ணிக்கு டவுனுக்கு வண்டி ஓட்டி வந்த போது தெருவில் விளையாடிக் கொண்டிருந்த அவள் அவனைப் பார்த்தாள்.

"ஏ குட்டி, உன் 'ஆம்படையான்' அவன்தாண்டி. நடுத் தெருவில் கூச்சமில்லாமல் ஆட்டம் போட்டுக் கொண்டு நிற்கிறாயே" என்று ஒரு கிழம் சிரித்தபோது அவளுக்குப் பாண்டிக்கோட்டை அழித்துக் கொண்டு ஓடிய வண்டிச் சக்கரம்தான் தெரிந்தது.

"சே... கோடெல்லாம் அழிஞ்சுபோச்சே" அவள் மறுபடியும் ஓட்டாஞ்சில்லியால் கோடிழுத்தாள்.

"ஏய், உள்ளே போடி... வெட்கங்கெட்டவளே.. அவர்களெல்லாம் கல்யாணத்திற்கு வருகிறார்கள். தெருவில் பாவாடையைத் தூக்கிச் செருகிக் கொண்டு நிற்காதேடீ" மறுபடி ஓர் அதட்டல்!

பின்னால் பல வண்டிகளில் பெண்கள் பலர் வர, இனி விளையாட முடியாதே என்ற ஏக்கத்துடன் மட்டும் உள்ளே திரும்பினாள் காவேரி.

காவேரியின் வீட்டிற்கும் அவர்கள் வந்தார்கள். ஏதேதோ பேசினார்கள். மந்திரம் சொன்னார்கள்.

காவேரி நெல் குதிருக்குப் பின் நின்றபடி எல்லாவற்றையும் வேடிக்கை பார்த்தாள். தை பிறந்து அறுவடை ஆனதும் முகூர்த்தம் என்று பேசிக் கொண்டார்கள். அவளுக்கு அவன் புறப்படுவதைப் பார்த்து மனசு சுறுசுறுக்கவில்லை! அவனும் அவள் பக்கம்கூடத் திரும்பவில்லை!

"அடீ பொண்ணே, சீக்கிரம் எங்கள் ஊர் மாட்டுப் பெண்ணாக வந்துவிடு. தெய்வ சங்கல்பத்தில் நல்லபடி ஆகட்டும். மாமியார் ஆயுளை

யும் சேர்த்துக்கொண்டு தீர்க் காயுசாக இரு" என்று ஒரு பெரியவர் மட்டும் வந்து அவளை வாழ்த்திச் சென்றார். அவர் 'தீர்க்காயுசாக இரு' என்றது மட்டும் பலித்து விட் டதோ?

தொடர்ந்து வந்தது ஆடி மாதம். ஆடிப் பெருக்கன்று சித்ரான்னங்களுடன், தோழி கள் பெற்றோருடன் காவே ரிக்குச் சென்றாள் சிறுமி காவேரி. பட்டுப்பாவாடை குஞ்சலம் வைத்துப் பின்னிய நீண்ட பின்னல். ம்... அடுத்த வருஷம் குழந்தை புக்ககத்தில் இருப்பாள். யார் இப்படி அழைத்துப் போகப் போகி றார்கள்? குழந்தை, தானே, தனியாக வீட்டைச் சமா ளித்தாக வேண்டும் என்று தாயார்க்காரி ஏங்கி ஏங்கி அலங்காரம் செய்திருந்தாள்.




முதல் நாள் மாலைநேரம் பூரா ஓடி விளையாடிய அலுப்பு. மறுநாள் காலையில் காவேரிக்கு சீக்கிரம் தூக்கம் தெளியவில்லை. திடீரென்று "ஐயோ... டி... அம்மா" என்ற அலறல் வாசலில் கேட்டது. 'அடப்பாவி, கல்லைப் போட் டாயே!' என்று அம்மா ஓலம் இட்டாள்.

"அடிபாவிப் பொண்ணே, பாவாடை போன இடம் தெரி யாமல் தூங்குகிறாயேடீ. ஜடம் எழுந்திருடி" அம்மா உலுக்கி எழுப்பினாள்.

காவேரிக்கு ஒன்றும் புரிய வில்லை. இதற்குள் சீதா ராமையர் வீட்டில் வண்டி கட்டிக் கொண்டு புறப்பட்டு விட்டனர். காவேரியின் அப்பா வும் புறப்பட்டார்.

"நீ எதற்கு அங்கே?" என்றார் ஒரு பெரியவர்.

"ஒரு மரியாதைக்குத்தான். கடவுள் இப்படிச் செய்து விட்டாரே! இந்த அநியாயம் அடுக்குமா?" என்று புலம்பிய படி அவரும் வண்டிக்குள் அமர்ந்த பின்தான் அவளுக்குப் புரிந்தது.

அந்தப் பையன் - அவளுக்கு நிச்சயிக்கப்பட்ட வரன்- முதல் நாள் ஆடிப்பெருக்கன்று காவேரியில் குதித்து விளை யாடி, கொடுத்தவரிடமெல்லாம் கைநீட்டி பட்சணமும், பழமும் வாங்கி உண்டவன் நதி ஆழத்தில் புதைமணலில் கால் இழுக்க இழுக்க.. அன்று மாலை நேரத்துக்குள் உடல் கிடைத்து விடலாம் என்ற நம்பிக்கையில் தான் சீதா

ராமையர் குடும்பம் புறப்பட்டிருக்கிறார்கள்!

அத்தனைதான்! காவேரி கல்யாணமாகாமலே விதவை போல நடத்தப்பட்டாள். அதிர்ஷ்டம் கெட்ட பெண்; மலைமுழுங்கி என்று ஏசினார்கள்! அதன்பின் ஓரிருவர் சம்பந்தம் பேச வந்த போதுகூட ஊரார் கலைத்து விட்டனர். அந்தப் பெண்ணின் நிறமும், அழகும் அதுவே ஆபத்துதான் என்றனர். "நாங்களாகவா தேடிப் போனோம்? அவர்களாக வந்தார்கள்; சம்பந்தம் பேசினார்கள். நிச்சயம் கூடச் செய்தார்கள். அதன்பின் இப்படியாகி விட்டது! குழந்தைக்கு என்ன ஏது என்று புரியக்கூடிய வயசுகூட இல்லை! இப்படியா... இப்படியா... ஊர்கூடி வரிந்து கட்டிக் கொண்டு அந்தப் பெண்ணைக் கரித்துக் கொட்டும்!" என்று பெற்றோர் மாய்ந்து போனார்கள். அப்போதுகூட தனக்கு ஏற்பட்ட அவலத்தை முழுதும் உணராதவளாகவே வளைய வந்தாள் காவேரி. ஆனால் வயது சுமையாக ஏறுகிறதே! அவளுக்கு ஐந்து வயது அதிகரிக்கும் முன் அவள் பெற்றோர் ஐம்பது வயது கூடியது போல் ஆனார்கள். கடைசியில் ஒரு முடிவும் வந்தது. அதுவும் பழைய மிராசுதார் பாபு ஐயர் மூலம்தான்! முன்பு தன் தாரத்தை இழந்து தமையனுக்குத் திருமணம் முடிக்க முன்வந்த அவருடைய காரியஸ்தர் ராமையர் தனக்கே ஒரு பெண் உதவி வேண்டிய நிலைக்கு ஆளாகியிருந்தார். பக்கவாதத்தால் ஒருபுறம் இழுத்து விட்ட நிலையில் சமைக்க, ஊட்ட இதர சேவைகளுடன் வீட்டையும் பொறுப்பாகப் பார்த்துக் கொள்ள ஒரு பெண் துணை அவருக்கு அத்யாவசியமாகியிருந்தபோதுதான் மீண்டும் காவேரியின் நினைவு வந்தது அவர்களுக்கு.

காவேரி ராமையரின் தாதி ஆனாள். மூன்று வருடங்கள் முகம் கோணாமல் சேவை செய்தாள். கல்யாணமாகியும், கன்னி கழியாமல் கைம்மையும் ஏற்றாள். 'அப்பாடா, காவேரிக்கு விடிமோக்ஷம் பிறந்தது! அந்த மலமும் ஜலமும் வாரிக் கொட்ட வேண்டாம் இனிமேல்" என்று முதலைக் கண்ணீர் விட்டனர் சிலர். ஆனால் அதன்பின் காவேரிக்கு சோதனைகளே அதிகரித்தன. தனக்குள்ளும், வெளியிலும் எத்தனை ஏக்கங்கள், துன்பங்களை அவள் எதிர்கொள்ள வேண்டியிருந்தது? கணவன் என்ற கைப்பொம்மை இருந்தவரை அடங்கியிருந்த அவள் மனமே, பருவம் மொட்டவிழும் அப்பிராயத்தில் அவளை எத்தனை பாடு படுத்தியிருக்கிறது? அதோடு பகலில் ஒரு வேஷமும் இரவில் ஒரு வேஷமும் போடும் எத்தனை கயவர்கள் இரவில் குட்டிச்சுவர் ஏறிக் குதித்து வந்து அவளிடம் வம்பு செய்ததுண்டு? "நாளை என் வாழைத்தோப்பை வந்து பாரேன், காவேரி எத்தனை 'பச்'சென்று மனதைப் பறிக்கிறது தெரியுமா?" என்று ஜாடையாகப் பேசி அவளை அழைத்த 'பங்காளிப் பெரியவர்கள்' எத்தனை பேர்? எல்லோர் கண்களிலும் கொள்ளி வைக்க அவள் துடித்த நாள்கள் எண்ணிலடங்குமா? சோற்றுக்கும் துணிக்கும் பஞ்சம் இல்லை என்பார்கள் அந்த நாளில். ஆனால் அதுவா சுகம்? எப்படியோ பசியும், பட்டினியும், விரதமும், அனுஷ்டானங்களும் தானாகத் தேடிக் கொண்டு உடலை ஒடுக்கி, உள்ளத்தை மடக்கி அவள் பட்டபாடு! அவளுக்கொரு துணைக்குக் கூட அல்லவா பஞ்சம் வந்துவிட்டது. உடன் பிறந்த சகோதர சகோதரிகள் உண்டு. ஆனால் யார் வீட்டில் போய் எத்தனை நாள்கள் இருக்க முடியும்? தூரத்துப் பச்சை கண்ணுக்குக் குளிர்ச்சி. அவரவர் கல்யாணம், கார்த்தி, பிரசவம், பிள்ளை வளர்ப்பு என்றால் கூலியில்லாத உழைப்பாளியாகக் காவேரியை நாடுவார்கள். அதன்பின் தன் வேலை முடிந்ததும் மெல்ல மெல்ல சொல்லம்புகளால் துரத்துவார்கள். பார்க்கப் போனால் இப்போதும் காவேரி சந்தியாவின் கணவருக்கு விபத்து என்றதும் வீட்டைக் கவனித்துக் கொள்ள ஒரு பொறுப்பான ஆளாகத்தான் வந்திருந்தாள். தன் மருமகனுடைய மகன் கல்யாணத்திற்கு வரப்போட்டிருந்த திட்டத்தைக் கொஞ்சம் முன்னால் நிறைவேற்றி, தன்னாலான உதவி செய்யலாம் என்ற நல்லெண்ணத்துடன்தான் வந்திருந்தாள்.

ஆனால் சந்தியாவின் எண்ணம் புரிந்ததும்தான் அவளுக்குப் பேரதிர்ச்சி ஏற்பட்டது. இந்த இருபத்தியொன்றாம் நூற்றாண்டு நெருங்கும் நிலையிலுமா இந்த மூடநம்பிக்கை? அந்தப் பெண் ப்ரியாவின் துரதிர்ஷ்டமா இது? அப்படியானால் சந்தியாவின் அதிர்ஷ்டம் என்னாயிற்று? அது மட்டுமா? அந்தப் பெண்ணின் எதிர்காலம்? ம்- அது எந்த நூற்றாண்டிலும் மாறப்போவதில்லை! மனைவியை இழந்தவனுக்கு உடனே வேறு பெண்! ஒரு பெண்ணை டைவோர்ஸ் செய்தவனுக்கு என்ன ஏன் என்ற விசாரணையே இன்றி மறுமணம்! ஏன், மனைவியைப் பெட்ரோல் ஊற்றி எரித்தவனுக்குக்கூட அடுத்து ஒரு பெண்ணைக் கொடுக்கத் தயாராக இருக்கும் பெற்றோர்கள்! அட, பலவிதத்திலும் உரிமை, சுதந்திரம் பெற்ற படித்தபெண்கூட தானே அந்த ராட்சசனைக் கல்யாணம் செய்து கொள்ள முன்வரும் உலகில்... ஒரு பெண்ணுக்கு மட்டும் ஏதா

வது ஆகிவிட்டால் மறுபடி ஒரு மணமகன் கிடைப்பது துர்லப மாக இருக்கும் நிலை மாறப் போவதே இல்லை. அப்படி இருக்க ப்ரியா இன்னொரு காவேரியாகிவிடக் கூடாது. ஏனெனில் ப்ரியா படித்து உத் யோகம் பார்க்கும் பெண்ணா னால்கூட,
அவளுக்கும் உடலும் உள்ளமும் இருக்கிறதே. ஆம், அது நரக வேதனைப் படக்கூடாது.

"அத்தை நீங்கள் சொல் வது சரிதான். ஆனால் நான் இதை எப்படி ஆஸ்பத்திரியில் இருக்கும் அவரிடம் போய்ச் சொல்லுவேன்? இதே இடம் முடித்து விடலாம் என்றால் அவர் ஏதாவது நினைத்தால்?"

"அசடே நீ அவனைச் சரி யாகப் புரிந்து கொண்டிருக் கிறாயா என்று பாரேன்..."

"முகூர்த்தம் குறித்தபடி நடக்காது, சந்தியா. நடத்த முடியாது" ராஜா உறுதியாகக் கூறினான்.

"ஐயோ, அப்படிச் சொல்லா தீர்கள். நீங்கள் நல்லபடி வந்த தும், உங்களுக்கு விருப்ப மில்லாவிட்டால் இந்தப் பெண் வேண்டாம்... வேறு நல்ல பெண்ணாக"

"என்ன 'சொன்னாய்?" வேதனையிலும் உரத்துக் கூவினான், ராஜா.

"முகூர்த்தம் குறித்தபடி நடக்காது என்றேன். ஆனால் அதற்கு முன்னாலேயே அதே பெண்ணுடன் நடக்கும்".

"என்னது, எப்படி?" சந்தியா திடுக்கிட்டாள்.

"சந்தியா, சர்க்கரை ஃபாக் டரியான என் உடம்பில் இந்தக் காயம் நன்றாகப் புரை ஓடி விட்டது. கால்களை எடுக்கத் தீர்மானித்திருக்கிறார்கள். ஆப ரேஷன் முடிவு எப்படி இருக் குமோ. அதனால் சந்தியா..." ராஜுவின் குரல் தழுதழுத்தது.

"சந்தியா, அவன் பேச்சில் குற்றமில்லை. அவன் ஆசை யுடன் தேர்ந்தெடுத்த பெண், அவன் கண் முன்னால் மாலை யும் கழுத்துமாக நிற்க ஆசைப் படுகிறான். அவளுக்குத் தெரி யும் அப்படிப் பண்ணாவிட்டால் அந்தப் பெண்ணின் நிலை என்னாகுமென்று! தவிர, அவன் இன்னொன்றும் சொன் னான், சந்தியா... நேற்று பிற்பகல் சாப்பாடு எடுத்துப் போனபோது வந்து... வந்து.."

"என்ன, அத்தை?"

"உன் மருமகளை நீதான் பூவும் பொட்டுமாக நின்று ஆரத்தி எடுத்து வரவேற்க வேண்டுமாம்."

"அத்தை... ஓ..." சந்தியா அதிர்ந்து குமுறினாள்.

"ஆமாம், சந்தியா. பத் திரிகை போட வேண்டாம். யாரையும் எதிர்பார்க்க வேண் டாம். நாளை மறுநாள் நல்ல முகூர்த்தம். முருகன் கோயி

---

● உணர்ச்சிகளை வாரிக் கொட்டும் முகப்பொலிவு, அழகிய உடல்வாகு, சுண்டி யிழுக்கும் தோற்றம் ஆகிய அடிப்படைத் தகுதிகளோடு, மரபு வழுவாத நல்லாசிரியரின் பயிற்சியும் சேர்ந்து விட்ட ஒரு நடனமணியின் நாட்டியம் தர முள்ளதாக அமைவது இயல்பு. பம்பாயில் மழையில்லாத ஓர் அதிசயமான ஆகஸ்ட் மாத மாலைப்பொழுதில் என்சி.பி.ஏ. (டாட்டா) அரங்கில் நிகழ்ந்த அபர்ணா ராமஸ்வாமியின் பரத நாட்டியம் அந்த வகையில் பெருமை பெற்றது.

முழுமுதற்கடவுள் கணபதி துதியோடு ஆரம்பித்த நடன நிகழ்ச்சியின் அலாரிப்பிலேயே "குருவிற்கேற்ற மாணவி' என் பதை நிரூபித்து விட்டார். அபர்ணா அங்க சுத்தம், பல வகை அடவுகள், அபிநய நேர்த்தி ஆகிய பந்தனை நல் லூர் தனித்தன்மைகளை கடும் பயிற்சி மூலம் அடைந்திருந் தார்.

அபர்ணாவின் ஆற்றலின் சக் தியே, அவரது பாவ வெளிப் பாடுகள்தாம். அதற்கேற்ற முகத் தோற்றத்தை இயற்கை யாக பெற்றிருந்தார் அவர். பாரதி கவிதையில் காதலிக்கும் வேடனாக வரும் கண்ண பிரானுக்கும் நடக்கும் உரை யாடல்களின் நவரசத்தை நன்கு சித்திரித்தார். லால்குடியின் தில்லானாவோடு நிகழ்ச்சி நிறைவு பெற்றது. நடனத் திற்கு பாடிய பிரேமா இராம மூர்த்தியின் குரல் இன்னும் மெருகேறியுள்ளது. மிருதங் கத்தில் டி. கண்ணனும், புல் லாங்குழலில் மூர்த்தியும் நடன வெற்றிக்கு உறுதுணையாக வாசித்தனர். தனது மாணவி அபர்ணா அற்புதமாக ஆடுவது கண்டு அகமகிழ்ந்து மேடையில் மந்தகாசத்துடன் காணப் பட்டார் குரு அலர்மேல் வள்ளி.

— செம்பூரான்


அபர்ணா

# ஒவ்வொரு நாளும் ஜனனம்

எஸ். ஜீஜாபாய்

நாட்டுப் பற்று நல்லியல்புடனே
நாளை மக்கள் பிறந்தால் – இனி
வீட்டுக்கொருவர் என்ற கணக்கில்
விரும்பி ஏற்போம் ஜனனம்!

உழைக்கச் சலிக்கா உள்ளமும் உடலும்
உறுதியும் கொண்டு பிறந்தால் – இனி
பிழைக்கும் நாடு; பொங்கும் வளமை
போற்றி ஏற்போம் ஜனனம்!

மனிதநேயம் மற்றவர் உணர்வை
மதிக்கும் தன்மை கொண்டால் – ஓ!
இனி ஏன் தயக்கம்? இங்கே வேண்டும்
ஒவ்வொரு நாளும் ஜனனம்!

மாறாய்

இதுவரை உலகில் மதவெறியாட்டம்
எத்தனை உயிரைத் தின்றது - அதனால்
விதவிதமான கொடுமைகள் வருமெனில்
நாளை ஜனிக்க வேண்டாம்!

பிரிவினை வாதம் பேசிடும் அற்பர்
பிறப்பார் நாளை என்றால் அந்தக்
கருவினைத் தாங்கும் அனனைக் குலமே
ககனத் திருக்க வேண்டாம்!

பெண்நிலை தன்னை மண்ணில் புதைக்கும்
பித்தர் பிறப்பார் என்றால் – என்
எண்ணம் இதுவே; மண்ணில் இனிமேல்
ஜனனம் என்றும் வேண்டாம்!

வில் உன் மகன் ப்ரியாவுடன் மாலை மாற்றிக்கொண்டு, அவள் கழுத்தில் தாலி கட்டட்டும். உன் கையால் நீ ஆரத்தி எடுத்து விடு. தம்பதியரை மாலையும் கழுத்துமாக நீயே ராஜாவிடம் அழைத்துச் செல். அவன் கண் குளிரப் பார்க்கட்டும். அப்புறம். அப்புறம்... உன் அதிர்ஷ்டம் போல ஆகட்டும். அந்தப் பெண் வந்த வேளை என்று சொல்லவில்லை. நல்லதோ கெட்டதோ எது ஆனாலும் உன் அதிர்ஷ்டம் என்பதை மறந்துவிடாதே..." காவேரி கண்டிப்பாகத் தீர்ப்புக் கூறிவிட்டாள்.

"என்ன சந்தியா பிள்ளைக்கு இரண்டாம் பேர் அறியாமல் கல்யாணம் ஆகிவிட்டதா? உறவு மனிதர்கள் என்று யாருமே இல்லையா? பெண்ணின் அப்பா, அம்மா மட்டும் தான் வந்தார்களா? இதென்ன கூத்து?..." நாலு நாள்கள் உட்கார்ந்து கம்பீரமாகச் சாப்பிட்டு விட்டு, "உப்பில்லை சப்பில்லை" என்று 'ஜோராதா' வாக விமரிசனமும் செய்து வரத் திட்டமிட்ட ஒரு தூரத்து உறவுக்காரி வம்பளந்தாள்.

"ஐயே... ராஜா எப்போதுமே இப்படித்தான்! சம்பிரதாயங்களை உடைக்க வேண்டும்; நம் கும்பலில்தான், இப்படி ஆறு வேளை சாப்பாடு ஆறு வேளை டிஃபன் என்று வதவதவென்று ஒரு கல்யாணத்தில் கூட்டம் கூடிச் சாப்பிடுவதும், அப்புறம் இது சரியில்லை, அது சரியில்லை, மரியாதை போதவில்லை என்று பழி கூறுவதுமான பழக்கம் இருக்கிறது. அது மாற வேண்டும். ஒரு கோயிலில் கல்யாணம், ஒரு ஹோட்டலில் ஒரு வேளை விருந்துச் சாப்பாடு என்று 'சிம்பிளாக' முடிய வேண்டும் என்பான் ராஜா. அப்படியே செய்து விட்டானா? கஞ்சப் பயல். பெண் வீட்டார் செலவுக்கு இவன் பயப்படுவானேன்?" இன்னொருத்தி நீட்டி முழக்கினாள்.

"இருந்தாலும் நான் போகத்தான் போகிறேன்" ராஜாவின் சகோதரி போர்க் கொடி உயர்த்தினாள். "என் தம்பியைக் கேட்கத்தான் போகிறேன். ஏண்டா, எங்கள் பெண்களைத்தான் ஒதுக்கிவிட்டு ஒரு ரதியைப் பிடித்தாய் என்றால் கல்யாணத்துக்குக்கூட எங்கள் 'சங்காத்தமே' வேண்டாம் என்று உதறி விட்டாயா? என்று கேட்பேன். அவன் சாகப்போகக் கிடக்கிறானாம். அந்தச் சமயத்தில் உனக்கென்னடி இத்தனை கொழுப்பு என்று சந்தியாவையும் கேட்பேன். என்ன பதில் சொல்கிறார்கள் பார்க்கிறேன். அதிர்ஷ்டம் கெட்ட பெண் அது. இந்தக் கல்யாணம் நின்று விடும். அப்போதாவது என் பெண்ணுக்கு ஒரு சான்ஸ் கிடைக்கும் என்று நினைத்தேன். இது எப்படி சாத்தியமாயிற்று? அப்படி என்னடா அவசரம் என்று கேட்டால் எந்த மூஞ்சியுடன் பதில் சொல்லப் போகிறார்கள், பார்க்கிறேன்..."

பதில் அப்போதே கிடைத்தது. வாக்குமூலமாக அல்ல... தந்தி ரூபமாக..

"ராஜா எக்ஸ்பயர்டு. காவேரி அத்தை..." காவேரி அத்தை? எல்லோருக்கும் புரிந்தது.

## வீட்டு நூலகம்

# "ஒவ்வொருவர் வீட்டிலும் புத்தக அலமாரி இருக்க வேண்டும்!"

டாக்டர். ஜே.ஜி. கண்ணப்பன்

பல் மருத்துவ நிபுணர் ாக்டர் ஜே.ஜி. கண்ணப்பன் அவாகள், அரசு பல் மருத் துவக் கல்லூரியில் முதல்வராக இருந்து அண்மையில் ஓய்வு பெற்றவர். இவரது 'வாய்ப் பல் மருத்துவம்' தமிழக அரசின் ாிசு பெற்றது. 1970 இல் மதகு எலிசபெத் அரசியின் அழைப்பின் பேரில் இலண்டன் ாநகர் பக்கிங்ஹாம் அரண் மனையில் அளிக்கப்பட்ட விருந் ில் கலந்து கொண்ட இவர், ாக்டர் பி.சி. ராய் விருது (1982), ிறந்த மருத்துவத் தொண்டிற் ான 'IMPAI' விருது (1983), பராசிரியர் எச்.டி.குப்தா-க்னோ விருது (1983) ஆகி வை பெற்றவர். அவர் கூறு றார்:

எங்கள் வீட்டு நூலகத்தில் 00 நூல்கள் உள்ளன. மருத் வ நூல்கள் தவிர, ஆராய்ச்சி, ாயிற்கலை, வேதங்கள் தலான தமிழ், ஆங்கில ால்கள் அவற்றுள் அடங்கும்.

என்னுடைய தாத்தா காலத் ல் இருந்தே நூல்கள் சேர்ந்து ருகின்றன. அக்காலத்தில் வர்களும் நூல்களை வெளி ட்டார்கள்; இப்போது நானும் ல்களை வெளியிடுகிறேன்.

நூலின் மதிப்பு தெரிந் பனாக இருப்பதால், என் ட்டில் நூல்கள் சேர்ந்து ாண்டே இருக்கின்றன.

வீட்டு நூலகம் நமக்குப் பல கைகளில் பயன்படுகிறது. ாவது மேற்கோள் தேவைப் டும்போது. ஏதாவதொன்றில் ம் ஏற்படும்போது அது



நமக்குக் கைகொடுத்து உதவு கின்றது. அதுமட்டுமல்ல, பொழுதைப் பயனுள்ள வகை யில் கழிப்பதற்கும், அதன் மூலம் நம் அறிவை வளர்த்துக் கொள்வதற்கும் அது நமக்கு உதவுகிறது.

மேலை நாடுகளுக்குச் செல் லும் போதெல்லாம் அங்குள்ள நண்பர்கள் கொடுத்த நூல் களை இன்றும் படிக்கின்றேன்; அவற்றைப் பாதுகாத்தும் வருகின்றேன்.

என்னுடைய நூலகத்தில், ஒருசில அரிய நூல்களும் உள்ளன. சொல்லாராய்ச்சி, மொழியாராய்ச்சி போன்ற நூல்களை கண்ணாய்ப் போற்றி வருகிறேன்.

எவர் எந்தத் துறையில் எந்த வேலையில் இருந் தாலும், வீட்டில் புத்தக அல மாரி வைத்திருக்க வேண்டும். புத்தகங்கள்தாமே அழியாத செல்வம். இன்பத்துள் இன் பம் இலக்கிய இன்பம் என்று சொல்லலாம். அந்த இன் பத்தை நுகர, வீட்டில் அந்த நூல்களின் தொகுப்பை வைத் திருக்க வேண்டும். அன்றாடம் எவ்வளவோ செலவு செய் கிறோம். ஓட்டல், சினிமா, கலை நிகழ்ச்சிகள் என்று, அந்தச் செலவோடு புத்த கங்கள் வாங்குவதற்கும் சிறிது ஒதுக்கவேண்டும்.

பள்ளிப் பருவத்திலிருந்தே நம் குழந்தைகளுக்குப் படிக் கும் ஆர்வத்தை வளர்க்க வேண்டும். ஆசிரியர் பார்த்துக் கொள்வார் என்று நாம் அலட் சியமாக இருந்துவிடக்கூடாது. பெற்றோர்கள்தாம் குழந்தை வளர்ப்பில், குழந்தை அறிவு வளர்ச்சியில் முழுக்கவனம் செலுத்த வேண்டும்.

நூல்களை வாங்கிப் படிக் கும் பழக்கம் தமிழ்நாட்டில் வளராதது ஒரு பெருங்குறை. இந்தக் குறை களையப்பட வேண்டும். அப்போதுதான் எழுத்தாளருக்கும் ஊக்கம் பிறக்கும்; பதிப்பாளர்களும் வளருவார்கள்; புதிய புதிய படைப்புகளும் வெளிவந்து கொண்டே இருக்கும்.

கவர்ச்சிச் சாதனங்கள் மிகுந்த இக்காலச் சூழலில், இளைஞர்களின் கவனம் எங் கெங்கோ செல்கின்றது. அது எதிர்காலத்துக்கு நல்லதன்று என்பதே எல்லோருடைய எண்ணமுமாகும்.

ஒரு கிழிந்த காகிதம் தரையில் இருந்தால்கூட, அதை எடுத்து அதில் என்ன இருக் கிறது என்று படித்துப் பார்க்க வேண்டும். அதில்கூட நல்ல விஷயம் இருக்குமல்லவா? என் னுடைய மாணவர்களுக்கு இதைத்தான் நான் சொல்வேன். எதையும் ஆராய்ச்சிக் கண் ணுடன் பார்க்க வேண்டும்.



வசீகரன்

**21.8.93** கவிதை இரவில் பரிசு பெற்ற கவிதை.

## இறைவா நீ ஒரு தவமிரு!

காட்டுக்குள் வேண்டாம்
கண்டதும் சுட்டு விடுவார்கள்
சந்தனக்கட்டை வீரப்பன் என்று.
கடற்கரை கஷ்டம்
சுண்டல் பையன் தொந்தரவு.
மலையுச்சி மறந்துவிடு
கோடிரூபாய் பட்ஜெட் படக்கூட்டம்
பரிவாரத்துடன் படையெடுக்கும்.
ஊருக்குள் நுழையாதே
தெருநாய் துரத்தும்.
'யாருடைய கடவுள் நீ?' என்று
ஆத்திகம் நச்சரிக்கும்
'சீ! ஓடிப்போ...' வென்று
நாத்திகம் எச்சரிக்கும்.

★★★

தண்ணீர்ப் பஞ்சம், வற்றாத லஞ்சம்
கட்-அவுட், கரன்ட் கட்
குண்டு வெடிப்பு, எய்ட்ஸ் கண்டுபிடிப்பு
ஊர்வலம், கலவரம்
எதுவுமில்லா திசைகளற்ற
பெருவெளியில்
வாடகைத் தொந்தரவற்ற நிம்மதியில்
நிர்மலனே! நீ ஒரு தவமிரு
ஒருவேளை... அவன்
உன்முன்னே தோன்றலாம்.

★★★

அவனுக்கு –
கண்களின் இடத்தில்
கருணை கசியும் இரு விளக்குகள்
சதா சத்தியம் பேசுகிற வாய்
வியர்வை மினுமினுக்கும் மேனி
எவர் முதுகிலும் குத்தாத
எவர் வயிற்றிலும் அடிக்காத
எவர் உணவையும் பறிக்காத
விசேஷ கரங்கள்.
(ஒட்டுப்போட்ட மை ஒருவேளை
விரலோரம் ஒட்டி இருக்கலாம்)
முக்கியமானவை கால்கள்.
அநீதி கண்டதும்
அஞ்சி ஓடாத கால்கள்
'க்யூ'வை மதிக்கிற கால்கள்
வீழ்ந்தாலும் மீண்டும் எழுந்து
விரைகிற கால்கள்.
அவன் இதயம் முழுக்க
பொங்கித் ததும்பும்
அன்பு...நேசம்...காதல்...
கவிதை.

★★★

யுகங்கள் கடக்குமென
தயக்கம் வேண்டாம்
இறைவா! தவமிரு...
ஒரு மனிதன்
ஒரே ஒரு மனிதன்
பிரத்யட்சம் ஆகும்வரை.

---

புத்தகங்களைப் பாதுகாப்பது என்பது மிகவும் கடினமான செயலாகும். முக்கியமாக, கறையான் வந்துவிடாதபடி பார்த்துக் கொள்ள வேண்டும். புத்தக அலமாரி நம் கண்ணுக்குத் தெரிகிறபடி இருக்க வேண்டும். எங்கோ ஒரு மூலையில் புத்தக அலமாரியை அமைத்து, புத்தகங்களை ஒதுக்கிவிட வேண்டாம். நான் சில வழக்குரைஞர்களின் வீட்டில் பார்த்திருக்கிறேன். அவர்கள் தங்கள் சட்டப் புத்தகங்களைப் பாதுகாக்க, வேப்பிலைக் கொத்தைப் பயன்படுத்தி இருப்பதைக் கண்டேன். நாமும் அந்த முறையைப் பின்பற்றலாமே!

புத்தகங்களை, புத்தக அலமாரியிலிருந்து அடிக்கடி எடுத்துப் பார்க்க வேண்டும். இல்லையென்றால், புத்தகங்களின் பக்கங்கள் அப்படியே அழுந்தி போய்விடும். படிக்காவிட்டால்கூடப் பரவாயில்லை, ஒரு பத்து நிமிடமாவது புத்தக அலமாரி முன் நின்று புத்தகங்களைப் புரட்ட வேண்டும்.

தொழில் ரீதியாகப் பார்க்கும்போது, மேலை நாட்டு மருத்துவ நூல்களை அவ்வப்போது வாங்குகிறேன். அவற்றின் மூலம் மருத்துவப் புதுமைகளை அறிந்து கொள்ள முடிகிறது. அதற்குச் செலவிடும் பணம் வீண் இல்லை. இதே போல பல நல்ல நூல்களையும் வாங்கிப் படிக்கிறேன். அவ்வப்போது, செவிக்குணவும் தருகிறேன். இலக்கியக் கூட்டங்கள் பலவற்றில் பங்கு கொள்கிறேன். தமிழறிஞர்களை அடிக்கடிச் சந்தித்து அளவளாவுகிறேன்.

எழுத்தாளர்கள் மனந்தளராமல், தங்கள் படைப்புகளை வழங்க வேண்டும் என்று கேட்டுக் கொள்கிறேன். வாசகர்கள் நூல்களை வாங்கிப் படிக்கும் பழக்கத்தை வளர்த்துக் கொள்ள வேண்டும். தமிழனிடமுள்ள ஒரு கெட்ட பழக்கம், இரவல் வாங்கிப் படிப்பதுதான். ஒரு தினசரிப் பேப்பரைக்கூட அவனால் வாங்க முடிவதில்லை. அதுகூட இரவல்தான்!

ஒரு வேண்டுகோள்; புத்தகங்களை விலைகொடுத்து வாங்குங்கள்... ஒவ்வொருவரும் தம் வீட்டில் புத்தக அலமாரியை வைக்க முயற்சி செய்யுங்கள்.

பேட்டி : பி.வி.கிரி.

காளானிலிருந்து காளான் தோன்றுதல்
(காளான் சோதனைக் குழாய் - மூலவித்து - தாய்வித்து - வித்து - காளான்)

போத்தனூர்
கே. முத்துக்குமார்

# தொழில் ரீதியில் காளான் வளர்ப்பு

வெளிநாடுகளில் காளானுக்கு நல்ல வரவேற்பு இருப்பதால் காளான் வளர்ப்புத் தொழிலை மிகப்பெரிய அளவில் செய்து டன் கணக்கில் ஏற்றுமதி செய்வதன்மூலம் நம்நாட்டின் பொருளாதாரத்தைப் பெருக்க லாம்.

சமீப காலமாக இளைஞர் கள், பட்டதாரிகள், பெண்கள், வேலையற்றோர் இந்த காளான் வளர்ப்பை பின்பற்றக் காரணம் குறைந்த முதலீடு, சுலபமான செய்முறை, யாவரும் எளிதாக கையாளக் கூடியத் தொழில், மிகக் குறைந்த, மிக எளிதாகக் கிடைக்கக்கூடிய மூலப் பொருட் கள், அவரவர்கள் சக்திக்கு ஏற்றாற்போல் செய்யக்கூடிய மிக எளியத் தொழில் காளான் வளர்ப்பு.

காளான் என்பது பூசண வகையைச் சார்ந்த ஒரு

சமீப காலமாகக் காளான் வளர்ப்புத் தொழில் வெகு வாகப் பரவி வருகிறது. முறை யாகச் செய்தால் நல்ல லாபம் தரக்கூடிய தொழில் காளான் வளர்ப்புத்தான். காளான் வளர்ப்பு சிறந்த வேளாண்மை சார்புள்ள தொழிலாக விளங்கு கிறது. நமது நாட்டில் எவ் வளவோ பண்ணைக்கழிவுகள் வீணாகிக் கொண்டு இருக் கின்றன. இந்தப் பண்ணைக் கழிவுகளை விலை மதிப்புமிக்க உணவுப்பொருளாக மாற்ற வேண்டுமெனில் அது காளான் வளர்ப்புத் தொழில் மூலம்தான் முடியும்.

நமது நாட்டில் புரதச்சத்துப் பற்றாக்குறை இன்றும் நிலவி வருகிறது. இதற்கு பயிறு வகைகளையும், மாமிசத்தை மட்டுமே நம்பி இருக்கிறோம். தற்சமயம் புரதச்சத்து பற்றாக் குறையை ஈடுகட்டுவதில் காளான் வளர்ப்புத் தொழில் பெரும்பங்கு வகிக்கிறது.

பச்சையமில்லாத் தாவரம் ஆகும். இயற்கையில் பல ஆயிரக்கணக்கான காளான் கள் இருந்தாலும் அதில் 70 வகைக் காளான்களை செயற்கை முறையில் வளர்க்க லாம். ஒவ்வொரு வகைக் காளானும் ஒரு குறிப்பிட்ட வளர்ப்புச் சூழ்நிலையிலும், ஒரு குறிப்பிட்ட அங்ககப் பொருட் களில்தான் வளரும்.

பொதுவாக இறைச்சி, மீன், முட்டை ஆகியவற்றில் புரதச்



சோதனைக்குழாய் மூலவித்து. காளான் வித்து

இதன் உற்பத்திச் செலவும் அதிகம். வெளிநாட்டு மா கெட்டும் இதற்கு மிக அதிகம்

வாலவேரியெல்லா வ யான வைக்கோல் காளா யாரும் வியாபார ரீதிய செய்வதில்லை. இது வியாப ரீதியில் செய்ய ஏற்றதுமல் லாபம் மிகக்குறைவு.

பிளிரோட்டஸ் வகையா சிப்பிக்காளான் எங்கு வேண மானாலும் வளர்க்கல உற்பத்திச் செலவும் மி குறைவு. செய்முறையும் எளிது. வீட்டளவிற்கு இ சிப்பிக்காளானை வளர் வீட்டிலுள்ளவர்களின் புர சத்து பற்றாக்குறையைப்போ வதுடன் ஓரளவு வருமானமு ஈட்டலாம்.

**சிப்பிக்காளான் (Oyster mushroo**

இக் காளான் வி போன்று முத்துச்சிப்பிய வடிவத்தைப் பெற்றுள்ளத இதற்கு இப்பெயர் ஏற்

சத்து அதிகம் உள்ளது. ஆனால், அதே நேரத்தில் கொழுப்புச் சத்தும், இதில் அதிகம் உள்ளது. அதிக கொழுப்புச்சத்து நம் உடலுக்கு தீங்கினை விளைவிக்கும். இவற்றின் விலையும் அதிக மாக இருப்பதால் எளிய மக்களால் இவற்றை உணவில் சேர்த்துக் கொள்ள எளிதில் முடிவதில்லை. சைவ உணவ உண்பவர்களும் இதை உண வில் சேர்த்துக் கொள்ள முடி யாது. ஆகவே அதிக புரதச் சத்து நிறைந்ததும், குறைந்த கொழுப்பு சத்தும் உடைய, பல மருத்துவப் பண்புகளைப் பெற் றுள்ள சைவ உணவாகிய காளானை உணவில் சேர்த்து எல்லாவகையிலும் பயன் பெற லாம்.

காளானில் பல வகைகள் இருந்தாலும் நமது இந்தியா வில் அகாரிகஸ் வகை, வால் வேரியெல்லா வகை, பிளிரோட் டஸ் வகை போன்ற மூன்று வகை காளான்கள் உற்பத்தி செய்யப்படுகின்றன. அகாரி கஸ் வகையான ஐரோப்பியக் காளான் மலைப்பிரதேசங் களில்தான் நன்கு வளரும்.

கே. முத்துக்குமார் அறுவடைக்கு தயாராக உள்ள 'காளான்களுடன்...





...து ரகக் காளான்களும், சோதனை குழாய் மூலவித்தும்

...ள்ளது. சிப்பிக் காளானில் ...டங்கியுள்ள புரதச்சத்து ...ற காளான்களில் அடங்கி ...ள புர்தச்சத்தினைக் காட்டி ...ம் அதிகம். சிப்பிக்காளான் ... முதல் 30° செ.கி. வெப்ப ...லையிலும் நன்றாக வளரும். ...கையால் நம் நாட்டில் ...ரும்பாலான பகுதிகளில் இக் ...ளானை உற்பத்தி செய்ய ...டியும். செல்லுலோஸ் என்ற ...ாருள் அதிகமாக உள்ள ...வா பண்ணைக்கழிவுகளிலும் சிப்பிக்காளானை வளர்க்கலாம். சிப்பிக்காளான் வளர்ப்பு நுணுக்கங்களும் மிகவும் எளிதானவை.

சிப்பிக்காளானை வேஸ்ட் பேப்பர், வேஸ்ட் பஞ்சு, சணல், பழைய சாக்கு, சோளக்கதிர், நன்கு காய்ந்த மிகச்சிறிய அல்லிக்குச்சிகள், கரும்புச் சக்கை இன்னும் பல பண்ணைக் கழிவுப் பொருட்களில் வளர்க்கலாம். ஆனால் எல்லாவற்றையும் விட நெல் வைக்கோலில்தான் மிக அதிகமான விளைச்சல் கிடைக்கும். மற்றெல்லா உணவுக்காளான்களைக் காட்டிலும் சிப்பிக் காளானின் உற்பத்தித் திறன் மிகவும் அதிகம். 100 கிலோ வைக்கோலிலிருந்து சராசரியாக 40 முதல் 45 நாள்களுக்குள் 100 கிலோ சிப்பிக்காளான் பெற முடியும். அதே சமயம் 100 கிலோ வைக்கோலிலிருந்து 85 முதல் 95 நாள்களுக்குள் 30 கிலோ ஐரோப்பியக் காளான்



அறுவடை செய்யப்பட்ட காளான் குவியல்

கிடைக்கும். அதேபோல் எல்லா காளானைக்காட்டிலும் சிப்பிக் காளானில் உற்பத்திச் செலவு மிகக் குறைவு. ஆகவே சிப்பிக் காளான் வளர்ப்பு ஒரு சிறந்த பண்ணைத் தொழிலாகும்.

**சிப்பிக்காளானின் மருத்துவக் குணங்கள் :**

சிப்பிக்காளானில் மற்ற காளான்களைவிட அதிகப் புரதச் சத்தான 34 சதவிகிதம் இருப்பது குறிப்பிடத்தக்கது. கொழுப்புச்சத்து மிகக் குறைவு. சிப்பிக்காளானில் நம் உடலுக்குத்தேவையான 22 முக்கிய அமினோ அமிலங்கள் உள்ளன. உடல்வளர்ச்சிக்குத்தேவையான தயாமின், ரைபோபிளோவின், ஆஸ்கார்டிக் அமிலம், நாயாசின் ஆகிய உயிர்ச்சத்துகள் சிப்பிக் காளானில் உள்ளன. சிப்பிக்காளானில் கால்சியம், பாஸ்பரஸ், இரும்புச்சத்து, சோடியம், பொட்டாசியம் போன்ற தாதுச் சத்துகளும் உள்ளன. எனவே சிப்பிக் காளான் நீரிழிவு நோய் உள்ளவர்களுக்கும், இரத்த அழுத்தம் கூடுதலாக உள்ளவர்களுக்கும், உடல் பருமனைக் குறைக்க விரும்புபவர்களுக்கும் புற்று நோய் உள்ளவர்களுக்கும் சிப்பிக்காளான் சிறந்த உணவுப்பொருளாக கருதப் படுகிறது.

இதன் செய்முறையைத் தெரிந்துகொண்டால் யாவரும் வீட்டிலேயே வளர்த்து குடும்பத்தின் அனைவரது புரதச் சத்துப் பற்றாக்குறையையும் பூர்த்தி செய்யலாம். இளைஞர்கள், வேலையற்றோர் இதை தொழில் ரீதியில் செய்து வருமானம் ஈட்டலாம்.

**சிப்பிக்காளானின் வகைகள் :**

சிப்பிக்காளானில் 12 வகைகள் உள்ளன. சிப்பிக் காளானை தாவரவியல் பெயராக பிளிரோட்டஸ் வகைகள் என்பர். தற்சமயம் எங்கள் பண்ணையில் 5 ரகச் சிப்பிக் காளான்கள் பயிரிடப்படுகின்றன. தமிழகமெங்கும் மூன்று வகைக் காளான் மட்டும் பயிரிடப்படுகிறது.

1. பிளிரோட்டஸ் சஜோர் காஜு - $M_2$
2. பிளிரோட்டஸ் சிட்ரினோ பைலியேட்டஸ் - $C_{O1}$
3. பிளிரோட்டஸ் ப்ளோரிடா - FL
4. பிளிரோட்டஸ் பிளாட்டிபஸ் - MBS
5. பிளிரோட்டஸ் சாபிடஸ் - Sa

இதில் முதலில் உள்ள பிளிரோட்டஸ் என்ற பெயர் சிப்பிக்காளான் என்பதைக் குறிக்கும். பிளிரோட்டஸுக்கு அடுத்து வரும் பெயர் சிப்பிக் காளானின் இரகங்களைக் குறிக்கும் M2, CO, FL, MBS, Sa என்பவை சிப்பிக்காளானின் சுருக்குப் பெயர்கள்.

**இடவசதியும் வெப்பநிலையும் :**

சிப்பிக்காளானை ஓலைக் குடிசை அல்லது ஈரச்சூழ்நிலை நிலவும் அறையில் வளர்க்கலாம். பொதுவாக சிப்பிக் காளான் 20 முதல் 30 டிகிரி சென்டிகிரேட் வெப்பநிலையில் வளர்ந்தாலும் 20 முதல் 26 டிகிரி சென்டிகிரேட் வெப்ப நிலையில் மிக நன்றாக வளரும். காற்றின் ஈரப்பதம் 75 சதவிகிதத்திற்கு மேல் இருக்க வேண்டும். தரையில் மணலைப் பரப்பி தண்ணீர் தெளித்து வருவதாலும் சுவரை ஒட்டி சாக்குப்படுதாக்களைத் தொங்கவிட்டு தண்ணீர் தெளித்து வருவதாலும் ஈரப்பதம் அதிகரிப்பதோடு வெப்பநிலையும் குறையும்.

**காளானிலிருந்து காளான் எடுக்கும் நிலைகள் : (or) காளான் வளர்ப்பின் நிலைகள் :**

காளான் வளர்ப்பில் நான்கு நிலைகள் உள்ளன. 1. காளான் மூலவித்து (Culture test tube) தயாரித்தல். காளான் வளர்ப்பில் மூலவித்துதான் நாம் எந்த காளானை உற்பத்தி செய்கிறோமோ அதை நிர்ணயம் பண்ணும் நிலை. ரகம், விளைச்சல், முதலியவை மூலவித்து கொண்டுதான் அமையும். மூலவித்துதான் காளான் வளர்ப்பில் அடிப்படையான முக்கிய நிலை.

2. தாய்வித்து தயாரித்தல்

3. காளான்வித்து தயாரித்தல்

4. காளான் படுக்கை (bed) தயாரித்தல்

ஒரு காளானிலிருந்து அதே இரகக் காளானை உற்பத்திச் செய்ய இந்த நான்கு நிலைகளும் முக்கியமானவை.

இதில் காளான் மூலவித்து, தாய்வித்து தயாரிக்க கொஞ்சம் அதிகமான முதலீடும், தொழில் நுட்பமும் வேண்டும். முதலில் காளான் வளர்ப்பில் ஈடுபடுபவர்கள் காளான் வித்தும், காளான் படுக்கையும் செய்து பழகிவிட்டு பிறகு காளான் மூலவித்து, தாய்வித்து உற்பத்தி செய்வது நலம்.

**காளான் விதை தயாரித்தல் :**

**தேவையான பொருட்கள் :**

நன்றாக சுத்தம் செய்யப்பட்ட சோளம், குளுகோஸ் பாட்டில், கால்சியம் கார்பனேட், தண்ணீர் உறிஞ்சாத பஞ்சு, சுத்தமான சாக்கு விரிப்பு, அல்ட்ரா வயலட் விளக்கு, அல்லது பொட்டாசியம் பர்மாங்கனேட், பார்மலின் திரவம், நுனியில் வளைந்த இரும்பு கம்பி, நீல நிற சுவாலையுடன் எரியக் கூடிய விளக்கு, ஆட்டோக்லேவ் அல்லது பிரசர் குக்கர்.

**செய்முறை :**

சோளத்தை கல், மண் இல்லாமல் நன்றாக சுத்தம் செய்துகொள்ள வேண்டும். ஒரு

பாத்திரத்தில் சோளத்தைக் கொட்டி அரைவேக்காட்டில் இருக்கும்படி நீரில் வேக வைத்துக் கொள்ள வேண்டும். பின்பு நீரை வடித்துவிட்ட சாக்கு கித்தானை விரித்து அதில் கொட்டி பரப்பிவிட வேண்டும். நீர் உலர்ந்தவுடன் 1 கிலோ சோளத்துடன் 20 கிராம் கால்சியம் கார்பனேட் என்ற அளவில் நன்றாகக் கலக்கிக் கொள்ள வேண்டும்.

கால்சியம் கார்பனேட் கலந்த சோளத்தை குளுகோஸ் பாட்டிலில் கழுத்து பாகம் வரை நிரப்ப வேண்டும். பின்பு பாட்டிலின் வாய் பகுதியை ஈரம் உறிஞ்சாத பஞ்சின் மூலம் அடைத்துக் கொள்ள வேண்டும். அதன் மேல் பேப்பர் வைத்து நூலால் கட்டிக்கொள்ள வேண்டும். ஆட்டோகிளேவ் அல்லது பிரஷர் குக்கரில் பாட்டிலில் கழுத்து பகுதி வரை மூழ்கும் அளவிற்கு தண்ணீர் விட்டு பாட்டில்களை வைக்க வேண்டும். பின்பு பிரஷர் குக்கரை மூன்று மணி நேரம் 20 பவுண்ட் பிரஷரில் சூடாக்க வேண்டும். இவ்வாறு நாம் செய்யும்போது பாட்டிலில் உள்ள நுண்கிருமிகள் அழிக்கப்படுகின்றன. குக்கரில் இருந்து பாட்டில்களை எடுத்து அதற்குரிய அறைக்குள் எடுத்து வைக்கவேண்டும்.

**இனாகுலேசன் அறை :**

இந்த அறையில் எந்தவிதமான கிருமிகளும் இல்லாமல் வைத்திருக்கவேண்டும். கிருமிகளைக் கொல்லஅல்ட்ரா வயலட் விளக்கு என்றவிளக்கைப்பயன்படுத்தவேண்டும். அல்லது பொட்டாசியம் பர்மாங்கனேட்டையும் பார்மலின் திரவத்தையும் கலந்து வரும் புகையை பயன்படுத்தலாம். தாய்வித்தை வித்து பாட்டில்களில் பரிமாறுவதற்கு முன் இந்த அல்ட்ரா வயலட் விளக்கை எரியவிடவேண்டும். எரியவிட்டவுடனே கதவை மூடி சுமார் ஒரு மணிநேரம் காத்திருக்கவேண்டும். பிறகு அல்ட்ரா வயலட் விளக்கை அணைத்துவிட வேண்டும். அடுத்து தாய்வித்து பாட்டில், நீளநிற சுவாலை உள்ள விளக்கு, நுனியில் வளைந்த இரும்புக்கம்பியுடன் அறைக்குள் செல்லவேண்டும். உள்ளே சென்ற உடன் கதவை மூடிக் கொண்டு சாதாரண விளக்கை எரியவிட்டுக் கொள்ள வேண்டும். உதவிக்கு இன்னொரு வரும் தேவை. இப்பொழுது தாய்வித்து வாயில் உள்ள பஞ்சைத் திறந்து கம்பியையும், பாட்டிலின் வாயையும் இளஞ்சூடு செய்து சூடாக்கப்பட்ட கம்பியின் உதவியால் தாய் வித்து பாட்டிலின் உள்ளே உள்ள விதையை கிளறிவிட்டுக் கொள்ள வேண்டும். இதில் சிறிதளவு விதையை கம்பியின் உதவியால் நாம் தயாரித்த காளான்விதை பாட்டிலில் போடவேண்டும். இவ்வாறு வித்து பரிமாற்றப்பட்டவுடன் உடனே அதை பசை வைத்து மூடிவிட வேண்டும். இவ்வாறு ஒரு பாட்டில் தாய் வித்திலிருந்து சுமார் 30 முதல் 40 பாட்டில்களுக்கு மாற்ற முடியும்.

நாம் தயாரித்த காளான் விதை பாட்டில்களில் பூசனம் பரவுவதற்கு 15 நாள்கள் ஆகும். இப்பொழுது வித்து வளர்ந்து பாட்டில் முழுவதும் வெண்மையாகக் காட்சி அளிக்கும். இந்த வித்தினை காளான் படுக்கையில் பரப்ப ஏற்றதாக இருக்கும். இதை வித்தாக உபயோகிக்க 20 நாள்கள் வரை வைத்திருக்கலாம்.

காளான் விதை தயாரிக்க வசதி இல்லாதவர்கள் நல்ல தரம் வாய்ந்த, காளான் விதையை விலைக்கு வாங்கி பயன்படுத்தலாம். 1 பாட்டில் காளான் விதை ரூ 7 / முதல் ரூ 10 / வரை விற்கப்படுகிறது.

**காளான் படுக்கை தயாரித்தல் :**

**தேவையான பொருட்கள் :**

நன்கு காய்ந்த வைக்கோல், 30 x 60 செமீ பாலிதீன் கவர், தரமான விதை பாட்டில் ஒன்று, சாக்கு விரிப்பு, டெட்டால், நூல், நுனியில் வளைந்த கம்பி.

முதலில் வைக்கோலை இரண்டு இஞ்ச் அளவுக்கு சிறு சிறு துண்டுகளாக வெட்டிக் கொண்டு வைக்கோலை தண்ணீரில் 2 மணி நேரம் நன்றாக வேகவைக்க வேண்டும் (ஆவி வரும்வரை) வேகவைத்த வைக்கோலை அதே சுடுதண்ணீரில் 6 மணி நேரம் ஊறவைக்க வேண்டும். இப்பொழுது வைக்கோல் ஊறுவதுடன் வைக்கோலில் உள்ள நுண்கிருமிகள் அழிக்கப்படுகின்றன. பிறகு நீரை வடித்துவிட்டுசாக்குப்படுதாவில் நிழலில் உலரவைக்க வேண்டும். வைக்கோலை ஒரு கை எடுத்துப்பிழிந்தால் தண்ணீர் கொட்டாமலும் ஆனால் ஈரமாக இருக்கும் அளவுக்கு உலர்த்த வேண்டும். வெயிலில் உலர்த்தல் கூடாது.

பாலிதீன் பையை எடுத்து அதன் அடியில் நூலினால் சுருக்கிக் கட்டி பை போல் செய்துகொள்ள வேண்டும். நமது கை, மற்றும் இரும்புக் கம்பியை டெட்டால் தண்ணீரால் நன்று கழுவி பாட்டிலிலுள்ள காளான் வித்துகளை கம்பியில் நன்கு கிளறிவிட்டு உதிரியாக இருக்கும்படி ஒரு தட்டில் கொட்டிக்கொள்ள வேண்டும்.

முதலில் பாலிதீன் பையினுள் மேற்சொன்ன பதப்படுத்தப்பட்ட வைக்கோலை 5 செமீ உயரத்திற்கு நிரப்ப வேண்டும். பாட்டிலில் இருந்து எடுக்கப்பட்ட காளான் வித்து சிறிதளவை எடுத்து வைக்கோல் பரப்பு முழுவதிலும் தூவ வேண்டும். மேலும் ஒருமுறை வைக்கோல் துண்டுகளை

முன்னொரு சமயம், பிஷப் பர்க்கினி என்பவர், தாரினால் ஆன ஒரு மருந்து பல வியாதிகளைக் குணப்படுத்தும் என்று ஒரு புத்தகம் வெளியிட்டார்.

இதைக் கண்ட ஒரு வைத்தியர் பிஷப் பார்க்கினிக்குப் பின் வரும் கடிதம் எழுதினார்.

"ஒரு மாலுமி, தன் கால் ஒடிந்துவிட்டது என்று என்னிடம் வந்தான். நான் ஒடிந்த காலை ஒன்று சேர்த்துக் கட்டி, தங்கள் தார் மருந்தைப் போட்டதில் அவன் கால் குணமாகிவிட்டது".



இந்தக் கடிதத்தைப் பிஷப் பர்க்கினி எல்லாரிடமும் வெகு பெருமையாகக் காட்டிக் கொண்டிருந்த சமயம், அந்த வைத்தியரிடமிருந்து இன்னொரு கடிதம் வந்தது.

"ரெண்டு நாட்களுக்கு முன்னர் நான் எழுதிய கடிதத்தில் ஒரு விஷயத்தைக் குறிப்பிட மறந்து விட்டேன். மாலுமியின் ஒடிந்த கால் மரத்தினால் ஆனது" என்று அக்கடிதத்தில் சொல்லிற்று!

—நாடோடி

இரண்டு அடுக்காக 5 செமீ இட வேண்டும். இதன்மீது சிறிதளவு காளான் வித்துகளை தூவவேண்டும். இம்முறையில் பாலிதீன் பை நிறையும் வரை வைக்கோலும் காளான் வித்தும் இட்டு பையின் வாயினை கட்டி விட வேண்டும். இப்பொழுது வைக்கோலும் காளான் வித்துக்களும் இடப்பட்ட பாலிதீன் பை உருளைபோல் இருக்கும்.

இந்த உருளையின் இரு புறமும் காற்றோட்டத்திற்காக 1 செமீ அளவில் இரு துளை கண்டிப்பாகப்போடவேண்டும். (துவாரம் போடவில்லையெனில் வைக்கோலும் விதையும் அழுகி விடும்) ஒரு பாட்டில் காளான் வித்து இரண்டு உருளை தயாரிக்கப் போதுமானது.

இவ்வாறு தயாரிக்கப்பட்ட பாலிதீன் உருளைப் பையை ஈரச்சூழ்நிலை நிலவும் அறையில் 20 நாள்கள் இப்படியே அதற்கு எந்தத் தொல்லையும் தராமல் வைத்திருக்க வேண்டும். வைக்கோல் உருளை முழுவதும் வெண்ணிற பூசணம் வளர்ந்து வருவது நாளுக்கு நாள் அதிகரித்து வரும்.

காற்றோட்டத்திற்காகப் போடப்பட்ட துவாரம் வழியாக அந்தந்த வெப்ப நிலைக்குத் தகுந்தாற்போல் 10லிருந்து 20 நாள்களுக்குள் காளான் மொட்டுகள் தோன்ற ஆரம்பிக்கும்.

இரண்டு மூன்று நாள்களில் காளான் நன்கு பெரியதாக வளர்ந்தவுடன் பறித்துவிட்டு பிறகு பாலிதீன் உருளையின் ஒரு பக்கத்தை மட்டும் நீள் வட்டமாக பிளேடால் கிழித்து அந்த பாலிதீன் பேப்பரை எடுத்துவிட வேண்டும். இப்போது உருளை ஒரு பக்கம் திறந்தும், ஒரு பக்கம் பாலிதீன் கவருடனும் இருக்கும். இப்பொழுது இந்த திறந்த பகுதியில் காலை மாலை இரு நேரமும் தண்ணீர் தெளித்து வந்தால் அடுத்த ஒரு வாரத்தில் மூன்றாவது அறுவடை செய்யலாம். இவ்வாறு மூன்று தடவை அறுவடை செய்யலாம்.

**விளைச்சலும் வருமானமும் :**

ஒரு காளான் வித்துப் புட்டியிலிருந்து அதாவது இரண்டு உருளையிலிருந்து மூன்று அறுவடையும் சேர்த்து 1 கிலோ முதல் 1.5 கிலோ காளான் கிடைக்கும். பொதுவாக நாம் பயன்படுத்தும் காய்ந்த வைக்கோலின் எடையில் 80 சவிகிதம் முதல் 100 சதவிகிதம் காளான் கிடைக்கும்.

ஒரு கிலோ காளான் உற்பத்தி செய்ய ஆகும் செலவு ரூ 10 முதல் 12 வரை ஆகும். காளான் கோவையில் ஒரு கிலோ ரூ 30 ஆகவும், மற்ற பகுதிகளில் ரூ 40 முதல் ரூ 50 / - வரை விற்பனையாகிறது.

**காளான் உணவு வகைகள் :**

காளானைக் கொண்டு காளான் பிரியாணி, காளான் கட்லட், காளான் பக்கோடா, காளான் குழம்பு, காளான் ஆம்லேட், காளான் குருமா, காளான் சூப், காளான் ஊறுகாய் என 15 உணவு வகைகள் இதில் செய்யலாம். இதன் மணமும் சுவையும் அனைவரையும் கவர்ந்திழுக்கும் இயல்பினை உடையது.

மேலும் காளான் பற்றிய செயல் முறை விளக்கம் வேண்டுமெனில் தொடர்பு கொள்ள வேண்டிய முகவரி :

கே. முத்துக்குமார்
சில்வர் ராக் காளான் மையம்,
பாப்பம்மாள் தோட்டம்,
போத்தனூர்,
கோவை - 641 023.

# உங்கள் ராசி பலன்

| | | | |
|---|---|---|---|
| | | கேது | |
| | கிரகநிலை | | |
| சனி-வ | | | |
| | ராகு | சூரி, புத, செ, குரு, | சுக் |

**17-10-1993 முதல் 15-11-1993 வரை**

## பாலஜோசியர்
## வித்வான் வே. லட்சுமணன்

### கிரக மாறுதல்

25-10-1993 முதல் புதன் – வக்கிர ஆரம்பம். 28-10-1993 முதல் சனி – வக்கிர நிவர்த்தி. 31-10-1993 முதல் விருச்சிக – செவ்வாய். 4-11-1993 முதல் துலா – சுக்கிரன். 9-11-1993 முதல் கும்ப – சனி. 15-11-1993 முதல் புதன் – வக்கிர நிவர்த்தி.

## ஸ்ரீமுக வருஷம், ஐப்பசி மாதம் 1ஆம் தேதி முதல் 30ஆம் தேதி வரை

### கிரக பாதசாரம்

சூரியன் – சித்திரை 3. சந்திரன் – விசாகம் 1. செவ்வாய் – விசாகம் 1. புதன் – விசாகம் 2. குரு – சித்திரை 3. சுக்கிரன் – உத்திரம் 4. சனி – அவிட்டம் 2 (வக்ரீ). ராகு – அனுஷம் 3. கேது – ரோகிணி 1.

### மேஷம் :- (அசுவினி, பரணி, கிருத்திகை 1ஆம் பாதம் முடிய)

குருபலம் கூடியிருப்பதால் வாழ்க்கையில் முன்னேற்றமான சூழ்நிலையைக் காண்பீர்கள். உடல் ஆரோக்கியமாக இருக்கும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். கற்றறிந்த மேலோர் மற்றவரால் மதிக்கப்படுவர். பதவி உயர்வு, ஊதிய உயர்வு, இடமாற்றம் ஆகியவை பெறுவதற்குரிய சந்தர்ப்பம் கனிந்து வரும். திறமையின் அடிப்படையில் முன்னேற்றம் காண்பீர்கள். பொருளாதார நிலை உயரும். பயணத்தால் பயன் உண்டாகும். வியாபாரிகள் அளவோடு வளர்ச்சி பெறுவார்கள். மாணவர்களுக்கும், ஆசிரியர்களுக்கும் உற்சாகமான சூழ்நிலை உருவாகும். நூதன முயற்சிகளில் ஈடுபடவும், பொருளை முதலீடு செய்யவும் சந்தர்ப்பம் சிறப்பாக அமையும். பிள்ளைகளின் வளர்ச்சி கண்டு பெற்றோர் மகிழ முடியும். குடும்பத்தில் திருமணம் போன்ற நற்காரியங்கள் நிகழும். திருமணம் ஆனவர்கள் இல்லறத்தில் நல்லறம் காண்பார்கள்.

ரேஸ்–லாட்டரி இனங்கள் லாபம் தரும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். நிர்வாகத் திறமை பிரகாசிக்கும். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். எதிரிகள் அடங்கிப் போவார்கள். தெய்வப்பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபடச் சந்தர்ப்பம் கனிந்து வரும். வெளிநாட்டுத் தொடர்பு ஆக்கம் தரும். தொலைதூரப் பயணம் ஒன்றை மேற்கொள்ள நேரலாம். செவ்வாய் பலம் சீராக இல்லாததால் எதிலும் பதற்றத்திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபடுவது நல்லது. நவம்பர் 4ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். 9ஆம் தேதியிலிருந்து சனி பலம் கூடுவதால் வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். திடீர் அதிர்ஷ்ட வாய்ப்புகளும் கூடிவரும். அக்டோபர் 21,23,25,27,28,29,30 நவம்பர் 2,3,5,6,9,10,11,12 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்குத் திசை நலம் தரும். துலா, கும்ப ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

### ரிஷபம் :- (கிருத்திகை 2ஆம் பாதம் முதல், ரோகிணி, மிருகசீரிஷம் 2ஆம் பாதம் முடிய)

6இல் உள்ள சூரியன், செவ்வாய், புதன் ஆகியோர் உங்கள் ஆற்றலை வெளிப்படுத்துவார்கள். எதிர்ப்புகளைக் கடந்து வாழ்வில் முன்னேற்றம் காண்பீர்கள். நிர்வாகத்திறமை வெளிப்படும். வியாபாரம் வளர்ச்சி பெறும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். மனதில் நல்ல எண்ணங்கள் உருவாகும். வழக்கு, வியாஜ்ஜியங்களில் நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் ஆதாயம் தரும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் செழிப்புப் பெறுவார்கள். குடும்ப நலம் கவனிப்பின்பேரில் சீராகவே இருந்துவரும். நிலம், மனை, வீடு போன்ற ஸ்திரச்சொத்துகளால் அனுகூலத்திற்கு இடம் உண்டு. அரசாங்கத்தாரால் ஓரிரு நன்மைகள் விளையும். அரசியல்வாதிகள் தங்கள் செல்வாக்கு உயரப் பெறுவார்கள்.

சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் மாமூலான வளர்ச்சி பாதிக்கப்படாது. குரு 6இல் உலவுவதால் பொருளாதார நிலையில் சிக்கல் உண்டாகும். தேவைகளைச் சமாளிக்கக் கடன்படவும் நேரும். வீண் செலவுகளைத் தவிர்ப்பது நல்லது. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். கூட்டுத் தொழிலில் கவனம் தேவைப்படும். வாழ்க்கைத்துணை நலனிலும், மக்கள் நலனிலும் அக்கறை செலுத்தி வருவது நல்லது. பெரியவர்களின் அதிருப்திக்கு ஆளாகாமல் அவர்களின் நல்லெண்ணங்களுக்குப் பாத்திரமாவதன் மூலமாகவும், தெய்வப் பணிகளில் தொடர்ந்து ஈடுபடுவதன் மூலமாகவும் நலம் ஏற்படும். சமுதாய நலப்பணியாளர்களுக்குப் பாராட்டுகள் குவியும். அக்டோபர் 23,25,27,28,29,30 நவம்பர் 2,3,5,6,9,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. கன்னி, துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். தெற்கும், தென்கிழக்கும் அனுகூலமான திசைகளாகும். 1,5,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

## மிதுனம் : - (மிருகசீரிஷம் 3ஆம் பாதம் முதல், திருவாதிரை, புனர்பூசம் 3ஆம் பாதம் முடிய)

குரு, சுக்கிர பலம் காரணமாக உங்கள் தோற்றப்பொலிவும், அறிவாற்றலும், செயல் திறமையும் பளிச்சிடும். கேளிக்கை, உல்லாசங்களில் ஈடுபாடு கொள்வீர்கள். உற்றார், உறவினர்கள், நண்பர்களால் நலம் உண்டாகும். மனதில் உற்சாகம் கூடும். நீண்ட நாளைய எண்ணங்களில் ஒன்றிரண்டு ஈடேறும். எதிர்ப்புகள் என்பவை விலகும். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். மாணவர்களது நிலை உயரும். பணவரவு திருப்தி தரும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்கள் செல்வாக்கும் மதிப்பும் உயரப் பெறுவார்கள். புதிய ஆடை, அணிமணிகள், அலங்காரப் பெருட்கள் ஆகியவற்றின் சேர்க்கை நிகழும். திருமணம் ஆகாதவர்கள் அதற்கான வாய்ப்பைப் பெறுவார்கள்.

திருமணம் ஆனவர்களுக்கு இல்லறத்தில் இன்பம் கூடும். மகப்பேறு பாக்கியம் கிட்டும். மக்களால் நலம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். பிள்ளைகளின் வளர்ச்சியைக் கண்டு பெற்றோர் அகம் மகிழ்வர். போட்டிப் பந்தயங்களில் வெற்றி பெற வாய்ப்புண்டாகும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களில் ஈடுபட்டு வருவாய் பெறுவீர்கள். புதிய முயற்சிகள் கூடிவரும். முக்கியமானவர்கள் உங்களுக்கு நலம் புரிய முன்வருவார்கள். அரசாங்க ஆதரவு பெற முடியும். தொழிலாளர்கள், விவசாயிகள், சமுதாய நலப்பணியாளர்கள் ஆகியோர் வளர்ச்சி காண அரும்பாடுபட வேண்டிவரும். 31ஆம் தேதி முதல் பொறியியல் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு வெளிச்சம் தெரியவரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சாதனை படைப்பார்கள். நவம்பர் 4ஆம் தேதி முதல் அதிர்ஷ்ட வாய்ப்புகள் கூடும். மாதர்களது நிலைமையில் வளர்ச்சி தெரியவரும். அக்டோபர் 18,25,27, 28,29,30 நவம்பர் 2,3,5,6,9,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. தென்கிழக்கு, வடகிழக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

---

## கடகம் : - (புனர்பூசம் 4ஆம் பாதம் முதல், பூசம், ஆயில்யம் முடிய)

குரு, சனி, செவ்வாய் ஆகிய முக்கியமான கிரகங்கள் கோசாரப்படி அனுகூலமான நிலையில் சஞ்சரிக்காததால் நீங்கள் எடுத்த காரியத்தில் வெற்றி பெறத் தடைகளும் குறுக்கீடுகளும் உண்டாகும். அங்குமிங்கும் அலைந்து திரிய வேண்டிவரும். மனதில் நிம்மதி இராது. உடல் நலம் பாதிக்கப்படும். மறதிக்கு ஆட்பட்டு மற்றையோரின் அதிருப்திக்கு உள்ளாக வேண்டிவரும். மக்களால் மனச்சலனம் ஏற்படும். வாழ்க்கைத் துணைவரால் அனுகூலத்திற்கு இடமிராது. கூட்டாகத் தொழில் செய்பவர்கள் பங்குதாரர்களிடம் பக்குவமாக நடந்து கொள்வது அவசியமாகும். வீண் சண்டை, சச்சரவுகளில் ஈடுபட வேண்டாம். நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச்சொத்துகள் விஷயத்தில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. தீயோர் தொடர்பை விட்டு விலகி, நல்லவர்களின் நட்புறவை வலுப்படுத்திக் கொள்வது அவசியமாகும். அதன்மூலம் சங்கடங்களுக்கு ஆட்படாமல் உங்களை நீங்களே காத்துக் கொள்ளலாம்.

தெய்வ காரியங்களை நிறைவேற்ற முடியாமல் தடை ஏற்படும். பயணத்தால் பயனிராது. எக்காரியத்திலும் நிதானம் அவசியம் தேவை. அலட்சியப் போக்குக்கு இடம் தரலாகாது. நவம்பர் 4ஆம் தேதி முதல் சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். புதிய ஒப்பந்தங்களில் கையெழுத்திடச் சந்தர்ப்பம் கனிந்துவரும். நிலபுலங்களால் அனுகூலம் உண்டாகும். நூதன ஆடை, அணிமணிகள், அலங்காரப்பொருட்கள் ஆகியவற்றின் சேர்க்கை நிகழும். மாதர்கள், சமுதாய நலப்பணியாளர்கள் ஆகியோர் தங்கள் நிலைமையில் வளர்ச்சி காண்பார்கள். பெண்டிரால் ஆடவர்களுக்கு அனுகூலம் உண்டாகும். உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சோதனைகள் என்பவை குறைய வாய்ப்புண்டு. இறைவழிபாடு மனச் சாந்தியைத் தரும். அக்டோபர் 18,21,23,27,28,29,30 நவம்பர் 2,3,5,6,9,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. வடமேற்கு, வடக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, ரிஷப ராசிக்காரர்கள் ஓரளவு உதவுவார்கள். 5,6,7 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## சிம்மம் :- (மகம், பூரம், உத்திரம் 1ஆம் பாதம் முடிய)

செவ்வாய், சனி ஆகியோரது பலம் காரணமாக உங்கள் ஆற்றல் பிரகாசிக்கும். எதிர்ப்புகளை முறியடித்து வெற்றி நடைபோடுவீர்கள். துணிவும், தன்னம்பிக்கையும் கூடும். பேச்சில் இனிமை தவழும். குடும்பத்தில் மனதிற்கினிய சம்பவங்கள் இடம் பெறும். மாதர்கள், சமுதாய நலப் பணியாளர்கள், அரசியல்வாதிகள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். இயந்திரப்பணிகள் ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற இனங்களில் ஈடுபாடு உள்ளவர்கள் வெற்றி வாய்ப்புகள் கூடப் பெறுவார்கள். எழுத்தாளர்களுக்கும், பத்திரிகையாளர்களுக்கும் புகழ் உண்டாகும். கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டுவரும். எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத் துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் நிலைமையில் அபிவிருத்தி காண்பார்கள். போட்டிப் பந்தயங்களில் வெற்றி கிட்டும்.

நிலம், மனை, வீடு, வாகனம் போன்ற ஸ்திரச் சொத்துகள் லாபம் தரும். அரசுப்பணியாளர்கள் தங்கள் நோக்கம் நிறைவேறப் பெறுவார்கள். மருத்துவம், இரசாயனம், விஞ்ஞானம் போன்ற இனங்கள் ஆக்கம் தரும். தொழிலாளர்களும், நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களும் முன்னணிக்கு உயருவார்கள். உடன்பிறந்தவர்களால் உங்களுக்கும், உங்களால் அவர்களுக்கும் அனுகூலங்கள் உண்டாகும். நற்பணிகளில் ஈடுபட ஆர்வம் கூடும். பயணத்தால் ஓர் எண்ணம் ஈடேறப் பெறுவீர்கள். 31ஆம் தேதி முதல் அலைச்சல் சற்று அதிகரிக்கும். உடல் நலனில் கவனம் தேவைப்படும். நவம்பர் 4ஆம் தேதி முதல் செய்தொழிலில்வளர்ச்சி தெரிய வரும். வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். பெண்களால் ஆடவர்களுக்கு அனுகூலம் உண்டாகும். இசைக்கலைஞர்கள் பாராட்டுகளுக்கு உரியவர்களாவார்கள். நவம்பர் 9ஆம் தேதி முதல் கூட்டுத் தொழிலில் கவனம் தேவைப்படும். வாழ்க்கைத் துணை நலனிலும் அக்கறை செலுத்துவது நல்லது. அக்டோபர் 18,21,23,25,30 நவம்பர் 2,3,5,6,9,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. தெற்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா, மகர ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,6,7,8,9 எண்கள் நலம் தரும்.

## கன்னி :- (உத்திரம் 2ஆம் பாதம் முதல், ஹஸ்தம், சித்திரை 2ஆம் பாதம் முடிய)

குருபலம் காரணமாக உங்கள் செல்வாக்கும், மதிப்பும், அந்தஸ்தும் உயரும். தோற்றப்பொலிவு கூடும். பொருளாதார நிலை வளர்ச்சி பெறும். நண்பர்கள், உற்றார், உறவினர்களது தொடர்பால் நலம் பெறுவீர்கள். வியாபாரம் வளர்ச்சி பெறும். சொந்தமாகத் தொழில் செய்பவர்கள் முன்னேற்றம் காண்பார்கள். வாழ்க்கைத்துணை நலம் சீராக இருந்துவரும். குடும்பத்தில் திருமணம் போன்ற நற்காரியங்கள் நிகழும். உடன்பிறந்தவர்கள் ஓரளவு உதவுவார்கள். மகப்பேறு அல்லது மக்களால் பாக்கியம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். கூட்டுத் தொழிலில் வளர்ச்சி காண முடியும். ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மேடைப் பிரசங்கிகள், ஆன்மிகவாதிகள், மருத்துவர்கள், விஞ்ஞானிகள் ஆகியோர் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். மாணவர்களது திறமை பளிச்சிடும். எழுத்தாளர்களும், பத்திரிகையாளர்களும் முன்னணிக்கு உயருவார்கள்.

நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களும், உத்தியோகஸ்தர்களும் தங்கள் கோரிக்கை ஈடேறப் பெறுவார்கள். பயணம் பயன்படும். பிறமொழி, மதக்காரர்கள் உதவ முன்வருவார்கள். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். 2இல் செவ்வாய் உலவுவதால் பயணத்தின்போதும், இயந்திரங்களில் பணியாற்றும்போதும் எச்சரிக்கையுடன் இருப்பது நல்லது. நவம்பர் மாதத் தொடக்கத்திலிருந்து செவ்வாய் பலம் கூடுவதால் வெற்றி வாய்ப்புகள் அதிகரிக்கும். எதிர்ப்புகள் என்பவை அகலும். பொறியியல், சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சுபிட்சம் காண்பார்கள். நவம்பர் 4ஆம் தேதி முதல் சுக்கிர பலம் கூடுவதால் ஆடை, அணிமணிகள், அலங்காரப் பொருட்களின் சேர்க்கை நிகழும். நிலபுலன்களால் அனுகூலம் உண்டாகும். பொன், வெள்ளி, இரத்தின வியாபாரிகளுக்கு லாபம் கூடும். நவம்பர் 9ஆம் தேதி முதல் சனிபலம் பெறுவதால் தொடர்ந்து நற்பலன்கள் ஏற்படும். எண்ணங்கள் எளிதில் நிறைவேறும். அக்டோபர் 18,21,23,25,27,28, நவம்பர் 2,3,5,6,9,10,11,12 15 தேதிகள் விசேடமானவை. வடக்கு, வடகிழக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 3,5,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## துலாம் :- (சித்திரை 3ஆம் பாதம் முதல், சுவாதி, விசாகம் 3ஆம் பாதம் முடிய)

கோசாரப்படி கிரகநிலை திருப்திகரமாக இல்லாததால் உங்கள் அபிலாஷைகள் ஈடேறத் தடைகள் இருந்துவரும். அலைச்சலும் உழைப்பும் கூடும். மனதில் நிம்மதி குறையும். உடல் ஆரோக்கியம் சீராக இராது. உஷ்ணாதிக்கத்தால் பாதிப்பு ஏற்படும். வீண் அலைச்சலைத் தவிர்ப்பது அவசியமாகும். மற்றையோரிடம் அன்புடன் பழகி வந்தால் அவர்களின் அதிருப்திக்கு ஆளாகாமல் தப்பலாம். கோபத்தைக் குறைத்துக் கொள்வது நல்லது. எக்காரியத்திலும் பதற்றத்திற்கு இடம் தராமல் பொறுமையுடன் ஈடுபட்டால் சங்கடங்களுக்கு ஆளாகாமல் தப்பலாம். பேச்சில் நிதானம் அவசியம் தேவை. நூதன நட்பு வேண்டாம். புதிய முயற்சிகளில் ஈடுபட இந்த நேரம் சிறப்புடையதாகாது. மாமூலான பணிகளில்கூட அதிகம் அக்கறை தேவைப்படும்.

நிலபுலங்கள் விஷயத்தில் விழிப்புடன் ஈடுபடுவது நல்லது. அரசு விவகாரங்களில் நற்பயன் காண்பதரிது. பொருள்வரவு குறைந்து செலவுகள் அதிகரிக்கும் நேரமிது. சிக்கன நடவடிக்கை அவசியம் தேவை. ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்களில் ஈடுபட வேண்டாம். குடும்பத்தில் சிறு சிறு பிரச்னைகள் அவ்வப்போது உண்டாகும். வேளாவேளைக்கு உணவு உட்கொள்ள முடியாமல் போகும். உடன்பிறந்தவர்களால் பிரச்னைகள் சூழும். நண்பர்கள், உற்றார், உறவினர்களால் அதிகம் அனுகூலமிராது. மக்கள் நலம் கவனிப்பின்பேரில் சீராகவே இருந்துவரும். கணவன், மனைவி உறவுநிலை சாதாரணமாகக் காணப்படும். தெய்வப்பணிகளிலும், தருமப்பணிகளிலும் ஈடுபடுவதன் மூலம் மனஅமைதி பெற வாய்ப்புண்டு. உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்களிலிருந்து விடுபட வழி பிறக்கும். அக்டோபர் 18,21,23,25,27,28,29,30 நவம்பர் 5,6,9,10,11,12,15 தேதிகள் ஓரளவு சிறப்பானவை. வடக்கும், தென்கிழக்கும் அனுகூலமான திசைகளாகும். மிதுன ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## விருச்சிகம் :- (விசாகம் 4ஆம் பாதம் முதல், அனுஷம், கேட்டை முடிய)

விரயத்தில் கிரகங்கள் கூடியிருப்பதாலும், ஜன்ம ராசியில் ராகு சஞ்சரிப்பதாலும் அலைச்சல் அதிகரிக்கும். பொருள்வரவைக் காட்டிலும் செலவுகள் கூடும். உடல் ஆரோக்கியம் சீராக இராது. குடும்ப நலம், மக்கள்நலம், சகோதரநலம் யாவும் சாதாரணமாகவே இருந்துவரும். பெற்றோர் நலனில் அக்கறை தேவைப்படும். செய்தொழிலில் விசேடமான வளர்ச்சியைக் காண்பதரிது. விரும்பத்தகாத இடமாற்றமோ, நிலைமாற்றமோகூடச் சிலருக்கு ஏற்படும். மேலதிகாரிகள் அதிருப்திக்கு ஆளாகாமல் இருப்பது நல்லது. குடும்பப் பெரியவர்களின் ஆலோசனைகளை மதித்து ஏற்றுக் கொள்வதன் மூலமாகவும், அதன்படி நடப்பதன் மூலமாகவும் நலம் விளையும். அரசாங்கத்தாரால் செலவுகள் ஏற்படும். வியாபாரிகள் அகலக்கால் வைக்க வேண்டாம். மாணவர்கள் படிப்பில் முழுமையான அக்கறை செலுத்துவது அவசியமாகும்.

இயந்திரப் பணியாளர்களும், இஞ்சினீயர்களும் பொறுப்புடன் காரியமாற்றுவது நல்லது. அரசுப் பணியாளர்கள் ஓரிரு சோதனைகளுக்கு ஆட்படுவார்கள். பயணத்தின்போது பாதுகாப்புத் தேவை. 3இல் சனியும், 11இல் சுக்கிரனும் உலவுவதால் சமுதாய நலப்பணியாளர்கள் பாராட்டுகளுக்கு உரியவர்களாவார்கள். தொழிலாளர்களும், விவசாயிகளும் எவ்வளவுக்கெவ்வளவு பாடுபடுவார்களோ அவ்வளவுக்கவ்வளவு பயன் பெறுவார்கள். சினிமா, சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் தங்கள் திறமைக்குரிய வகையில் வளர்ச்சி பெறுவார்கள். மாதர்களால் ஆடவர்களுக்கு அனுகூலம் உண்டாகும். 31ஆம் தேதி முதல் பிரச்னைகள் ஓரளவு விலகும். நவம்பர் 4ஆம் தேதி முதல் சுபச்செலவுகள் கூடும். 9ஆம் தேதி முதல் சனி 4ஆமிடம் மாறுவதால் எடுத்த காரியத்தை முடிக்க அதிகம் பாடுபட வேண்டிவரும். நிலபுலங்களால் ஓரளவு அனுகூலம் பெற வாய்ப்புண்டாகும். அக்டோபர் 18,21,23,25,27,28,29,30 நவம்பர் 2,6,9,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. மேற்கு, தென்கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மகர, கன்னியா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 6,8 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## தனுசு :- (மூலம், பூராடம், உத்திராடம் 1ஆம் பாதம் முடிய)

11ஆம் இடத்தில் உள்ள கிரகங்கள் உங்களது பராக்கிரமத்தை வெளிப்படுத்துவார்கள். எதிர்ப்புகளைக் கடந்து வாழ்வில் வெற்றிநடை போடுவீர்கள். எடுத்த காரியங்கள் இனிது நிறைவேறும். செல்வாக்கும் மதிப்பும், வாழ்க்கை வசதிகளும் கூடும். நண்பர்கள் உதவிக்கரம் நீட்டுவார்கள். பெரும் புள்ளிகளின் தொடர்பு கிட்டும். அதனால் பயனும் உண்டாகும். அரசு விவகாரங்கள் ஆக்கம் தரும். வியாபாரிகள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். புதிய இனங்களில் முதலீடு செய்து லாபம் பெறச் சந்தர்ப்பம் கூடிவரும். ஒன்றுக்கு மேற்பட்ட இனங்களின் மூலம் வருவாய் கிடைக்கப் பெறுவீர்கள். மக்களாலும், உடன்பிறந்தவர்களாலும், உற்றார், உறவினர்களாலும் அனுகூலம் உண்டாகும். மிடுக்காக நடைபோடுவீர்கள். புத்திக்கூர்மை வெளிப்படும். அதனால் மற்றையோரின் பாராட்டுகளுக்குப் பாத்திரமாவீர்கள்.

தெய்வப்பணிகள் நிறைவேறும். மக்களின் வளர்ச்சி கண்டு பெருமிதம் கொள்வீர்கள். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். கணவன், மனைவியிடையே களிப்புறவு கூடும். கூட்டுத் தொழில் லாபம் தரும். வேலையில்லாதவர்கள் வேலைவாய்ப்பு கிடைக்கப் பெறுவார்கள். ஏற்கெனவே வேலையில் உள்ளவர்கள் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவை கிடைக்கப் பெறுவார்கள். திருமணம் ஆகாதவர்களுக்குத் திருமணம் ஆகும். திருமணம் ஆனவர்கள் மகப்பேறு அல்லது மக்களால் பாக்கியம் பெறுவார்கள். மருத்துவர்கள் கைராசிக்காரர்கள் என்ற பெயரைப் பெறுவார்கள். கலைத்துறை ஆக்கம் தரும். குடும்பத்தில் நற்காரியங்கள் நிகழும். அபிலாஷைகள் எளிதில் நிறைவேறும். அக்டோபர் 18,21,23,25,27,28,29,30 நவம்பர் 2,3,9,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, வடக்குத் திசைகள் அனுகூலமானவை. துலா ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,3,5,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மகரம் :- (உத்திராடம் 2ஆம் பாதம் முதல், திருவோணம், அவிட்டம் 2ஆம் பாதம் முடிய)

10இல் உள்ள கிரகங்கள் உங்கள் செல்வாக்கையும், மதிப்பையும் உயர்த்துவார்கள். புனிதமான

காரியங்களில் ஈடுபாடு கொள்வீர்கள். நல்லோர் தொடர்பால் நலம் பல பெறுவீர்கள். அரசுப் பணிகள் ஆக்கம் தரும். அரசியல்வாதிகளும், சமுதாய நலப்பணியாளர்களும் தங்கள் மதிப்பு உயரப் பெறுவார்கள். வியாபாரம் வளர்ச்சி பெறும். கணிதம், விஞ்ஞானம், எழுத்து போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் முன்னணிக்கு உயருவார்கள். எலக்ட்ரானிக், கம்ப்யூட்டர் இனங்கள் ஆதாயம் கொண்டுவரும். மருத்துவர்கள் நற்பெயர் பெறுவார்கள். நிறுவன, நிர்வாகத் துறைகளைச் சேர்ந்தவர்களுக்கு செழிப்பான பாதை புலப்படும். இயந்திரப்பணிகள் ஆக்கம் தரும். சட்டம், காவல், இராணுவம் போன்ற துறைகளைச் சேர்ந்தவர்கள் சாதனை படைப்பார்கள். எதிர்ப்புகள் என்பவை அகலும்.

வழக்கு, வியாஜ்ஜியங்களில் நல்ல திருப்பத்தை எதிர்பார்க்கலாம். சினிமா, நாடகம், நாட்டியம், சங்கீதம் போன்ற கலைத்துறைகளைச் சேர்ந்தவர்கள் வெற்றி நடைபோடுவார்கள். கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டு வரும். மாணவர்களது நிலை உயரும். பிற மொழி, மதங்களைச் சேர்ந்தவர்கள் உதவி புரிவார்கள். ஏற்றுமதி, இறக்குமதி இனங்கள் ஆதாயம் தரும். 31ஆம் தேதி முதல் செவ்வாய் பலம் கூடுவதால் துணிச்சலான காரியங்களில் ஆர்வம் கூடும். சங்கடங்கள் என்பவை விலகும். நிலபுலங்களால் அனுகூலம் பெறுவீர்கள். இஞ்சினீயர்கள் தங்கள் எண்ணம் ஈடேறப் பெறுவார்கள். உடன்பிறந்தவர்களால் அனுகூலம் உண்டாகும். தொழிலாளர்களுக்கும், உத்தியோகஸ்தர்களுக்கும் மாமூலான வளர்ச்சி பாதிக்கப்படாது. அக்டோபர் 18,21,23,25, 27,28,29,30 நவம்பர் 2,3,5,6,10,11,12,15 தேதிகள் சிறப்பானவை. தெற்கு, வடக்குத்திசைகள் அனுகூலமானவை. கன்னி, துலா, விருச்சிக ராசிக்காரர்கள் உதவுவார்கள். 1,4,5,6,9 எண்கள் அதிர்ஷ்டமானவை.

### கும்பம் :- (அவிட்டம் 3ஆம் பாதம் முதல், சதயம், பூரட்டாதி 3ஆம் பாதம் முடிய)

9இல் உள்ள குரு உங்கள் அறிவாற்றலைப் பிரகாசிக்கச் செய்வார். நல்லவர்களது நட்புறவு மூலமாக நலம் பல பெறுவீர்கள். பொருள்வரவு கூடும். ஸ்பெகுலேஷன், கொடுக்கல்-வாங்கல் இனங்கள், லாபம் தரும். மக்களால் பெற்றோருக்கும், பெற்றோரால் மக்களுக்கும் அனுகூலங்கள் உண்டாகும். புனிதமான காரியங்களில் ஈடுபாடு கூடப் பெறுவீர்கள். மகான்கள், சாதுக்கள் ஆகியோரது தரிசனம் கிட்டும். அதனால் மனமகிழ்ச்சி கூடும். தந்தையார்ஜிதச் சொத்துகள் கிடைக்கவும் சந்தர்ப்பம் கனிந்துவரும் உத்தியோகஸ்தர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். மருத்துவர்கள், இரசாயனத்துறைகளைச் சேர்ந்தவர்கள், ஆசிரியர்கள், பேராசிரியர்கள், மதபோதகர்கள் ஆகியோர்

# மகாத்மா அஞ்சலி

பாரதி சுராஜ்



அந்நியன் ஆட்சியிலே அல்லல் பட்டுழன்ற மாந்தர்
தம் துயர் நீக்க எண்ணித் தவம் பல புரிந்தான் நாட்டில்
கொன்றிடல் வேண்டாமென்றான்! குவலயமுற்றும் அன்பால்
என்றுமே இணைந்து வாழ இயற்றினான் விந்தை எந்தை!

சத்தியம், அகிம்சை என்ற சால்புடைக் கண்களோடும்
நித்தியப் பொருளின்மீது நீங்கிடா நினைப்பினோடும்
பத்திய உணவினோடும் பயன் எண்ணா உழைப்பினோடும்
எத்திக்கும் போற்ற வாழ்ந்த எந்தைதாள் சிந்தை செய்வோம்!

தங்கள் மதிப்பும், அந்தஸ்தும் உயரப் பெறுவார்கள். கலைத்துறை ஆக்கம் தரும்.

கடிதப் போக்குவரத்து நற்செய்தி கொண்டு வரும். உடன்பிறந்தவர்கள் உதவுவார்கள். மகப் பேறு பாக்கியம் கிட்டும். திருமணம் ஆகாதவர்கள் அதற்கான வாய்ப்பைப் பெறுவார்கள். திருமணம் ஆனவர்கள் இல்லறத்தில் நல்லறம் காண்பார்கள். குடும்பநலம் திருப்தி தரும். அலைச்சல் குறையும். நண்பர்களாலும், உற்றார், உறவினர்களாலும் நலம் உண்டாகும். புதிய பொருட்களின் சேர்க்கை நிகழும். மாதர்கள் தங்கள் நிலை உயரப் பெறுவார்கள். 31ஆம் தேதி முதல் செய்தொழிலில் விசேடமான வளர்ச்சிக்கு இடமுண்டு. வேலையில்லாதவர்கள் வேலைவாய்ப்பைப் பெறுவார்கள். வேலையில் இருப்பவர்களுக்குப் பதவி உயர்வு, இடமாற்றம், ஊதிய உயர்வு ஆகியவை கிடைக்கும். இயந்திரப் பணியாளர்களுக்கும், இஞ்சினீயர்களுக்கும் செழிப் பான பாதை தெரியவரும். எதிர்பாராத ஓரிரு செலவுகளும் அவ்வப்போது உண்டாகும். அக்டோபர் 18,21,23,25,27,28,29,30 நவம்பர் 2,3,5,6,9,12,15 தேதிகள் சிறப்பானவை. வடகிழக்கு, தென் கிழக்குத் திசைகள் அனுகூலமானவை. மிதுன, துலா ராசிக் காரர்கள் உதவுவார்கள். 3,6 எண்கள் அதிர்ஷ்டமானவை.

## மீனம் : - (பூரட்டாதி 4ஆம் பாதம் முதல், உத்திரட்டாதி, ரேவதி முடிய)

குரு, செவ்வாய் ஆகியோருடைய சஞ்சாரம் திருப்திகரமாக இல்லாததால் உங்கள் மனதில் நிம்மதி குறையும். இங்குமங்கும் அலைந்து திரிய வேண்டிவரும். உடல் ஆரோக்கியம் சீராக இராது. வீண்வழக்கு, வியாஜ்ஜியங்களில் ஈடுபட நேரலாம்; எச்சரிக்கை. உஷ்ணாதிக்கம் காரணமாகப் பாதிப்பு உண்டாகும். பேச்சில் சூடான வார்த்தைகளை உதிர்க்காமல் இருப்பது நல்லது. அதன் மூலம் குடும்பத்திலும், வெளிவட்டாரத்திலும் உங்கள் மதிப்பைக் காத்துக் கொள்ள முடியும். பொருள் வரவு தடைப்படும். செலவுகள் சற்று அதிகரிக்கும். கைப்பொருள் காணாமல் போவதற்கும் இடமுண்டு என்பதால் விழிப்புடன் இருப்பது நல்லது. கணவன், மனைவி உறவுநிலை சீராக இராது. மக்கள் நலம், சகோதர நலம், பெற்றோர் நலம் ஆகியவற்றில் கவனம் தேவைப்படும்.

பயணம் தவிர்ப்பது நல்லது. இயந்திரங்களின் பக்கம் நெருங்கும் போது பாதுகாப்புத் தேவை. புதன், சனி ஆகியோர் அனுகூலமான நிலையில் சஞ்சரிப்பதால் பிரச்னைகளைச் சமாளிக்கும் சக்தி பிறக்கும். தொழிலாளர்கள், சமுதாய நலப்பணியாளர்கள், விவசாயிகள், வியாபாரிகள், ஆகியோர் ஓரளவு வளர்ச்சி காண்பார்கள். நவம்பர் 4ஆம் தேதி முதல் கலைத்துறைகளைச் சேர்ந்தவர்களுக்கும், மாதர்களுக்கும் பிரச்னைகள் விலகி, நல்ல திருப்பம் உண்டாகும். உத்தியோகஸ்தர்கள், ஆசிரியர்கள், அரசுப் பணியாளர்கள் ஆகியோருக்கெல்லாம் விரும்பத் தகாத இடமாற்றமோ நிலைமாற்றமோ ஏற்படும். மேலதிகாரிகளின் அதிருப்திக்கு ஆளாகாமல் இருப்பது அவசியமாகும். தெய்வப்பணிகளில் தொடர்ந்து ஈடுபடுவது நல்லது. உங்கள் ஜனன கால ஜாதகப்படி தற்சமயம் யோக பலம் உள்ள தசை, புக்தி, அந்தரங்கள் நடைபெறுமானால் சங்கடங்கள் என்பவை குறைவடையும். தீயவர்களின் தொடர்பை விட்டு விலகி, நல்லவர்களின் நட்புறவை வலுப்படுத்திக் கொள்வதன் மூலமாகவும் நலம் பெற வாய்ப்புண்டாகும். அக்டோபர் 18,21,23,25,27,28,29,30, நவம்பர் 2,3,5,6,9,10,11,15 தேதிகள் சிறப்பானவை. வடமேற்கு, வடக்குத் திசைகள் நலம் தரும். ரிஷப, மகர ராசிக்காரர்கள் உதவுவார்கள். 5,7,8 எண்கள் நலம் தரும்.

ஃ

# இத்தனை நாளா

# இது தெரியாமல் போயிடுச்சே!...

பணம் எவ்வளவு செலவானாலும் பரவாயில்லை, குழந்தைகளை நன்கு படிக்க வைக்க வேண்டும் எனத் தீர்மானித்து, பிள்ளைகளைக் கான்வென்டில் சேர்த்தோம்.

அலுவலக விஷயமாக என் கணவர் அடிக்கடி 'டூர்' போய்விடுவதால், குழந்தைகளது படிப்பு விஷயத்தில் நான்தான் கவனம் செலுத்த வேண்டி யிருந்தது.



ஆனால், எனக்கு இங்கிலீஷ் அவ்வளவாகத் தெரியாத காரணத்தினால், டீச்சர்களிடம் குழந்தை களது படிப்பு பற்றி விசாரிக்க முடியாமலும், பாட சம்பந்தமாகக் குழந்தைகள் கேட்கும் சந்தேகங் களுக்கு பதில் சொல்ல முடியாமலும் நான் பட்ட அவஸ்தை சொல்லி மாளாது.

பம்பாயிலிருந்து வந்திருந்த என் அத்தை பெண்ணிடம் இதுபற்றி பேசிக்கொண்டிருந்த போது, "கல்யாணமாகி பம்பாய் போன புதிதில் நானும் உன்னைப் போல இங்கிலீஷ் பேச முடியாமல் திண்டாடினேன்.

விவேகானந்தா கல்வி நிலையம் பற்றி கேள்விப் பட்டு, அவர்கள் நடத்தும் "கரஸ்பாண்டன்ஸ் கோர்ஸில்" சேர்ந்து இங்கிலீஷ் கற்றுக்கொண்டேன். தமிழ்நாட்டில் வசிக்கும் உனக்கு இந்த 'கோர்ஸ்' பற்றி தெரியாமல் போய்விட்டதே என்று கோபித்துக் கொண்டாள்.

உடனே, நான் விவேகானந்தா கல்வி நிலையத் திற்கு ஒரு போஸ்ட் கார்டு எழுதிப்போட்டேன்.

பயிற்சி விபரங்கள் கிடைத்த மறு வாரமே, 'கோர்ஸில்' சேர்ந்தேன்.

பாடங்கள் எல்லாம் ஈஸியா புரியற மாதிரி, ரொம்ப சிம்பிளா இருந்ததால், நேரம் கிடைக்கும் போதெல்லாம் பாடங்களைப் படிச்சு பிராக்டிஸ் செய்தேன்.

இப்போ என்னால, பயமில்லாம சகஜமா இங்கிலீஷில் பேச முடிகிறது. குழந்தைகளுக்குப் பாடம் சொல்லிக் கொடுக்க இந்த கோர்ஸ் எனக்கு ரொம்ப 'யூஸ்ஃபுல்லா' இருக்கு.

இத்தனைநாளா இந்த கோர்ஸ் பத்தி தெரியாம போயிடுச்சேன்னு வருத்தமா இருந்தாலும், இப்போவாவது இந்த கோர்ஸ்ல சேர்ந்து இங்கிலீஷ் பேசக் கத்துக்கிட்டோமேன்னு ரொம்ப சந்தோஷமா இருக்கு.

–Mrs. துர்கா பிரசாத்

வீட்டிலிருந்தபடியே ஓய்வு நேரத்தில் தபால் மூலம் நீங்களும் இப்பயிற்சியினை மேற்கொள்ளலாம்.

"நேர்முகப் பயிற்சியும் உண்டு"

பயிற்சி பற்றிய விபரமறிய கீழ்க்காணும் முகவரியில் இன்றே தொடர்பு கொள்ளுங்கள்.




## விவேகானந்தா கல்வி நிலையம்

9, நடேசன் தெரு, தி.நகர், சென்னை-600 017.

# தலைமறைவு

மூ. விவேகானந்தன்

துயர இருள் எங்கும் வியாபித்திருந்தது. ஊரே அழுது முடிந்த வேளையில் வானம் அழத் தொடங்கியது. "அதோ,... அதோ காரு வந்துட்டுது. காரு வந்துட்டுது.." என்று பலரும் கூச்சலிட அந்த ஊரே எதிர்பார்த்துக் கொண்டிருந்த கடைசிப் பேருந்தும் வந்தது. அதிலிருந்து இரண்டு காவலர்கள் மட்டும் இறங்கினார்கள். அவர்களைப் பார்த்ததும் என்னையும் அறியாமல் எனக்குள் சிறு நடுக்கம். யாரை எதிர்பார்த்து அந்த ஊரே அங்கு குழுமியிருந்ததோ அந்த நபர் வராதது அவர்களுக்குப் பெருத்த ஏமாற்றத்தை அளித்தது.

"இன்னிக்கு விசாழக்கிழமையில்ல... அதான் 'போலீஸ் பீட்'டுக்கு வந்திருக்கு" என்று ஒருவர் பேசியது லேசாகக் காதில் விழுந்தது. •அதில் ஒரு நிம்மதி ஏற்பட்டது.

"பாவி மவன் இந்த பஸ்லயாவது வருவான்'னு நெனைச்சேன். ஏமாத்திப்புட்டானே..., எலே தம்பி,... உங்கப்பனுக்கு நீ கொள்ளி போடுவ, 'எனக்குத் தீப்பந்தம் புடிப்பேன்'னு நெனைச்சேன்டா... இப்ப உனக்குக் கொள்ளிபோடக்கூட உங்கப்பன் வர்லியடா சாமி... நான் என்ன பண்ணுவேன்டா..." என்று தன் எதிரே தலைமாட்டில், விளக்கெரிய பிணமாகக் கிடந்த பேரனைப் பார்த்துக் கதறிக் கதறி அழுத அந்தப் பாட்டியின் ஒப்பாரி ஒவ்வொருவரையும் கண் கலங்கச் செய்தது.

சாக்குப் படுதாவிற்குள் என்னையும், அழுக்குத் துணிக்குள் என் உணர்ச்சிகளையும் அடக்கிக் கொண்டு ஏதோ துக்கத்திற்கு வந்த தூரத்து உறவுக்காரனைப் போல்கூடக் காட்டிக்கொள்ள முடியாமல் வெளியூர் பிச்சைக்காரனைப் போல், ஒரு பைத்தியக்காரனைப்போல் காட்சியளித்த என்னை யாருக்குமே அடையாளம் தெரியவில்லை. அடையாளம் தெரியவில்லை என்பதைவிட என்னை யாரும் லட்சியம் செய்யவில்லை என்று கூடக் கூறலாம். அதில் அவர்களுக்கு அக்கறையுமில்லை.

"என்னமோ உச்சந்தலையில வலிக்குதுன்னு ரெண்டு நாளா சொன்னான்..., வெறகு சுமந்ததுனால வலிக்குமா; தவிடு வறுத்து ஒத்தடம் குடுக்கிறேன்னு சொன்னேன்... புள்ள தலைவலியால துடிச்சுப்புட்டான்... உடம்பும் கொஞ்சம் கொஞ்சமா சூடாயி காய்ச்சல் அதிகமாயிட்டுது... பயந்து போயி டாக்டர்கிட்ட தூக்கிக்கிட்டுப் போனோம்... அவரு கோரிமேட்டு ஆசுபத்திரிக்கு தூக்கிக்கிட்டுப் போங்க... பையனுக்கு மூளைக்காய்ச்சல் நோயி... 'ரொம்ப சீரியசு'ன்னு கைய விரிச்சுட்டாரு...

"பாட்டி, அப்பா எப்ப வருவாரு!... நான் செத்துப் போயிடுவேன் போலிருக்கு?... என்ன வந்து ஆசுபத்திரிக்கு இட்டுகிட்டுப் போவாறா?... அவரைப் பாக்கணும் போலிருக்கு பாட்டி, நான் சாவறத்துக்குள்ள வந்துடுவாறா?..." அப்பனைப் பத்தி இப்படி ஏங்கி ஏங்கியே புள்ள சோந்து போயிட்டாம்மா...?

"எங்களுக்குக் கையும் ஓடல... காலும் ஓடல... அந்த நேரம் பாத்து பக்கத்துத்தெரு கருங்குழி ரெட்டியாரு புண்ணியம் கட்டிக்கிட்டாரு... அவரு தயவால ஒரு காரை எடுத்துக்கிட்டு கோரிமேடு பெரிய ஆசுபத்திரிக்குப் போனோம்... ஆனா கடலூரைத் தாண்டறத்துக்குள்ள, எங்க புள்ள எங்கள வுட்டுட்டுப் போயிட்டாம்மா" என்று புதிதாக துக்கம் விசாரிக்க வந்தவளிடம் மூச்சு விடாமல் சொல்லி முடித்தாள் அந்தப் பாட்டி.

"பாபுவோட அப்பாவுக்கு சேதி தெரியுமா?... அவரு வந்துட்டாரா?" என்று கேட்கவே, அந்தச் சோகத்திலும் சட்டென்று ஆத்திரம் பொங்க, "அவனைப் பத்திக் கேட்காதீங்க... இந்தப் பாழும் வயிறு பத்தி எரியுது. அவன் எனக்குப் புள்ளையும் இல்ல; செத்துப் போன இந்தப் புள்ளைக்கு அப்பனும் இல்ல... படுபாவி எங்க போனானோ...? என்ன ஆனானோ..?" என்று அர்ச்சிக்க ஆரம்பித்துவிட்டாள் பாபுவின் பாட்டி.

"விசாழக்கிழமை, பொணம் தங்கக் கூடாது. எல்லாம் கொஞ்சம் ஒதுங்கிப் போங்க... பொணத்தைக் குளிப்பாட்டணும்..." பெரியவர் ஒருவர் உரக்கக் குரல் கொடுத்துக் கொண்டே பெஞ்சு மேல் கிடந்த அந்தச் சிறுவனருகில் வந்து அவன் முகத்தையே உற்றுப் பார்த்தார். பொங்கி எழுந்த கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஆக வேண்டியதைக் கவனித்தார்.

பச்சை மூங்கிலில் கட்டப்பட்ட பாடையில் அச் சிறு

வனைத் தூக்கிவைத்து சுடு காட்டிற்கு எடுத்துச் சென்ற போது வீட்டைச் சுற்றி ஊர் மொத்தமும் குலுங்கிக் குலுங்கி அழுதது.

இனியும் அங்கு நிற்பதற்கு எனக்கு வலுவில்லை. பீறிட்டு வந்த கண்ணீரை யாரும் அறியா மல் அழுக்குத் துணிக்கு அன்ப ளிப்பாய் தந்துவிட்டு, அவ் விடத்தை விட்டு அமைதியாக அகன்றேன்.

ஊர் மக்களோடு சேர்ந்து அந்த இறுதி ஊர்வலத்தில் கலந்துகொள்ளும் அருகதை யற்ற நான், சாக்குப்படுதாவை இழுத்து நன்றாகத் தலையை மறைத்துக் கொண்டு வாய்க் கால் ஓரமாக உள்ள புளிய மரங்களுக்கிடையே புகுந்து வேகமாகச் சென்று முன்ன தாகவே சுடுகாட்டை வந் தடைந்தேன். பிணத்தை எரிப்ப தற்கு வைக்கப்பட்டிருந்த மேடையினை ஒட்டியுள்ள பெரிய மரமொன்றில் ஏறி ஒளிந்து கொண்டேன்.

மழை நின்றுவிட்டது. மழை யால் ஏற்பட்ட சேற்றையும், சகதியையும் கடந்து சுடு காட்டை அடைந்து பாடையை இறக்கிக் கீழே வைத்தார்கள். அந்தப் பிணத்திற்குச் செய்ய வேண்டிய இறுதிச் சடங்கு களைச் செய்து, இறுதி மரியா தையும் செய்யப்பட்டது. மேலே விறகுக் கட்டைகளையும், வறட்டிகளையும் அடுக்கி னார்கள்.



“ஏங்க சின்னப் பண்ண, பையனோட அப்பன் கொள்ளி போட வருவானா...? முகத்தை மூடிடலாங்களா...? இல்ல சித்த நாழி பாக்கலாமா...?” என்று நாட்டாமை வினவினார்.

“வேண்டாம் நாட்டாம, பொணத்த வூட்டுல வேணும்னா காக்க வைக்கலாம். சுடு காட்டுல காக்க வைக்கக் கூடாது... அவன் எங்க இனிமே வரப்போறான்...அவன் எந்த ஊர்ல எங்க சுத்துறானோ...? சேதி கெடச்சிதோ... இல் லியோ...?”

“சேதி கெடைக்காமலா இருக்கும்...? எப்படியும் அவன் காதுக்கு சேதி எட்டி யிருக்கும்...”

“என்ன நாட்டாம, அவ் வளவு தெடமா சொல்றீங்க...?” என்று ஆச்சர்யத்தோடு கேட் டார் சின்னப் பண்ணை.

“அவன் வர்றதும் போறதும் நமக்குத் தெரியாம இருக்கலாம். ஆனா அவன் பெங்களூர் போனாலும், பம்பாய் போனா லும் அவன் தங்கற எடம் அவன் சம்சாரத்துக்குத் தெரியாம இருக்காது. அவன் ஏதோ பெரிய சிக்கல்ல மாட்டியிருக் கான் போலிருக்கு. போலீசுகூட தேடுறதா கேள்வி. அதனால தான் அந்தப் பொண்ணும் விஷயத்தை வெளியில சொல்

லாம மெண்ணு விழுங்குறா...? போவட்டும் அது அவங்க குடும்ப விஷயம்..."

"கடைசியில... ஒரே புள்ள யல்ல பறிகொடுத்துட்டாங்க!"

"அதுக்கென்ன பண்றது... அதது தலையெழுத்த மாத்தியா எழுதிட முடியும்... ஆவுற வேலய பாருங்க..."

சுடுகாட்டில ஊர் பெரிய வங்க பேசிக்கிட்டதெல்லாம் மரத்தின் மேலிருந்த எனக்குத் தெளிவாகவே கேட்டது.

"சரி, சரி பையனோட சித்தப்பனைக் கூப்பிடுங்க... அவன் கையால கொள்ளி போடட்டும்... பெத்தவனைவிட பாடுபட்டுப் பொறுப்பா வளத்தவன் அவன் தான்... அவன் கையாலேயே எல்லாம் நடக்கட்டும்" என்று உத்தரவு போட்டார்.

"நிறுத்துங்க, நிறுத்துங்க..." என்று கத்திவிட வேண்டு மென்று தோன்றியது". "இங்கு எதற்காக வந்தேன்...? ஏன் வந்தேன்...?" என்று என்னுள் பெரும் போராட்டம் நடந்தது. என்றாலும் என் கல் நெஞ்சம் சிறிதும் கரையவில்லை. சற்று நேரத்தில், தட்டில் சிறிதாக எரிந்து கொண்டிருந்த கற்பூரம் அந்தச் சுடுகாட்டில் பெரிதாகச் சுடர்விட்டுப் பிரகாசமாக ஒளியை உமிழ்ந்தது.

உடைந்து போன மண் சட்டியும், உதிர்ந்துபோன பூக்க ளும், கிழிந்துபோன தென்னை மட்டையையும் தவிர மற்ற எல்லாப்பொருட்களையும்எடுத் துக் கொண்டு அந்தச் சுடு காட்டை விட்டு வெகு தூரம் சென்று கொண்டிருந்தது கூட் டம். கேட்பாரற்ற அநாதை யைப் போன்ற உணர்வு முதன் முறையாகக் கொப்புளித்தது.

அதுவரை மரத்தின்மீது மறைந்துகொண்டிருந்த நான் சட்டென்று கீழே இறங்கி கொழுந்துவிட்டு எரியும் பிணத் தின் முன் வந்து நின்றேன். இதயமே நின்றுவிடும் போல் ஓர் அசைவற்ற தன்மை. எரிந்து கொண்டிருந்தது பிணம் மட்டுமல்ல; என்னுடைய உயிரும்தான். இதுநாள் வரை அழுகையே என்னவென்று அறியாத எனக்கு அழுகை அழுகையாக வந்தது. மரத்துப் போன என் மனதில்கூட சிலிர்ப்பு தோன்றியது. அழுகை பீறிட்டதால் ஓ'வெனக் கதறினேன். எரிந்து கொண் டிருக்கும் அந்த உடலை மூன்று முறை வலம் வந்து கால் மாட்டில் விழுந்தேன். யாருக் குமே வணங்காத தலை, தரை யில் விழுந்து வணங்கியது. மீண்டும் விழுந்தேன். தடுக்கி விழுந்தேனா, இல்லை தள் ளாடி விழுந்தேனா தெரிய வில்லை. ஆனால் என் வாழ்க் கையில் வழுக்கி விழுந்து விட்டேன் என்பதை மட்டும் பளிச்சென்று உணர்ந்தேன்.

"மகனே, மரணம் உன்னை இவ்வளவு சீக்கிரத்தில் மடித் துக் கொள்ளுமென்று மயக்கத் தில்கூட நான் நினைக்கவில்லை யடா...? உன்னைப் பெற்றதைத் தவிர வேறொரு கடமையையும் நான் உனக்குச் செய்யவில்லை யடா...? உன்னைச் சீராட்டிப் பாராட்டி வளர்க்கத்தான் முடியவில்லை என்றால் உன் சிதைக்குக்கூட தீமூட்டத்திராணி யில்லையடா எனக்கு...? தலை மறைவாகிவிட்டான் தகப்பன் என்ற தலைக்குனிவு ஏற்படு வதற்கு முன்பாகவே நீ மறை வாகிவிட்டாயா...? உடம்பு சரியில்லாமல் நீ நோயால் துடித்தபோது ஓடிவந்து உனக்கு மருத்துவம் பண்ண முடியாத பாவியடா நான்...! ஜெயிலுக்குப் போனவன் பிள்ளை என்று உன்னை யாரும் ஏளனம் செய்துவிடக் கூடாதே என்று இவ்வளவு நாள் தலை மறைவாக இருந்தேனடா...! ஆனால்... அய்யோ... என்னைத் தலைகுனியச் செய்துவிட்டு நீ தலைமறைவாகி விட்டாயே...!

"அருமை மகனே...! உன் தாயோடு சேர்ந்து நான் வாழ்ந்த தில்லை. உன்னை உச்சி முகர்ந்து வாரி அணைத்தது மில்லை. சேராத இடத்தில் சேர்ந்ததனால் இப்படிக் கிட்டிய சுகத்தையெல்லாம் விட்டொழித்த பாவியடா நான்...! இப்படிப்பட்ட வாழ்வும் ஒரு வாழ்வா? உறவுகளை உதறி விட்டு நான் போனேன், நீயோ இந்த உலகத்தையே உதறி விட்டுப் போய் விட்டாயே...! எனக்கு அறிவு வந்துவிட்டது, புத்தி தெளிந்துவிட்டது. மகனே, உன் மீது ஆணை, இந்த நெருப்பின்மீது ஆணை, ஈனத் தனமான செயல்களில் இனி ஈடுபட மாட்டேன். சதிகாரர் களின் பிடியில் என்னைப் போல் சிக்கி ஊரை மறந்து, உறவை மறந்து, மதுவால் தன்னையும் மறந்துபோன மனித மிருகங்களுக்கு என் வாழ்க்கை ஒரு பாடமாக இருக் கட்டும்... உன் மறைவால் ஏற் பட்ட அனலில் என்னை நானே வாட்டிக் கொள்கிறேன். என் செயல்களால் நான் தேடிக் கொண்ட வெறுமையை, பகைமையை உன் புன்சிரிப் பால், பாசத்தால் ஈடு செய்து கொண்ட புண்ணியனே, என்னை மன்னித்துவிடு, என்னை மன்னித்துவிடு" என் றெல்லாம் வாய்விட்டுக் கதற வேண்டும் என்று உள்ளம் துடித்தது. ஆனால் துக்கத்தின் இறுக்கத்தில் நா எழவில்லை. அசையவில்லை.

இதோ புறப்பட்டுவிட்டேன். என் மனைவியைப் பார்த்து ஆறுதல் கூற அல்ல; என் தாயைப் பார்த்து ஆறுதல் கூற அல்ல; நான் செய்த தவறு களுக்கு மன்னிப்புக் கேட்கக்கூட அல்ல; தலைமுறையையே இழந்து தலைமறைவாக வாழ்ந்த குற்றத்திற்குத் தண்ட

னையைப் பெறப் புறப்பட்டு விட்டேன்; பாவத்தைக் கரைக்க பரிகாரம் தேடப் போலீஸ் நிலையத்தை நோக்கிப் புறப் பட்டேன்.

திடீரென்று என் தோளில் ஒரு கை பலமாகப் பின்புறத்தி லிருந்து அழுத்தியது. "டேய் யாருடா நீ..." என்று கையி லிருந்த டார்ச் லைட்டை முகத் தில் அடித்தபடி வினவினர் இரவு பீட்டுக்கு வந்த காவ லர்கள். அப்பொழுது சுடு காட்டை நோக்கிக்கையில் ஒரு லாந்தருடன் ஓடிவந்த வெட்டி யான் காவலர்களை நோக்கி, "சாமி, அவன் ஒரு பைத்திய முங்க... அசலூரான்... திருட னில்லீங்க..." என்று முன்பின் தெரியாத எனக்குப் போகிற போக்கில் நற்சான்று வழங்கிய படி வேகமாகப் போய்க் கொண்டிருந்தான்.

வலியச் சென்று உண் மையைச் சொன்னால்கூட என்னை ஏற்றுக்கொள்ள மாட் டார்கள் போல் தோன்றியது. சற்றுத் தயங்கித் தயங்கி நின்ற என்னை, "டேய்...! இந்த இருட்டு வேளையில ஏண்டா இப்படி திரியற... போ... போ... எங்கா வது சத்திரம் சாவடியில போய் மொடங்க வேண்டியது தானே...?" என்று எச்சரிக்கை செய்து அனுப்பினார்கள்.

இருட்டில் வழி தெரியாமல் மனம்போன போக்கில் நடக் கின்றேன் பழிக்கு அஞ்சி, பாவத்திற்கு அஞ்சி, இனியும் என் உறவினர்களின் முகத்தில் விழிக்க அஞ்சி, வெறுப்பில், வேதனையின் இறுக்கத்தில் நடக்கின்றேன். இதோ எனக்கு ஒரு புதிய அங்கீகாரம்... நான் பைத்தியக்காரன்...! பைத் தியக்காரன்...!! கல்லாக இருந்த என் நெஞ்சத்தைக் கல்லாகத் தான் சுமந்து கொண்டு நடக் கின்றேன். ஆனால் அவை யெல்லாம் சுக்குநூறாக நொறுங் கிய கற்கள் என்பது எனக்கு மட்டும்தானே தெரியும்...! ❀

# குரு பெயர்ச்சி விழா



நிகழும் ஸ்ரீமுக வரு புரட்டாசி மாதம் 18ஆம் தே (4.10.93) திங்கட்கிழமை மதி மணி 2.52க்கு ஸ்ரீகுரு பகவ கன்யா ராசியில் இருந்து து ராசிக்கு எழுந்தருளுகிறார்.

இதை முன்னிட்டு ஸ்ரீல குரு மகா சந்நிதானம் அவர் திருவுள்ளப் பாங்கின் வ ணம் திருக்கைலாய பரம்ப தருமை ஆதீனத்துக்குச் சொ மான மயிலாடுதுறை வள்ளல கோயில் ஸ்ரீவதான்யேஸ் சுவாமி (குரு ஸ்தலம்) தேவ தானத்தில் ஸ்ரீமேதா தட்சிண மூர்த்தி பகவானுக்கு இ சார்ச்சனையும் விசேஷ அ ஷேக அலங்கார ஆராதன களும் நடைபெறுகிறது.

குரு பெயர்ச்சியினால் இ முறை அனுகூலம் பெறும் ரா கள் : கன்னி, தனுசு, கும்ப மேஷம், மிதுனம்.

பரிகாரம் செய்ய வேண்டி ராசிகள் : சிம்மம், துலா விருச்சிகம், மகரம், மீன ரிஷபம், கடகம்.

பரிகாரம் செய்து அனுகூ பெற ஸ்ரீலஸ்ரீ குருமஹா சந் தானம் உத்தரவுப்படி மயில துறை, வள்ளலார் கோ தேவஸ்தானக் கண்கான பாளர் பொது மக்களை கேட் கொள்கிறார்.

## சினிமா ஆசை

★ எஸ்.கே.ஜெ.எல் ஃபைன் ஆர்ட்ஸின் முழு நீள நகைச் சுவை நாடக அரங்கேற்ற விழா சமீபத்தில் நடிகர் சங்கத்தில் நடந்தது.

டைரக்டர் மகேந்திரன், எழுத்தாளர் ராஜேந்திர குமார், பாடலாசிரியர் காதல் மதி மற்றும் பலர் விழாவில் கலந்து கொண்டனர்.

கதை, வசனம், இயக்கத்தை எஸ். கோதண்டனும் மேற்பா வையை ஜெ. லோகநாதனு கவனித்தனர்.

ஜெகத் ரக்ஷ்மசிம்மன், ெ குமார், பி.எம். மோகன், எ ஹரிகுமார், சகாயராஜ், தா நிர்மலா ஆகியோர் நாடகத்தி பங்கேற்று சிறப்பாக நடி தனர்.

தயாரிப்பு : கே.பி. ஸ்ரீ கிருஷ்ணன்.

— நாகரா

பாண்டிச்சேரி தட்டாஞ் சாவடியில் சுப்பையா நகர் பகுதி உள்ளது. இது மில் தொழி லாளர்களின் குடியிருப்பு. அங்கே சக்தி விநாயகர் கோயில். பக்கத்தில் புற்று. அதில் முத்துமாரியம்மன். காலம் காலமாய் அங்குள்ள மக்கள் இந்த அம்மனைத் தொழுதுதான் எல்லா காரியத் தையும் தொடங்குவர். ஆடி மாதம் ஆனால் கூழ் காய்ச்சி வழிபடுவார்கள். பொங்கல் இடுவார்கள். குலதெய்வ மாகவே கருதி வந்தார்கள். இந்தக் கோயிலைச் சீரமைக்க வேண்டும், புதுப்பிக்க வேண் டும். தரிசனம் செய்யும் மெய் யடியார்களுக்கு வசதி செய்து தரவேண்டும், சுற்றுச் சூழலை சீராக்க வேண்டும், தெய்வம் இருக்கும் இடம் தூய்மையாய் துலங்கவேண்டும் என்றெல் லாம் இக்கோயிலின் தலைவர் ராமதாஸ் கருதினார். எண்ணி னால் மட்டும் போதுமா. சீர் செய்ய பணம் வேண்டுமே புதுப்பிக்க நிதி வேண்டுமே. ற்றியிருப்பவர்களின் ஆதரவு வேண்டும். தான் நினைப்பது போலவே மற்றவர் நினைத் தால்தானே இச்சீரிய பணி நடைபெறும். லட்சக்கணக்கில் பணம் யார் தருவார். தொழி லாளர் பகுதி அது. ஐந்து ரூபாய் பத்து ரூபாய் என்று வசூல் செய்யலாம். ஆனால் ஆயிரக் கணக்கில் எப்படி? மனக் காட்டை ராமதாஸுக்கு கற் பனைக் குதிரையைத் தட்டிவிட டிக்கடி நினைவு பிரண்டே டும். கோயிலைச் சீரமைத்து, துப்பித்து இந்தத் திருப் பணி எப்படி முடியும். ராம தாஸ் ஒரு கம்யூனிஸ்ட்வாதி. வருக்கு நம்பிக்கை அதிகம் இருந்தாலும் ஆழ்ந்த பக்திக்கு ரியான உதாரணங்கள் இவ து வாழ்க்கையில் இல்லாமல் பாய்விட்டன. கோயிலை சீர் செய்து, கும்பாபிஷேகம் செய்து ட வேண்டுமெனத்தீர்மானித்து குழு அமைத்தார் ராமதாஸ். குழு அமைத்தாரே ஒழிய சல்லிக்காசு தேறவில்லை. சீர் செய்யத் தேவையான வருவாய் வந்தபாடில்லை. தவித்தார். ஏங்கினார் ராமதாஸ். தனது இந்த நியாயமான கோரிக் கையை அதே மில்லில் அக் கவுண்டென்டாக இருக்கும் நாக ராஜனிடம் புலம்பித் தள்ளினார் ராமதாஸ். நாக ராஜன் பரமஹம்ஸ புவனேஸ் வரி சுவாமிகளின் அணுக்கத் தொண்டர். சுவாமிகளின் பணி விடையில் மகிழ்பவர். ராம தாஸைத் தேற்றி முக்கிய அங்கத்தினரோடு பரத்வாஜ ஆச்ரமம் சென்று சுவாமி களை பார்த்து விபரம் சொல்ல லாம் என்று தேதி குறித்து தகவலை ஆச்ரமத்திற்கு தொலைபேசி மூலம் சொல்ல சுவாமிகளைச் சந்திப்பதற்கு முன்னறிவிப்பைத் தெரிவித் தார்கள்.




நாகராஜன் சுவாமிகளிடம் ராமதாஸை அறிமுகப்படுத்தி, இவர்களின் கோரிக்கை இது தான் என்று மேற்கண்ட விபரம் தெரிவித்தார்கள். இன்று முதல் இரண்டு மாதம், கோயில் திருப்பணி செவ்வனே நடக்கும். நாம் ஒரு கருவிதான். ஈச்வரன் காரியம். நாம் இத்திருப்பணி செய்ய பாக்யம் செய்திருக்க வேண்டும். இந்த வாஸ்து யந்தி ரத்தை கோயிலில் வடகிழக்கு மூலையில் ஸ்தாபிக்க வேண் டும். ஜகன்மாதா துணை நிற் பாள் என்று அருள்வாக்கு வழங் கினார் சுவாமிகள். புவனேஸ் வரி சுவாமிகளே குடமுழுக்கு செய்ய வேண்டுமெனத் தீர் மானித்து சுவாமிகளை அன் போடு அழைத்தனர். யாகம் தொடங்கியது. வேதம் ஒலித் தது. பூர்ணாஹுதி செய்யப் பட்டது. புதுவை முதல்வர் குட முழுக்கு விழாவைத் தொடங்கி வைக்க, ஐந்து கால யாக பூஜைகள் வேதகாலப்படி நடந் தேறியது. புதுவை மாநில அமைச்சர் ரங்கசாமி அவர்கள் திருக்குடை தாங்க புவனேஸ் வரி சுவாமிகள் கும்பாபிஷேகம் செய்து வைத்தார்கள். புற்றுக் கோயிலில் முத்துமாரியம்ம னுக்கு அபிஷேகம் செய்தார் சுவாமிகள். அப்போது அங்கு அம்மனுக்கு முன் நடப்பட்ட சூலமானது ஆடியது.

அது ஆடினால் ஏதாவது அபசகுனம் அங்கு நடக்கும். இந்தத் தகவலை ராமதாஸ் சுவாமிகளிடம் தெரிவித்தார். அம்பிகையின் சூலதுர்காவை பிரார்த்தித்து சுவாமிகள் நீர் தெளிக்க ஆடிய சூலம் நின்றது. ராமதாஸுக்கு ஆச்சர்யம். ஆனந்தக் கூத்தாடினார். 'ஓம் சக்தி ஓம்சக்தி' என்று பரவசத் துடன் கோஷமிட்டார்கள். பாவக் குவியலைப் பொசுக்கவும், மனக்கோணலை நிமிர்த்தவும், துர்நிமித்தங்களைப் போக்க வும் தேவியைத் தொழ வேண் டும். பூஜைகள் ஒழுங்காய் நடக்க வேண்டும். ஆராதனையை விடாமல் செய்யவேண்டும். தேவி மகிழ்ந்தால் மக்களுக்கு எல்லா நலன்களையும் அருளு கிறாள். கஷ்டத்தைப் போக்கு பவள் அவளே. பயத்தை நீக்கு பவள் அவளே. இன்பத்தைத் தருபவள் அவளே. இன்னலை நீக்குபவள் அவளே என சுவாமிகள் அம்பிகையின் அருள் அமுதத்தைக் கூறிக் கொண்டே ஆசி வழங்கி சென்னைத் திரும்பினார்கள். ராமதாஸும் குழுவினரும் பிரி யாமல் பிரிந்தார்கள். ○○

# தமிழில் தவறுகளை அறிவோம்

திரு. மூத்து- கண்ணப்பர்



இணை, துணை, உதவி, கூட்டு

இச்சொற்கள் பதவிகளின் தரத்தை நிலையைக் குறிப்பனவாகும்.

இணை : தமக்கு இணையான பதவியை அல்லது பணியை வகிக்கின்றவர்களைக் குறிக்கும். ஆங்கிலத்தில் joint என்று கூறப்படும். அலுவலகத்தில் இயக்குநர் (Director) அல்லது ஆணையர் (Commissioner) அல்லது பேராசிரியர் ஒருவர் இருந்து அவருக்கு இணையான நிலையில் மற்றொருவர் பதவியில் இருந்தால், அவருக்கு 'இணை' என்னும் முன்னடைவைப் பயன்படுத்த வேண்டும்.

(எ-டு) இணை இயக்குநர் (Joint Director) இணை ஆணையர், (Joint commissioner), இணைப் பேராசிரியர் (Joint Professor)

துணை : தமக்குச் சிறிது கீழ்நிலையில் பதவி வகிப்பவருக்குத் 'துணை' என்னும் முன் னிணைப்பைப் பயன்படுத்தல் வேண்டும். இது 'Deputy' என்னும் ஆங்கிலச் சொல்லுக்கு நேரானது.

(எ-டு) துணை இயக்குநர் (Deputy Director) துணை ஆணையர் (Deputy Commissioner) துணை ஆய்வாளர் ( Deputy Inspector) இவ்வாறே பிறவும்.

உதவி : துணை நிலைக்குச் சற்றுக் கீழ் நிலைப் பதவியினரைக் குறிக்க இச்சொல்லைப் பயன்படுத்த வேண்டும். (எ-டு) உதவி இயக்குநர் (Assistant Director) உதவி ஆணையர் (Assistant Commissioner) உதவிப் பேராசிரியர் (Assistant. Professor) 'உதவி' என்பது ஆங்கிலத்தில் "Assistant" என்னும் சொல்லுக்கு நேரானது.

'கூட்டு' என்னும் ஒரு சொல்லையும் பதவி யின் நிலையைக் குறிக்கப் பயன்படுத்துவ துண்டு.

'Additional' என்னும் ஆங்கிலப் பதத்துக்கு நேரானது இது. தலைமையாளருக்குக் கூட்டாக கூடுதலாகப் பணியாற்றுபவர் என்பது பொரு (எ-டு) கூட்டு இயக்குநர் (Additional Director), கூட ஆணையர் (Additioanl Commissioner) கூட்டாசிரிய (Additional Teacher)

உயர் மட்டம்

இச்சொல் பெரும்பாலும் தவறா பயன்படுத்தப்படுகிறது. 'High level' என்னு ஆங்கிலச் சொற்றொடர் இவ்வாறு தமிழ பெயர்க்கப்படுகிறது. பல குழுக்கள் (Committe அமைக்கப்படுகின்றன. இவற்றில் 'High l committees'யும் ஒன்று. இந்த ஆங்கிலச் செ றொடரை 'உயர் மட்டக் குழு' என்று தமிழ சொல்கிறார்கள். அது தவறானது. 'உ என்னும் சொல்லுக்கு மாறான சொல் அல்ல 'மட்டம்' என்பது? உயர்ந்த X மட்டமான.

'மட்டப் பலகை என்பது வீடு கட்டும் கெ தர்கள் கற்களை அடுக்கிச் சுவர் சமநிலைய உள்ளதா என்று பார்க்கப் பயன்படுத்து மரத்தாலான பலகை; 'level' என்னும் ஆங்கி சொல் 'மட்டம்', மட்டமான முன்னும் பின் மாய் இராமல் ஒரே அளவில், பரப்பில் சீர உள்ள என்னும் பொருள்களைத் தருவ பொருளைச் சரியாகப் புரிந்து கொள்ளா பலர் 'High level' என்னும் ஆங்கிலத் தொடருக 'உயர்மட்டம்' என்று நேர் மொழி பெயர்ப்பா கொள்கின்றனர். அது சரியன்று. 'மட்டக்கு என்றால் தாழ்ந்த, மட்டமான குழு அல்ல அமைப்பு என்றல்லவா பொருள்படும்,

'உயர்நிலைக் குழு' என்று கூறுவதுதான் யானது; பொருத்தமானது. இனியேனும் உ வோடு மட்டத்தை இணைக்காமல் உ நிலையைப் பயன்படுத்துவார்களாக.

எதிர் கட்சி - எதிர்க்கட்சி

'எதிர்கட்சி' என இடையில் ஒற்று 'க்' மி மல் எழுதினால் அது வினைத் தொகையாகு அதாவது மூன்று காலத்தில் எதையும் தெ வாய்க் குறிப்பிடாமல், பொதுவாய் உள்ள

எனவாகும். எதிர்த்த கட்சி, எதிர்க்கின்ற கட்சி, எதிர்க்கும் கட்சியென முறையே இறந்த காலம், நிகழ் காலம், எதிர் காலம் என முக்காலங்களிலும் விரியும். சண்டை போடும், போரிடும் கட்சி என்று பொருள்படும்.

'எதிர்க்கட்சி' என்றால் எதிரான கட்சி. எதிரின் கண் அமர்ந்துள்ள கட்சி. (7ஆம் வேற்றுமை உருபும் பயனும் உடன்தொக்க தொகை.) அதாவது. ஆளும் கட்சிக்கு எதிராக அமர்ந்து, ஆளும் கட்சியினர் ஏதாவது தவறு செய்தாலும், முறையற்று நடந்தாலும், அக்கட்சியின்பால் குறைபாடுகளைக் கண்டாலும் அவற்றைச் சுட்டிக்காட்டித் திருத்த முயலும் கட்சி/அரசியல் அமைப்பு என்று பொருள்படும்.

எனவே, இரு சொற்களுக்கும் உள்ள வேறுபாட்டினை அறிந்து உரியவாறு' பயன்படுத்த வேண்டும்.

**எது? ஏது? யாது? என்ன?**

இவை மூன்றும் வினாச் சொற்களே.

'எது?' என்றால் அதுவா? இதுவா? எது? எனப் பகிர்ந்து சுட்டி உரியதைக் கண்டறியப் பயன்படுத்தும் சொல்.

'ஏது?' என்றால் எப்படி வந்தது? எப்படிக் கிடைத்தது? என்று ஆய்ந்து அறியப் பயன்படுத்தும் சொல்.

(எ-டு) இது ஏது? இது சில சமயங்களில் 'இல்லை' என்னும் பொருள்படும். 'என்னிடத்தில் ஏது?' என்று கூறுகிறோம். அப்படிச் சொன்னால் என்னிடத்தில் இல்லை என்னும் பொருளையல்லவா உணர்த்துகிறது?

'யாது?' என்னும் வினா வேண்டிய செய்தியை அல்லது உண்மையை/நிலையை/செயலை அறிவதற்காகப் பயன்படுத்தும் சொல்லாகும்.

(எ-டு) இன்றைய நாளேட்டில் வந்துள்ள முக்கியச் செய்தி யாது?

'யாது?' என்னும் வினா ஒருமைக்குரியது. இதன் பன்மை 'யாவை'? என்பது.

(எ-டு) இந் நூலில் குறிப்பிடப்படும் கருத்துகள் யாவை?

**'என்ன?'**

'என்ன?' என்பதும் 'யாது?' என்பதும் பெரும்பாலும் ஒத்த பொருளை உடையனவே. எது? யாது? என்பன ஒருமைக்குரிய வினா. பன்மையில் அவை முறையே எவ்வ?, யாவை? என வரும்.

(எ-டு) இவற்றுள் நீ விரும்பும் நூல்கள் எவை?, யாவை?

**ஏழ்மை - ஏழைமை**

'ஏழ்மை' என்னும் சொல், வறுமை, இல்லாமை என்னும் பொருள்களை உணர்த்துவதாக எண்ணி எழுதுகிறார்கள்/பேசுகிறார்கள். அது தவறு 'ஏழ்மை' என்றால் (ஏழ்+மை) = ஏழ்மை; - ஏழ்மை எழுமை - இவை ஒரே பொருள் தரும் சொற்கள். அப்படி என்றால் 'ஏழ்' 'ஏழு' ('7') என்னும் எண்ணைக் குறிப்பதுதான். ஏழாம் தன்மை. ஒருமை=ஒன்று; இருமை = இரண்டு. மும்மை = மூன்று. இவ்வாறே 'ஏழ்மை' என்றால் ஏழு. ஏழ்மை என்னும் இது எப்படியோ, பேச்சு வழக்கில் வறுமை என்னும் பொருளில் பயன் பொருளில் பயன் படுத்தப்பட்டு எழுத்து வழக்கில் - இலக்கியத்திலும் ஏறிவிட்டது.

உண்மையான சொல் வடிவம் 'ஏழைமை' என்பதுதான். 'ஏழைமை' என்றால் வறுமை; இல்லாமை என்னும் பொருள்களைக் குறிக்கும்.

'ஏழைமை வேடன் இறந்திலன் என்று எனை ஏசாரோ' என்பது கம்பராமாயணத்தில் குகன் கூறுவதாக வந்துள்ள பாடலின் அடி. வறுமையில் உள்ள வேடன் என்பது பொருள்.

ஆனால், 'ஏழ்மை' என்பது தவறு. அது 7 என்னும் எண்ணைக் குறிப்பது; ஏழைமை என்றுதான் சொல்ல வேண்டும்' என்று இப்போது கூறினால் அதனை இன்றைய எழுத்தாள நண்பர்கள் ஏற்றுக் கொள்வார்களா? எப்படியோ, உண்மையைக் கூறுவோம். ஏற்பவர் ஏற்கட்டும்.

**கட்டடம் - கட்டிடம்**

இவ்விரு சொற்களும் வெவ்வேறான பொருள்களை உடையவை. இவற்றைப் பயன்படுத்துவதில் பலர் குழப்பமடைந்துள்ளனர். 'கட்டடம்' என்றால் கட்டப்பட்ட வீடு, உறைவிடம் - ஆகியவற்றைக் குறிக்கும். கற்களை அடுக்கடுக்காக ஒன்றன்மீது ஒன்றாக, /ஒன்றை அடுத்து ஒன்றாக வைத்துக் கட்டப்பட்டது 'கட்டடம்'. ஆங்கிலத்தில் 'Building' என்னும் சொல்லின் தமிழ்ச் சொல்லே இது.

'கட்டிடம்' என்றால் கட்டடம் கட்டுதற்குரிய இடம். கட்டு + இடம் = கட்டிடம். 'Building Site' என்னும் ஆங்கிலச்சொல்லின் நேரான தமிழ்ச் சொல்தான் கட்டிடம்.

இவ்வேறுபாட்டினை நன்கு உணர்ந்து கொள்ளாமல் பெரும்பாலோர் கட்டடத்தையும் கட்டிடம் என்றே எழுதுகின்றனர். இனிமேலேனும், கட்டிடத்தில் கட்டப்பட்டுள்ள கட்டடத்தை எழுத்தாளர்கள் கவனித்து எழுதுவார்களாக!

கத்தரி - கத்திரி

கத்தரித்தல் என்றால் வெட்டுதல், துண்டித்தல் என்னும் பொருளை உணர்த்தும். துணி முதலியவற்றை வெட்டப் பயன்படுத்தும் கருவி கத்தரிக்கோல். அதனைக் கத்திரிக்கோல் எனத் திரித்து எழுதுவது தவறு. செடி கொடிகளை வெட்டிச் சமன் செய்யவும், ஒழுங்கு படுத்தவும் பயன்படுத்தும் எஃகால் (இரும்பினால்) ஆன பெரிய கத்தரிக்கோல்களும் உண்டு.

கார்த்தாலே, கார்த்தாலை : 'கார்த்தாலே' வாருங்கள், என்று பேசுகிறார்கள். அதன் பொருள் என்ன? காலையில், அதிகாலையில், விடியற்காலத்தில் என்பவற்றையே அப்படித் தவறிச் சொல்கிறார்கள்.

'காலத்திலே', 'காலத்தால்' - இவையே உண்மையான, சரியான சொற்கள். 'காலம்' என்னும் சொல் 'காலை', 'அதிகாலை', 'விடியல்' என்னும் பொருள்களைத் தரும். காலத்தால் என்பதுதான் பேச்சு வழக்கில் 'ல' 'ர்' ஆக மாறி 'கார்த்தாலே' ஆய்விட்டது.

'கார்த்தாலே' என்பதுபோலே சிலர் 'காலம்பற' என்று கூறுகிறார்கள். அதன் சரியான சொல் 'காலம் பெற' என்பதாகும்.

'காலம்' என்றால் 'காலையில்' 'அதிகாலையில்' என்னும் பொருளைக் குறிக்கும், என்று முன்னர்க் கண்டோம். அதேபோலக் 'காலம் பெற' என்றால் 'உரிய காலத்தில்' என்றும் 'அதிகாலையில்' என்றும் பொருளாகும். எனவே 'காலம் பெற' என்பதுதான் சரியான சொல்.

கண்ட - காணும்

முதலில் ஒரு செய்தியை எழுதிப் பின்னர் 'மேலே கண்டவாறு', 'மேலே கண்ட' என்றும், பின்னால் வரும் செய்தியையும் கீழ்க்கண்ட' என்றும் பெரும்பாலோர் எழுதுகின்றனர். சற்றுச் சிந்தித்துப் பார்த்தால் அவை தவறானவை என்பது விளங்கும். மேலேதான் அச்சொல் அல்லது இச்செய்தி அப்படியே இருக்கின்றதே அது மறைந்துவிட ஒளிந்துவிட ஓடிவிட இறந்துவிடவில்லையே! பின் ஏன் உள்ளதை இறந்த காலத்தில் 'கண்ட ' என்று எழுதுகிறோம்? தவறல்லவா? அவ்வாறே, கீழே உள்ள செய்தியைப் பின்னர்த்தான் படிக்க/அறியப் போகிறோம். ஆனால், கீழ்க் 'கண்ட' என்று இறந்த காலத்தில் எழுதுவது சரியாகுமா? தவறல்லவா? எனவே, 'காணும்' என்னும் சொல்லையே இனி அவ்விடங்களில் எழுத்தில் காணுவோம்.

குத்து - குற்று : இவை இரண்டும் வெவ்வேறான பொருள் தருபவை. குத்துதல் என்றால் துளையிடுதல், (காது குத்துதல், ஆயுதங்களால்/ஊசியால் குத்துதல்,வேலால் குத்துதல், புள்ளி/முத்திரை குத்துதல், குத்துக்கால், கையை மடக்கிக் குத்துதல், குத்துச் சண்டை முதலியன - குத்துக்கு எடுத்துக்காட்டுகள்.

'கல்லைக் குத்தினால் கைதான் நோகும்', என்னும் பழமொழியில் குறிப்பிடுவது. இந்தக் குத்துதல்தான்.

குற்றுதல் - என்பது அரிசி குற்றுதல், இடித்தல் முதலியவற்றைக் குறிக்கும். 'ற்று' என்பது பேச்சு வழக்கில் 'த்து'வாக மாறுகிறது.

'மற்ற' என்பது பேச்சில் 'மத்த' என்றும், 'பெற்றவர்' என்பது 'பெத்தவர்' என்றும் கூறப்படுகின்றன. அல்லவா? அவ்வாறே நெல் குற்றினாள் என்பது நெல் குத்தினாள் என்றும் கூறப்படுகிறது. இங்கெல்லாம் 'குற்று' என்னும் சொல்தான் வரவேண்டும்.

---

வைத்தியப் படிப்பு படித்துக் கொண்டிருந்த மாணவர்களைப் பார்த்து, அவர்களுக்குப் பாடம் சொல்லிக் கொடுத்துக் கொண்டிருந்த டாக்டர் சொன்னார் :

"உங்களுக்கு இரண்டு விஷயங்கள் முக்கியமாக வேண்டும். நாற்றத்தைக் கண்டு முகம் சுளிக்கக் கூடாது. இரண்டாவதாக, எதையும் கூர்ந்து கவனிக்க வேண்டும்" என்றார்.



பிறகு, "இதோ இந்தக் குப்பியில் உள்ள நாற்ற திராவகத்தை, நான் ஒரு விரலினால் தொட்டு, அதை நாக்கினால் நக்கப்போகிறேன். எல்லாரும் அதே மாதிரிச் செய்யுங்கள்" என்றார்.

எல்லாரும் அதே மாதிரிச் செய்தார்கள்.

உடனே டாக்டர், "நீங்கள் முகத்தைச் சுளிக்கவில்லை, சந்தோஷப்படுகிறேன். ஆனால் நீங்கள் கூர்ந்து கவனிப்பது போதாது. நான் திராவகத்தைத் தொட்ட விரல் வேறு, நாக்கினால் நக்கிய விரல் வேறு" என்றார். —நாடோடி

# கங்காபுரிக் காவலன்

## 4. "வீரமாதேவி போகாதே நில்"

## விக்கிரமன்

இராசேந்திர சோழ தேவர் தம் படைகளுடன் சில நாள்கள் சிதம்பரத்தில் தங்கியிருந்து, பிறகு காஞ்சி மாநகர்ப் பொன்மாளிகையில் வீற்றிருந்து வடக்கு நோக்கிப் புறப்பட்டார்.

அவருடன் வீரர்கள் மிகவும் மகிழ்ச்சியுடன் சென்றனர். பகை நாட்டின் மீது படை எடுத்துச் செல்லும் உணர்வு அவர்களிடையே இல்லை. வழக்கமான அணி வகுப்புக் கட்டுப்பாடும் தளர்த்தப்பட்டிருந்தது. 'வீர வேல், வெற்றி வேல்' கோஷம் இல்லை. இரவு தங்குமிடங்களில் அவர்கள் விருப்பப்படி, உணவு சமைத்து உண்டனர். பாட்டும் கூத்தும் அவர்களுக்கு மகிழ்ச்சியை அளித்தன. அணிவகுத்துச் செல்லும்போது ஆடிப்பாடிச் சென்றனர்.

வழியே குறுக்கிட்ட ஆறுகளில் நீர்ப் பெருக்கு குறைந்திருந்ததால் எளிதில் ஆற்றைப் பெரும் வண்டிகளும் கடந்து செல்லும் அளவுக்குக் குறுக்குப் பாலமாக அமையத் தக்க படகுகளையும் அவர்கள் உடன் கொண்டு சென்றனர். படகுப் பாலம் அமைக்காமல் படகுகளிலேயே கடந்தனர். சில இடங்களில் இடுப்பளவு நீரில் நடந்து சென்றனர்.

நாட்டியமாடி மகிழ்விக்க நடனப் பெண்கள் தக்க பாதுகாவலுடன் தொடர்ந்து வண்டிகளில் வந்தனர். ஆனால் ஒழுக்கத்தை மிகக் கண்டிப்பாகக் காக்க வேண்டும் என்ற உத்தரவை யாரும் மீறவில்லை.

வழியே பாடல் பெற்ற திருத்தலங்களில், இராசேந்திரன் தங்கி அந்தந்த கோயில்களுக்குத் தேவையானவற்றை நிவந்தங்களாக அளித்தார். அந்தத் தலத்து இறைவன் மீது பாடப் பெற்ற பதிகங்களைப் பாடச் சொல்லி மகிழ்ந்தார்.

தங்குமிடங்களில், படையில் புதிதாகச் சேர்ந்த வீர இளைஞர்களை அழைத்து மனம் திறந்து அவர்களுடன் உரையாடினார். அவர்கள் குடும்பத்தைப் பற்றிக் கேட்டறிந்தார். அவர்கள் திறமையைக் கண்டறிந்தார்.

சாளுக்கிய நாட்டின் மீது படையெடுத்துச் சென்ற போதெல்லாம், இராசேந்திரனுடன், அவர் புதல்வர் இராசாதிராசன் உடனிருப்பது வழக்கம். மாதண்ட நாயகராக இராசேந்திரனே பொறுப்பேற்றிருந்தாலும், மகன் இராசாதிராசனே படை வியூகம் அமைப்பது, எதிரிகளின் போக்கறிந்து செயல்படுவது, முன்னணிப் படைக்குத் தலைமை வகிப்பது என்று தம் போர் அறிவையும் வீரத்தைப் புலப்படுத்தி வந்தான்.

இம்முறை கங்கை யாத்திரையின் போது இராசேந்திரன் அரையன் இராசராசன் என்ற வீரனைத் தேர்ந்தெடுத்தார். பல தடவை அவன் வீரத்தைக் கூர்மையாகக் கண்டறிந்துப் பாராட்டி இருக்கிறார்.

"நம்மையெல்லாம் கங்கை நதிக்கரைக்கு அழைத்துச் சென்று நீராடச் செய்து, நாடு நகரங்களைக் காட்டித் திரும்பவும் அழைத்து வரப்போவதாக அன்றோ பேசிக் கொள்கிறார்கள். இதற்கு அரையன் இராசராசன் தலைமை வேறு தேவைதானா? அரசர் ஏன் அவ்வாறு முடிவெடுத்தார்?" என்று படை வீரர்கள் பேசிக் கொண்டனர்.

அரையன் இராசராசனுக்கும் வியப்பாக இருந்தது. சோழ சக்கரவர்த்திகளின் உள்ளக் கிடக்கையை அவனால் புரிந்து கொள்ள முடியவில்லை. தன் சந்தேகத்தைத் தெளிவுபடுத்திக் கொள்ள அரசரை வினவ, வாய்ப்புக்காகக் காத்திருந்தான்.

படைப் பயணத்தில் ஒரு நாள் வட பெண்ணை ஆற்றங் கரையில் பரந்த மணல் வெளியில், சோழர்ப் படைகள் தண்டு இறங்கி இருந்தன. வெண்ணிலவு காய்ந்து கொண்டிருந்த வேளையில், படைவீரர்கள் குதூகலமாகப் பொழுதைக் கழித்துக் கொண்டிருந்த போதில் இராசேந்திரன், நீலவானத்தை நோக்கிச் சிந்தனையிலாழ்ந் திருந்தார். திடீரென அவர் அரையன் இராசராசனை அழைத்தார்.

படைத் தலைவர் அரையன் இராசராச னுக்கு ஒரு கணம் வியப்பேற்பட்டது. இரவு வேளையில் அரசர் எதற்காகத் தன்னை அழைக்கிறார் என்று அவனால் யூகிக்க முடியவில்லை. சக்கரவர்த்தியின் அன்பை யும் மதிப்பையும் தான் பெற வேண்டும் எனும் ஆர்வமும், ஆவலும் அவனிடம் குடி கொண்டிருந்தன. அதுபோல் தம் திறமை யைக் காட்டி முன்னேற விரும்பும் இளைஞர் மற்றொருவர் உண்டு. இராசராச சோழர் காலத்துப் படைத் தலைவராயிருந்த கிருஷ் ணன் இராமனின் புதல்வன் அருண்மொழி, சக்கரவர்த்திகளிடம் நல் மதிப்புப் பெற முயன்று கொண்டிருந்தான். அவனையும் விஞ்ச வேண்டும் என்று அரையன் இராசராசன் விரும்பினான்.

"வருக, வருக விக்கிரம சோழ அரை யன் இராசராசனாரே! மாதண்ட நாயகரே வருக வருக!" என்று இராசேந்திர சோழர் வரவேற்புக் கூறி அழைத்தவுடன், அரையன் இராசராசன் திடுக்கிட்டான்.

தன் பெயரையும், பட்டப் பெயரையும் சொல்லி அழைப்பது ஒருவேளை தன்மீது குற்றம் கண்டு குத்திக் காட்டுவதற்காக இருக்குமோ என்று அச்சமுற்று, மிகப் பணிவுடன் நின்றான்.

எதிரே அமரச் செய்து, அடுத்துப் பயணத் திட்டத்தை விவாதிக்கத் தொடங் கிய பிறகுதான் அரையனுக்குத் துணிவு பிறந்தது. ஆனால், அவர் தன்னை நீங்கள் தாங்கள் என்று அழைக்காமல் நீ என்று அழைத்தால் மேலும் துணிவும் தெம்பும் ஏற்படும் என்ற எண்ணம் தோன்றியது.

சக்கரவர்த்திகள் மெல்ல நகைத்தார். "அரையரே! வல்லவரையர் வந்தியத் தேவனை உனக்குத் தெரியுமா?" என்று கேட்டார்.

அரையன் இராசராசன் தலை அசைத் தான்.

"அவர் என் அத்தையின் கணவர். என்னை உருவாக்கியவர். அவர் என்னை இன்றும் 'நீங்கள் - தாங்கள்' என்றழைக் கிறார். ஏன் தெரியுமா? பதவியின் காரண மாக. வயது அங்கே குறுக்கிடவில்லை. அதுபோல் மாதண்ட நாயகனாக இந்த கங்கைப் படையெடுப்புக்கு நியமிக்கப்பட் டிருக்கும் உன்னை - " என்று கூறிச் சற்று நிறுத்தி, 'சரி தானா!' என்பது போல் பார்த்து, "படைத் தலைவருக்கு உரிய மரி யாதையுடன் அழைக்கிறேன். அப்படி அழைப்பது உனக்குக் கூச்சமாக இருந் தால் உன் விருப்பப்படியே அழைக்கிறேன்" என்றார்.

இராசராசன் மிகவும் பணிவான குர லில், "சக்கரவர்த்திகளே! நாம் எந்த நாட் டின் மீது படையெடுத்துச் செல்கிறோம் என்று தெரியாமலே தொண்டை மண்டலம் கடந்து வந்துவிட்டோம். இன்னும் சில நாள்களில் வேங்கியை அடைந்து விடு வோம். கீழைச் சாளுக்கியர்கள் நம் நண் பர்கள் தாமே? படைவீரர்கள் உற்சாக யாத்திரையாகக் கருதுகிறார்கள். உல்லாச யாத்திரைக்கு நான் மாதண்ட நாயகனா? எனக்கே ஒன்றும் விளங்கவில்லை" என்று தன் ஐயத்தைத் தெரிவித்துக் கொண்டான்.

"வீர இளைஞர்கள் மிக அதிகமாகக் கொண்ட நம் படை வீரர்களின் தோள் வலியை வீணாக்குவது என் நோக்கமன்று. வேங்கி வந்தடைந்தவுடன் நம் திட்டம் புலப்படும். கங்கையில் நீராடி, கங்கை நீரைக் கொண்டு வருவது என் நோக்கம். என் தந்தை அமரர் இராசராசரின் கடைசிக் கால ஆசையை நிறைவேற்றுவது என் கடமை. புதிதாகக் கட்டப்படவிருக்கும் கோயிலின் குடமுழுக்கு கங்கை நீரால் நடைபெற வேண்டும் என்பது என் ஆசை. கங்கை நீரைக் கொண்டுவர இவ்வளவு படைகளா என்று நீ கேட்கலாம். நீயே பார்க்கப் போகிறாய் - வேங்கி வந்தடைந்த வுடன் சாளுக்கியர்களும், கலிங்கத்தாரும், சக்கரக் கோட்டத்தாரும் போரிட ஆயத்த மாகப் போவதை. கங்கைக் கரைக்குச் செல் லும் வழியில் உள்ளவர்கள் ஒன்று சேர்ந்து நம்மை எதிர்க்கப் போகிறார்கள். மும் முனை, நான்கு பக்கத் தாக்குதல் என்று

நாம் பலத்த தாக்குதலை எதிர்பார்க்க வேண்டும். இப்போதுள்ள படைகள் போதுமா என்பது சந்தேகமே. படைகள் எண்ணிக்கையில் அதிகமிருந்தாலும் தந்திரமும், திட்டமும் மிக அவசியம். அங்குதான் உன் வீரமும், விவேகமும், ஆற்றலும் கைகோத்து உன் புகழை நிலை நாட்டப் போகின்றன."

இராசேந்திர சோழர் சொல்லி நிறுத்தினார்.

"என் புகழா? சக்கரவர்த்திகளின் திறமையும், வீரமும் புகழைக் கொண்டு குவிக்கப் போகின்றன. புகழும் பெருமையும் தங்களுக்கே அரசே! மும்முனை, நான்கு,ஐந்து முனைத் தாக்குதலுக்கு நான் ஆயத்தமாக இருக்கிறேன். அரசர்க்கரசே - ஏதோ வேடிக்கை விளையாட்டாக இவ்வளவு தொலைவு வந்த எங்களுக்கு உண்மையிலேயே வீரத்தை நிலை நாட்ட ஒரு வாய்ப்பு கிடைக்கப் போகிறது" என்று உணர்ச்சி மிகுதியுடன் பேசினான்.

அந்த நிலவு வேளையில் அந்த இள வீரன் விழிகள் வீரத்தால் மின்னுவதைக் கண்ட இராசேந்திரன் அவன் முதுகைத் தட்டிக் கொடுத்து, "இராசராசா! நம் உளவுப் படைகள் மிகக் கவனமாக இயங்க வேண்டும். கலை விருந்து படைக்க வந்த நடனமணிகள் வேங்கியிலேயே தங்கட்டும். உல்லாசமும், கேளிக்கையும் பாட்டும் கூத்தும் வேங்கிக்குப் பிறகு வேண்டாம். நீயும், வீர இளைஞன் அருண்மொழியும் சேர்ந்து சோழ நாட்டிற்குப் பெரும்புகழைத் தேடித் தர வேண்டும்" என்றார்.

இரவு நேரமாகிக் கொண்டிருந்ததை நினைவு படுத்தி, மறு நாள் பொழுது புலரா முன்னரே படைகள் புறப்பட வேண்டும் என்றும் கட்டளை இட்டார்.

அரையன் இராசராசனுக்குப் புதிய உற்சாகம் ஏற்பட்டது என்றாலும், புகழில் ஒரு பங்கை அருண்மொழி பெற்றுவிடப் போகிறானே என்ற கவலை வேறு ஏற்பட்டது. உறக்கம் வராமல் தவித்தான்.

இராசேந்திர சோழருக்கும் உறக்கம் வரவில்லை. மாளிகையில் மஞ்சத்தில் கவலையின்றி உறங்க வேண்டியவர், எங்கோ ஆற்றங் கரையில் மணல் வெளியில் உறங்கக் காரணம் ஏதுமில்லையே?

புகழுக்குக் குறைவா? கல்விக்குக் குறைவா? செல்வம் குறைந்ததா? நாட்டின் எல்லை குறைவு பட்டதா? பிறகு கங்கைக் கரைக்கு ஏன் செல்ல வேண்டும்? ஆயிரக் கணக்கான போர்வீரர்களை காரணம் கூறாமல் நடத்திச் செல்ல என்ன காரணம்? உறக்கம் வராமல் ஆயிரம் சிந்தனைகளில் மிதக்க என்ன காரணம்?

கங்கைக் கரை யாத்திரைக்குப் புறப்படும்போது, அதிகாரிகளுக்கு அவர் அந்தரங்க உத்தரவுகள் சில பிறப்பித்துச் சென்றிருந்தார். இரு நாள்களுக்கு ஒரு முறை, தலை நகரத்தில் நடைபெறும் முக்கிய சம்பவங்களைத் தெரிந்து கொண்டு ஒற்றன் ஒருவன் அரசரைச் சந்திக்க வேண்டும் என்பது ஒன்று. பெரிய கோயில் கட்டும் பணியும், நகர நிர்மாணமும், ஏரி வெட்டும் வேலையும் எவ்வாறு நடைபெறுகின்றன என்பதைச் சுருக்கமாக எழுதி நம்பிக்கை வாய்ந்தவரிடம் அனுப்புமாறு பட்டோலைப் பெருமான் என்ற அதிகாரியிடம் ஒப்படைத்திருந்தார்.

நாள்தோறும் நடக்கும் அரசு தொடர்பான நிகழ்ச்சிகளை, நிகழ்ச்சி ஏட்டில் குறித்து வைத்திருப்பதே பட்டோலைப் பெருமானின் பணி.

காஞ்சியினின்று இராசேந்திரன் புறப்பட்டுப் பல நாள்கள் ஆகியும் கோயில் பணி, நகர நிர்மாணப் பணிகள் தொடர்பாக எவ்விதச் செய்தியும் அவருக்குக் கிடைக்கவில்லை.

அதற்குள் திருப்பணியில் என்ன முன்னேற்றம் ஏற்பட்டு விடப் போகிறது என்று தன்னைச் சமாதானப் படுத்திக் கொண்டார் இராசேந்திரன்.

"வீரமாதேவி இப்போது என்ன செய்து கொண்டிருப்பாள்? பாவம்! முற்றிலும் தன்னை நம்பி வந்துவிட்டவள். கலை, கலை என்று கலையே தன் மூச்சாகக் கொண்டு சுறுசுறுப்புடன் இயங்குகிறாள். அவள் கனவுகள் விரிந்து பரந்தவை. ஆழமானவை. என்னைவிட, பெரிய கோயிலைக் கட்டுவதில் அவளுக்குத்தான் ஆர்வம் அதிகம். அந்தக் கோயிலைச்

"தொடரும் இனிய உறவுகள்..."

# 15 வருட தொடர்பு

சுமார் பதினைந்து வருடங்களுக்கு முன் –

விடியலை நோக்கி மனம் அலைந்து கொண்டிருந்த நேரம். இரவும் பகலும், 'ஒரு வேலை... நமக்கும் ஒரு வேலை...' என்கிற நினைப்பே மனம் நிறைய ஆக்ரமத்திருந்த காலம்.

அந்த விடியலும் ஒரு நாள் என்னைத் தபால்காரர் உருவில் நெருங்கியது. ஆமாம். எனக்கு வேலை கிடைத்து விட்டது ! துள்ளிக் குதிக்க வேண்டும் போல் சந்தோஷம். ஆனால் அப்படிக் குதிக்கவில்லை. காரணம் இருந்தது.

வேலையில் சேருமுன் டெபாசிட் தொகை ஒன்றைக் கட்ட வேண்டும்... ஆமாம், ரூ. 2,000/-

விவரம் தெரிந்தபோது, வீட்டில் அனைவருமே சற்றுக் கலங்கினார்கள். அப்பா மட்டும் சொன்னார். "நீ மற்ற ஏற்பாடுகளைச் செய். இதை நான் பார்த்துக் கொள்கிறேன்."

புறப்படுவதற்கு முதல் நாள் டெபாசிட் தொகைக்கும் மற்ற செலவுகளுக்குமாக அவர் என்னிடம் ரூ. 2,500/- தந்தபோது எனக்குக் கண்கள் கலங்கின.

"எப்படி ? இது எப்படி ?" என்று தயங்கித் தயங்கிக் கேட்டேன்.

முதல்முறையாக ஸ்ரீராமைப் பற்றி நான் தெரிந்துகொண்டது இப்படித் தான்.

சரியாகப் பதினைந்து வருடங்கள் கழித்து இப்போது கிட்டத்தட்ட முன் போலவே ஒரு நிலை.

எதிர்பாராத விதமாக ஒரு நல்ல வீடு எதிர்பார்த்ததை விடக் குறைவான விலைக்கு வந்தது. வாங்கிவிட முடிவு செய்தேன்.

எல்லா சேமிப்பையும் போட்டு, முடிந்த கடன்களையும் பெற்றுச் சேர்த்தும் துண்டு விழுந்தது.

அதனை ஈடுசெய்ய எனக்கு உதவியது ஸ்ரீராம்தான். இப்போது எனக்குச் சொந்தமாக ஒரு வீடு !

15 வருடமாக இருந்து வரும் ஸ்ரீராமுடனான தொடர்பு வருங்காலத் திலும் நீடிக்கும் என்பது நிச்சயம்.

ஜி.வி.கே. நாராயணன்
திண்டுக்கல் – 624 005.

சிற்பக் களஞ்சியமாக்க வேண்டும் என்பது அவளுடைய தணியா ஆவல். காட்டுப் பகுதியில் அவள் தன்னந்தனியளாய் இயங்குகிறாள். அவளுடைய கலை ஆர்வத்தை மேலும் தூபமிட ஓர் சிற்பி. சிற்பியுடன் அவளுக்குள்ள நெருக்கத்தைத் தவறாக எண்ணினோம். விளையாட்டாக இட்ட சபதத்தை நிறைவேற்றுவதில் அவள் கடுமையாக இருக்கிறாள். உள்ளத்தை முழுமையாக அர்ப்பணித்து விட்ட அவள் தன் உடல் இளமையைச் சிற்பியிடம் ஒப்படைத்து விடுவாளோ என்று நான் தவறாக எண்ணியதை அறிந்த அவள் அன்று எப்படிச் சீறினாள்? உள்ளம் வேறு, உடல் வேறு என்று பொதுவாகப் பெண்கள் பிரிக்க விரும்ப மாட்டார்கள் என்பதை அறியாது போனேனே! என் கபட உள்ளத்தைப் போல், வீரமாதேவியும் 'இருவேறு மனமுடையவளாக இருப்பாள் என்று தவறாக எண்ணி விட்டேனே...'

இராசேந்திரர் கண் இமைக்காமல் சிந்தித்துக் கொண்டிருந்தார். பழையாறையில் நடைபெற்ற சம்பவங்களை நினைவு படுத்திக் கொண்டார். அந்த இரவு - வீரமாதேவி பொங்கி எழுந்த இரவை நினைவு படுத்திக் கொண்டார். அவளுக்குத்தான் எத்தனை வலிமை. சினத்தின் உச்சியிலேறிய அவள் சீறி எழுந்து என் கரத்தை விலக்கினாளே! அப்பப்பா! அந்தப் பூங்கரத்திற்குள்தான் எவ்வளவு புயலின் வேகம்?

"கோபப்பட்டது நியாயம்தானே. அவள் மனஉறுதியை நான் சோதிக்க முற்பட்டது தவறுதானே?

இராசேந்திரன் தனக்குள் பேசிக் கொண்டார். எதிரே வீரமாதேவி இருப்பது போன்ற நினைவு. அவர் அருகே அவள் வந்தமர்கிறாள். அவர் மெய் சிலிர்க்கிறது.

"எனக்காகத்தானே உங்களுக்கு இவ்வளவு தொல்லைகள்?" என்று கேட்கிறாள்.

"தொல்லையா, உன்னாலா?" இராசேந்திரர் வினவுகிறார்.

"கோயில் குடமுழுக்குக்குக் கங்கை நீரைக் கொண்டு வர வேண்டும் என்று விரும்பினேன். உடனே புறப்பட்டு விட்டீர்கள். இப்படி, நதிக் கரையில் வெறும் தரையில் படுத்திருக்கிறீர்கள். அந்தப்புரத்தில் பஞ்சணையில் பணிப்பெண்கள் சாமரம் வீசத் துயில வேண்டிய நீங்கள் இப்படி கண்விழித்துப் படுத்திருக்க நான் தானே காரணம்?"

"இல்லை, இல்லை. நீ காரணமில்லை. என் தந்தையின் ஆசையை நிறைவேற்றப் புறப்பட்டதற்கு நீ எப்படிக் காரணமாவாய்?

"இந்த வடபெண்ணை ஆற்றங்கரை எனக்குப் புதியதன்று. வாதாபிப் போரின் போதும் ஒரு சமயம் கீழைச் சாளுக்கியர்களை அடக்கவும் படையெடுத்து வந்த போது பஞ்சணை மெத்தையையா உடன் கொண்டு வந்தேன்?"

"வாழ்க்கையின் பெரும் பகுதியை போர்ப் பூமியிலே கழித்த நீங்கள் இந்த வயதிலாவது சுகம் அனுபவிக்காமல் காடு மேடு என்று அலைந்திருக்க வேண்டாம். கங்கை நீர் வேண்டும் என நீங்கள் ஒரு வார்த்தை சொல்லியிருந்தால் உங்கள் திருப் புதல்வர்கள் கொண்டு வந்திருக்க மாட்டார்களா?"

"கொண்டு வந்திருப்பார்கள். ஆனால் கங்கையில் நீராடி நானே கொண்டு வர ஆசைப்பட்டேன்".

"கங்கையில் தனியே புனித நீராடக் கூடாது என்று சாத்திரம் புகல்வதாகப் பண்டிதர் கூறினார். தங்களுக்குத் தெரியாதா?"

"ஆமாம், என்னுடன் வருவதற்கு சம்மதப்படவில்லை. கோயில் பணி என்று கூறிவிட்டதால் உனக்குப் பயம், தனியே என்னுடன் வந்தால் விரதபங்கம் ஏற்பட்டு விடுமோ என்று".

"என்னைப் பற்றி எனக்குத் தெரியும். தங்களையும் நான் அறிவேன். 'விரத பங்கம், சபதத்தை மீறுவது' என்பதெல்லாம் இனி ஒரு நாளும் நடைபெறாது. தங்களுடன் நான் வரச் சம்மதிக்காததற்கு அவை எல்லாம் காரணமல்ல.

"பிறகு..." என்று கேட்டவாறு, இராசேந்திரன் வீரமாதேவியை மெல்ல அணைத்துக் கொண்டார். அவர் அணைப்பிலிருந்து மிக இலகுவாக நழுவி -

"பிறகு... கங்கையில் நீராடும்போது உரிமைப் பொருள் உடனிருக்க வேண்டும்.

'சகதர்மிணி'யின் கரம்பிடித்துக் கங்கையில் மூழ்கி எழ வேண்டும்'என்ற சாத்திரக் கூற்றை நீங்கள் மீறலாமா?".

"ஓ! சாத்திரம் நிறையப் படிக்கிறாய்".

"இல்லை, சாத்திர வல்லுனர்கள் நானிருக்கும் கானகத்திற்கு வந்து விட்டார்கள். தெய்வச் சிற்பங்கள் எப்படி அமைய வேண்டும் என்று கூற சில்ப விற்பன்னர்கள் வந்திருக்கிறார்கள். சாத்திரம் படித்தவர்களுடன் பேசும்போது பல அரிய உண்மைகளைக் கற்றறிகிறேன். ஆகா! மனித வாழ்க்கை என்பதே எவ்வளவு பெரிய தத்துவம். பிறப்பது, மகிழ்ச்சியுடன் இருப்பது, திருமணம் செய்து கொள்வது எல்லாம் தத்துவமே. கணவருடன் நாள்தோறும் வாழ்வது புனித வேள்வி செய்வதுபோல். உடலில் ஏற்படும் கிளர்ச்சிகளும், உடல் உபாதைகளும் நம்மைச் சோதிக்கும் அரக்கர்கள். அந்த அரக்கர்களை வதைக்க நமக்கென்றே இறைவன் அவதாரம் எடுக்கிறான். அவன் அவதாரத்திற்கு ஏற்ற நிலைக்களனை ஏற்படுத்தவே நல்ல இசை, நடனம் இவையெல்லாம். பெண்களின் முழு உடலே வேள்விப் பீடமாகும்."

"ஏய்... ஏய்.. வீரம்மா... சாத்திர மேதையாக, தத்துவ ஞானியாக அதற்குள் எப்படி மாறினாய்? நான் திரும்பி வருவதற்குள் காவியுடை உடுத்தி, உருத்திராட்ச மாலை அணிந்து கமண்டலத்தால் என்னை வரவேற்கும் அளவுக்கு மாறி விடப் போகிறாய்...?"

"மாற மாட்டேன். இது பாருங்கள். நான் எப்போதும் போல் உங்கள் வீரமாதேவியாக உங்கள் அருகேயே இருக்க விரும்புகிறேன். நினைவெல்லாம் உங்களிடம் இருத்தியிருக்கிறேன். செய்யும் பணியில் எள்ளளவும் பிசகு ஏற்படாதிருக்க உங்களிடம் பூரணமாக ஈடுபடுத்திக் கொண்டுள்ள என் மன நிறைவு உதவுகிறது. பணிகள் வேகமாக நடைபெற உற்சாகம் ஏற்படுகிறது."

"நீ சொல்வதில் முன்னுக்குப் பின் முரண்பாடு இருக்கிறதே. என் நினைவாக இருந்தால் கோயில் கட்டும் பணி எப்படி நடைபெறும்? உதாரணமாக போர்க்களம் செல்லும் நான் உன்னையே நினைத்துக் கொண்டிருந்தால் வெற்றி கிட்டுமா?"

"யுத்த பூமியிலே பெண் உதவி தேவையில்லை. அதனால் நினைவைச் சிதற விடக் கூடாது. ஆனால் கலைப்பணியில் உங்களைப் போன்ற கலைஞரின் உறுதுணை வேண்டும். நீங்கள் அருகே இருப்பது போன்ற உணர்வு இருந்து கொண்டே இருக்க வேண்டும். அப்போதுதான் முழுமையாகக் கலை பூத்துக் குலுங்கும்".

"வீரமாதேவி உன்னைச் சாதாரணப் பெண் என்று நினைத்தேன். என்னையே நினைத்துக் கொண்டிருக்கும் உன்னைப் போல் நானும் உன்னையே நினைத்துக் கொண்டிருக்கிறேன். அதனால் என் யாத்திரை தடைப்படுமோ என்ற அச்சம் ஏற்படுகிறது! வீரமாதேவி நீ இப்படியே இங்கேயே இருந்து விடு. என்னுடனேயே இருந்து விடு".

ஒரு மெல்லிய சிரிப்பொலி வீரமாதேவியிடமிருந்து எழுந்தது. "அதெப்படி என்னால் முடியும்? கங்கை நதியில் நீராட உங்கள் உரிமை மனைவியை அழைத்து வர ஏற்பாடு செய்யுங்கள்".

"உரிமை மனைவியா? வீரமாதேவி என்னைச் சோதனை செய்கிறாயா? நீதான் என் உரிமை, உயிர், உடல் எல்லாம்".

"இல்லை, இல்லை. உலகம் ஏற்காது. அரியணையில் அமரும் உரிமை பெற்றவள், ஊரும் உலகமும் அறிந்த பஞ்சவன் மாதேவி இருக்கும்போது அந்த இடத்தை நான் பறிப்பது, உரிமை கொள்வது மிகவும் தவறு. இரண்டு காரணங்களுக்காக உடனே பஞ்சவன் மாதேவியை அழைத்துக் கொள்ளுங்கள். ஒன்று கங்கையில் ஆற்ற வேண்டிய புனிதச் செயலுக்காக. மற்றொன்று - பழையாறை, தஞ்சையை விட்டுச் சில காலம் அவர்கள் வெளியே இருந்தால் தான் கலைப்பணி, நகரப்பணி எல்லாம் நிறைவேறும். என் மீதுள்ள வெறுப்பால் பட்டத்து அரசியும் மற்றவர்களும் நல்ல காரியத்தைத் தடை செய்கிறார்கள். நான் சொல்வதை ஏற்கிறீர்களா? வரட்டுமா - பொழுது புலர்கிறது. அதோ, படை வீரர்கள், விழித்தெழ சங்கம் முழங்குகிறது".

இராசேந்திரன் அருகே அமர்ந்திருந்த வீரமாதேவி துள்ளி எழுந்து மறைகிறாள்.

(தொடரும்)

# "பணிகளை முறைப்படுத்திச் செய்வதே எங்கள் குறிக்கோள்!"



வி.எஸ். சீனிவாசன்

நாளுக்கு நாள் பெருகி வரும் நிதி நிறுவனங்களுக்கு மத்தியில் வித்தியாசமாகவும், வேகமாகவும் வளர்ந்து வருகிறது "20 செஞ்சுரி கெனடிக் ஃபைனான்ஸ்" என்ற தனியார் நிறுவனம். முதன் முதலில் பூனா நகரில் துவக்கப்பட்ட இந்த நிறுவனத்தின் கிளை தற்போதுச் சென்னையிலும் துவக்கப்பட்டுள்ளது. நிதி உடையவர்களோடு மட்டும் கூட்டுச் சேராமல் பிற தொழில் நிறுவனங்களையும் இணைத்துக் கொள்ளலாம் என்பதற்கு '20 செஞ்சுரி கெனடிக் ஃபைனான்ஸ்' நல்ல உதாரணம்.

அதாவது இன்று அதிவேகமாக விற்பனையாகிக் கொண்டிருக்கும் கெனடிக் ஹோண்டா வண்டிகளின் உரிமையாளரையும், தன் நிறுவனத்தோடு கூட்டுச் சேர்த்துக் கொண்டுள்ளது 20 செஞ்சுரி நிறுவனம். 2.7 லட்சம் ரூபாய் டெபாஸிட் பெற்றிருந்தஇந்த நிறுவனம் தற்போது சென்னையில் மட்டுமே ஒரு கோடியை எட்டியுள்ளது.

இந்த அதிகவேக வளர்ச்சி குறித்தும் இந்தக் கூட்டு நிறுவனம் பற்றியும் அறியும் பொருட்டு அதன் சென்னை கிளையின் துணை மேலாளர் எல். கணேசனை நாம் சந்தித்துப் பேசினோம்.

அப்போது அவர்,

"கெனடிக் ஹோண்டா நிறுவனம்தான் எங்கள் வளர்ச்சிக்கு முக்கியக் காரணம் என்று சொன்னால் அது மிகையில்லை. இதனால் வாடிக்கையாளர்கள் பெருகுவதோடு டெபாஸிட் தொகையும் பெருகுகிறது. பூனாதான் எங்களுக்குத் தலைமையிடம்.

"குஜராத், மத்தியபிரதேசம், கர்நாடகா, ஆந்திரா போன்ற மாநிலங்களில் எங்கள் நிறுவனம் நல்ல முறையிலேயே இயங்கி வருகிறது. ஒன்பது மாநிலங்களில் முந்நூறுக்கும் மேற்பட்ட டீலர்கள் உள்ளனர். இவர்கள் டெபாஸிட் தொகை வாங்குவதோடு மட்டும் நின்று விடுவதில்லை. வங்கிகளுக்கு செலுத்தப்படவேண்டிய கடன் தொகையை வசூல் செய்யும் பணியையும் மேற்கொள்கிறார்கள். அதிகாரப்பூர்வமான ஏஜெண்டுகள் என்ற உத்தரவையும் இதற்காகப் பெற்றுள்ளோம்.



எல். கணேசன்

"மூன்று கோடிக்கு மேல் முதலீடு போட்டிருப்பதால் இது போன்ற பணிகளை முறைப் படுத்தி எங்களால் செய்ய முடிகிறது.

"எங்கள் நிறுவனத்திற்கு அரசிடம் இருந்து பதினோரு கோடி ரூபாய் கடன் வாங்கக் கூடிய தகுதி இருந்தும் இது வரை 9.80 கோடி ரூபாய் மட்டுமேவாங்கியுள்ளோம்.

"92-93 ஆம் வருடத்தில் டிவிடெண்ட் மட்டுமே பதினைந்து சதவீதம்கொடுத்துள்ளோம்.

"குறிப்பாக வாடிக்கையாளர்களை கெனடிக் ஹோண்டா கவர்ந்துள்ளது. இதுவரை நாற்பது சதவீத வண்டிகள் நிதிநிறுவனம் மூலமாக மட்டுமே விற்றுள்ளன என்றால் பார்த்துக்கொள்ளுங்களேன்.

"பல பெரிய கம்பெனிகளோடும் இதற்காக நாங்கள் தொடர்பு கொண்டு சப்ளை செய்து வருகிறோம். வங்கிகளில் உள்ளது போல தான் வட்டி விகிதங்களும் உள்ளன.

"இது பெண்கள் ஓட்டுவதற்கு மிக வசதியாக உள்ளது. இரண்டாயிரம் ரூபாய்க்கு மேல் சம்பாதிக்கிற தனி நபர்களுக்கும் நாங்கள் கடன் தருகிறோம்.

"இதேபோல மெர்லின் கெனடிக் கம்ப்யூட்டர் என்ற ஒன்றையும் அறிமுகப்படுத்த உள்ளோம். கம்ப்யூட்டர், டெலிவிஷன் இரண்டுமே காணக் கூடிய கீபோர்டு சிஸ்டத்திலான கருவி. இதன் விலை 32000/- ரூபாய் ஆகிறது. பலருக்கும் உதவக் கூடியது என்பதால் இதுவும் வாடிக்கையாளரைப் பெரிதும் கவரும்.

"சென்னையில் மட்டும் எங்களுக்கு 12 புரோக்கர்கள் உள்ளனர்.

"எங்கள் நிறுவனத்தின் துணைத் தலைவரான வி.எஸ். சீனிவாசனே இந்த வெற்றிகளின் காரணகர்த்தாவாகவும் விளங்குகிறார்" என்று உற்சாகத்துடன் கூறி முடித்தார்.

— சித்ரா

# 'கலைமகள்' ஆசிரியர் திரு. எஸ்.வி. ரமணிக்கு ரூ. 33674 - உதவி

திரு. எஸ்.வி. ரமணி சிறந்த எழுத்தாளர். பெரும் புலவர் வாகீச கலாநிதி அமரர் கி.வா. ஜகந்நாதனுக்குப் பிறகு 'கலைமகள்' இலக்கிய இதழின் ஆசிரியராக இருந்து திறம்பட நடத்தி வருகிறார்.

அவர் அண்மையில் பண்ருட்டிக்கு அருகில் விபத்துக்குள்ளானார். இடது கையில் எலும்பு முறிவு ஏற்பட்டு சிகிச்சையளித்தும் சரியான பலனளிக்காமல் செப்டிக் ஆகி மிகவும் பாதிக்கப்பட்டிருந்தார். ஏறத்தாழ மருத்துவச் செலவு 50 ஆயிரம் ரூபாய் வரையில் ஏற்பட்டு விட்டது.

நோயின் கடுமை வேறு. 'இந்த உலகில் ஏன் வாழ்கிறோம்' என்ற அளவுக்கு வேதனை தாளாது அவர் துயருற்றார். இது குறித்து கலைமாமணி விக்கிரமனுக்குக் கடிதம் எழுதினார்.

இந்தப் போதில் அவருடைய சிகிச்சைக்கு உதவுவது எழுத்தாளர்கள் கடமையாகும். எழுத்தாளர்கள் இன்னல் படும்போது உதவுவதற்காகவே 'தமிழ் எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளை' நான்கு ஆண்டுகளுக்கு முன்பு தொடங்கப்பட்டது. இதன் நிர்வாக அறங்காவலராக கலைமாமணி விக்கிரமன் இருக்கிறார்.

முதலில் கலைமாமணி விக்கிரமன் ரூபாய் இரண்டாயிரம் அளித்து சில எழுத்தாளர் அன்பர்களுக்கும் தனிப்பட்ட முறையில் கடிதம் எழுதினார்.

கடிதம் 'கண்டதும்,

| | |
|---|---|
| திரு. நாடோடி | ரூ. 500 |
| திரு. கௌதம நீலாம்பரன் | ரூ. 200 |
| திரு. அறந்தாங்கி சங்கர் | ரூ. 50 |
| திரு. ஏர்வாடி எஸ். இராதாகிருஷ்ணன் | ரூ. 101 |
| கவிஞர் விஜய கிருஷ்ணன் | ரூ. 50 |
| டாக்டர் கே. ராமமூர்த்தி | ரூ. 100 |
| திரு. சி.ஆர். கண்ணன் | ரூ. 100 |
| திரு. பால இரமணி | ரூ. 500 |
| திரு. டி.ஆர் கணேசன் | ரூ. 100 |
| கவிஞர் கலைவாணி | ரூ. 200 |
| திரு. சுப்ரஜா ஸ்ரீதர் | ரூ. 200 |
| திரு. அகிலன் கண்ணன் | ரூ. 100 |
| திரு. மாயாவி | ரூ. 25 |
| திரு. த. இராமலிங்கம் | ரூ. 101 |
| ஸ்ரீ ஜோதிர்லதா கிரிஜா | ரூ. 2500 |
| திரு. வலம்புரி சோமநாதன்' | ரூ. 100 |
| இதயம் பேசுகிறது திரு. மணியன் | ரூ. 500 |
| கலைமாமணி ஜி. உமாபதி | ரூ. 200 |
| திருமதி. அரசு மணிமேகலை | ரூ. 300 |
| திரு. ஆர்.எஸ். மணி | ரூ. 50 |
| திரு. இதயகீதம் ராமானுஜம் | ரூ. 50 |
| திரு. ஜெயரதன் | ரூ. 250 |
| திரு. கே. அசோகன் | ரூ. 50 |
| திரு. ராஜேந்திரகுமார் | ரூ. 100 |
| திரு. நாகராஜகுமார் | ரூ. 25 |
| திரு. இரா. விஜயரங்கம் | ரூ. 500 |
| திரு. நா. ராமச்சந்திரன் | ரூ. 100 |
| திரு. எஸ்.வி. ராஜசேகர் | ரூ. 25 |
| திருமதி. சரஸ்வதி | ரூ. 101 |
| திரு. கீழாம்பூர் சங்கர சுப்பிரமணியன் | ரூ. 50 |
| திரு. மீ. விஸ்வநாதன் | ரூ. 151 |
| திரு. செ. யோகநாதன் | ரூ. 100 |
| திரு. ரா. பொன்ராசன் | ரூ. 25 |
| கவிஞர் செல்ல கணபதி | ரூ. 250 |
| டாக்டர் கிருஷ்ண ஸ்ரீநிவாஸ் | ரூ. 100 |
| திரு. ராஜேஷ்குமார் | ரூ. 200 |
| திரு. ராஜேஷ் குமார் மூலமாக கோவை வைஸ்யா பாங்க் ஊழியர்கள் | ரூ. 960 |
| திரு. கௌசல்யா ரங்கநாதன் | ரூ. 50 |
| திருமிகு. லலிதா வெங்கடேஷ் | ரூ. 100 |
| திரு. பி.வி.ஆர். | ரூ. 250 |
| திரு. டி.எஸ். வெங்கட்ராமன் | ரூ. 25 |
| திருமதி. சிவசங்கரி | ரூ. 1000 |
| திரு. சௌரி | ரூ. 50 |
| திரு. பி.எஸ். ரங்கநாதன் (கடுகு) | ரூ. 250 |
| திருமதி. வேதா கோபாலன் | ரூ. 150 |
| கயல் கோ. தினகரன் | ரூ. 50 |
| திரு. மறைமலையான் | ரூ. 25 |
| திரு. மூவேந்தர் முத்து. | ரூ. 100 |
| திரு. பாலகிருஷ்ணன் (பாணன்) | ரூ. 25 |
| திரு. லேனா தமிழ்வாணன் | ரூ. 501 |
| திரு. குன்றக்குடி பெரிய பெருமாள் | ரூ. 100 |
| 'தமிழ் அரசி' ஆசிரியர் திரு.எம். நடராசன் | ரூ. 1000 |
| திரு. அய்க்கண் | ரூ. 101 |
| திரு. புஷ்பா தங்கதுரை | ரூ. 100 |
| டாக்டர் முத்து கண்ணப்பர் | ரூ. 50 |
| திருமதி . பத்மினி பட்டாபிராமன் | ரூ. 100 |
| திருமதி. விமலாரமணி | ரூ. 100 |
| திரு.பி.எல்.ராஜேந்திரன் | ரூ. 50 |
| திரு. இந்திரா சௌந்திரராஜன் | ரூ. 100 |
| திருமதி. சுபலட்சுமி (சரயு) | ரூ. 250 |
| திரு.ப. இராமலிங்கம் | ரூ. 25 |
| திரு. மகரிஷி | ரூ. 205 |
| டாக்டர்கோவி. மணிசேகரன் | ரூ. 200 |
| திருமதி. சரோஜ் நாராயணசாமி | ரூ. 500 |

போட்டோ : (இ-வ) திரு ரமணி, திரு விக்கிரமன், திரு சுப்ரமணியன், திரு மூவேந்தர் முத்து. (நிற்பவர்கள்) திரு கயல் தினகரன், திரு பி.எல். இராசேந்திரன்.



தமிழ் எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளையின் ஆதார நிதிக்கு அன்பர்கள் தங்கள் நன்கொடைத் தொகையை அனுப்பி தமிழ் எழுத்தாளர் நலநிதி அறக்கட்டளையைப் பலப்படுத்துமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஆகியோர் எஸ்.வி. ரமணி பெயருக்குக் காசோலை எழுதியும் ரொக்கமாகவும் பணம் அனுப்பி இருந்தனர்.

மேலும் இராயப்பேட்டை பெனிபிட் ஃபண்ட் லிட்., சேர்மன் திரு. சுப்ரமணியன் ரூ. 15000 /- கொடுத்து உதவினார்.

மேற்படி மொத்தத் தொகை ரூ. 31471 - ஐ எஸ்.வி. ரமணி இல்லத்திற்கே நேரில் சென்று 10.9.93 அன்று கலைமாமணி விக்கிரமன் அளித்தார்.

நிதி அளிக்கும் போது கலைமாமணி விக்கிரமனுடன் திரு. சுப்ரமணியன், மூவேந்தர் முத்து, கயல் கோ. தினகரன், பி.எல். ராஜேந்திரன், 'அமுதசுரபி' நாகராஜ குமார், 'உமன்ஸ் இரா' பாரி ஆகியோரும் இருந்தனர்.

இந்த நிகழ்ச்சிக்கு பின்னரும் புது தில்லி ஏ.ஆர். ராஜாமணி மூலம்.

| | |
|---|---|
| திரு. ராஜாமணி | ரூ. 100 |
| திரு.டி. கிருஷ்ணமூர்த்தி | ரூ. 100 |
| திரு. சி. ரவீந்திரன் | ரூ. 50 |
| திரு. ஆர். முத்து கிருஷ்ணன் | ரூ. 50 |
| திரு.எஸ்.கிருஷ்ணமூர்த்தி | ரூ. 100 |
| திரு. எம்.என்.எஸ். மணியன் | ரூ. 100 |
| உதவிக்கரம் ஜி. முத்து | ரூ. 200 |
| திரு. பட்டுக்கோட்டை பிரபாகர் | ரூ. 501 |
| திரு. சுபா | ரூ. 501 |
| ஆத்மா பப்ளிகேஷன்ஸ | ரூ. 501 |

அனுப்பி இருந்தனர். அந்தத் தொகையும் எஸ்.வி. ரமணியிடம் சேர்க்கப்பட்டது.

ஆக இதுவரை ரூ. 33674 /- எஸ்.வி. ரமணிக்கு அளிக்கப்பட்டுள்ளது.

உதவித் தொகை அளித்த அன்பர்கள் அனைவருக்கும் நன்றி தெரிவித்துள்ளார் கலைமாமணி விக்கிரமன். எஸ்.வி. ரமணி உடல் நலம் பூரண குணமடைய நாமும் இறைவனைப் பிரார்த்திப்போம்.

# அமுதசுரபி : 25 ஆண்டுகளுக்கு முன்...

1968 ஆம் ஆண்டு அக்டோபர் மாத இதழ், தீபாவளி மலராக மலர்ந்திருக்கிறது. 'வீட்டில் பொன் மழை பெய்யட்டும்; வீட்டின் மேல் தளத்தினின்று சொர்ணம் அருவி போல் பொழியட்டும்.' இப்படியொரு சம்பவம் நிகழ முடியுமா? நிகழ்ந்திருக்கிறது, அட்டைப்படத்தில். ஓவியர் கொண்டைய ராஜு, கனகதாரா ஸ்தோத்ரத்தில் வரும் 'தாமரைக் கண்களையுடைய திருமகளே! ஏழையினும் ஏழையான எம்மீது உன் பார்வை படும்படி செய். எம் வறுமை தீரட்டும்' என்கிற வரிகளுக்கு உயிர் தந்திருக்கிறார்.

ஸ்ரீ சோற்றானிக்கரை பகவதி அம்மனின் முகப்புப் படத்துடன், தலத்தின் பிற படங்களுடன் கூடிய 'அம்மே பகவதி' கட்டுரை பரவசமான ஓர் உணர்வை நம்முள் விதைக்கிறது.

உலகப் புகழ் பெற்ற கஜுராஹோ சிற்பங்களையும் கோயில்கள் பற்றிய விபரங்களையும் போட்டோக்களுடன் டாக்டர் சி. சத்ய நாராயணா எழுதியுள்ள கட்டுரை கண்ணை விட்டு அகல மறுக்கிறது.

புதுக்கோட்டை நகரிலிருந்து மதுரை செல்லும் நெடுஞ்சாலையில் பன்னிரண்டு கல் தொலைவிலுள்ள திருமெய்யம் ஊரில் இருக்கும் திருமெய்ய மலையாளனைப் பற்றி இரா. நாகசாமி எழுதியுள்ள கல்வெட்டு ஆராய்ச்சிக் கட்டுரை பல சரித்திரச் சான்றுகளைக் கடை விரித்துள்ளது.

நடனத் தோற்றங்கள் மூலம் இந்திர விழாவில் மாதவி ஆடிய 11 வகையான கூத்துகளுள் எட்டிற்கு திருமதி கமலா தன் பாவ முத்திரைகள் மூலம் உயிரூட்டியுள்ளார்.

தமிழுக்குக் கிடைத்த பாசுரங்களில் குலசேகரர் பாடியவை மிகச் சிறந்தவை. குலசேகரர் போற்றிப் பாடிய, திருவித்துவக் கோட்டில் வீற்றிருக்கும் அரியையும், அரனையும், பஞ்ச பாண்டவர் கோயிலையும் படங்களுடன் விளக்குகிறது 42ஆம் பக்கத் திருத்தலக் கட்டுரை.

பி.கே. வேணி எழுதியுள்ள 'முள்ளின் காதல்' சிறுகதை காவலரின் கடமையையும், வாசவன் எழுதியுள்ள 'நானே வருவேன்' சிறுகதை நடிகையின் காதலையும், எல்லார்வி எழுதியுள்ள 'ஓவியம் தந்த ஓவியர்' சிறுகதை காதலர்களின் சங்கமத்தையும், கோமதி சுப்ரமணியம் எழுதியுள்ள 'உத்தியோகம் பார்க்கும் பிள்ளை' சிறுகதை தாய்ப்பாசத்தையும், வசுமதி ராமசுவாமி எழுதியுள்ள 'தியாக மங்கை' சிறுகதை ஆண்டவனுடைய_ படைப்பையும், வ.சா. நாகராஜன் எழுதியுள்ள 'சங்கு சுட்டாலும்' சிறுகதை மகனால் தந்தை அடைந்த நிலையையும், து. ராமமூர்த்தி எழுதியுள்ள 'ஸ்வீகாரம்' சிறுகதை பிடிவாதக்கார மனித குணத்தையும் காட்டுகின்றன. இந்த ஏழு கதைகளும் மலரை அலங்கரிக்கும் வானவில்லாய் மிளிர்கின்றன.

செம்மங்குடி சீனிவாஸ அய்யரைப் பற்றி என்.ஆர். பூவராகவன் ஒரு புது விருந்து படைத்துள்ளார். செம்மங்குடியின் புகழ் ஒளியைக் குன்றின் மேல் வைத்துள்ளது 'அமுதசுரபி'.

பாட்டப் பந்து ராமச்சந்திரனின் 'காந்தியும் மௌன விரதமும்' கட்டுரை காந்தியத்தை எடுத்துரைக்கிறது.

பழம் பாடல்களின் மேற்கோள்களுடன் (தற்போது சென்னை பல்கலைக் கழகத் தமிழ் மொழித் துறைத் தலைவராக இருக்கும்) முனைவர் சி. பாலசுப்பிரமணியன் படைத்துள்ள 'சேரர் தொண்டி' கட்டுரை, காலத்தால் அழியாத வரலாற்றுச்சிகரம்.

காஞ்சி வைகுந்த நாதரைப் பற்றி வி. கோபாலனும், நம் நாடு வீரமும், விவேகமும், நேர்மையும் படைத்த நாடு என்பதை 'கல்லில் பிறந்த வீரம்' கட்டுரை மூலம் வி. ராமமூர்த்தியும் துரியோதனனை 'ஆண்மைக்கு உவமை இல்லாதவன்' என்று அ.மு. பரம சிவானந்தமும் விளக்கியுள்ளனர்.

ஓவியர் கணேசன் வரைந்துள்ள 'மகத்தான தூது' படமும் விளக்கமும் அருமை.

புலவர் கீரனின் வில்லிப் புத்தூரார் மகாபாரதம் – மூன்றாம் பகுதி ஆன்மிக அன்பர்களுக்கு அமிர்தம்.

திருவாசகத்தைத் தேனாகச் சேகரித்துத் தந்துள்ள பகுதியும், பல்லவ மகேந்திர வர்மனின் சம்ஸ்கிருத மூலமான மத்த விலாசத்தை தமிழில் தந்துள்ள த.நா. குமாரஸ்வாமியின் கட்டுரையும் மலருக்கு மகுடமாகியுள்ளன. ஓவியர் ஸுபாவின் சித்திரங்கள் மகுடத்தில் மாணிக்கக் கற்களாக மிளிர்கின்றன.

பி.வி. ராவ், உங்கள் இம் மாத பலன் மூலம் எல்லா தரப்பினரின் எதிர்கால பலன்களையும் துல்லியமாகக் கணித்துள்ளார்.

25 ஆண்டுகளுக்கு முந்தைய அமுதசுரபி இதழோடு தீபாவளி மலரும் சேர்ந்து கொண்டு அரிய பொக்கிஷமாக எந்நாளும், எவராலும் அழிக்க முடியாத காவியமாக வரலாறு படைத்துள்ளது.

— மாலதி நாகராஜ்

## ஸ்ரீராம் டிரஸ்ட் வெளியீடுகள்

145 லிங்கச் செட்டி தெரு, த.பெ.எண். 5043, சென்னை - 600 001



சந்தனச் சிமிழ் - வசுமதி ராமசாமி - விலை: ரூ.25.00

சுமார் அறுபது ஆண்டுகளாகச் சிறந்த சிறுகதைகள் படைத்து வரும் திருமதி வசுமதி ராமசாமி எழுதி மணம் வீசும் 12 சிறுகதைகளின் தொகுப்பு. சமூகத்தின் பல்வேறு கோணங்களைப் பிரதிபலிக்கும் நூல்.



கோலத்தில் சிக்கிய புள்ளிகள் - வேதா கோபாலன் - விலை ரூ.30.00

'அமுதசுரபி' - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நாவல். திருமதி வேதா கோபாலன் எழுதிய முதல் தொடரும், நாவலும் இதுதான். கவியரசு வைரமுத்து, நூலுக்குச் சிறப்புரை வழங்கியுள்ளார்.



பாரதியும் புஷ்கினும் - கமலா பத்மகிரீஸ்வரன் - விலை ரூ.16.00

அமுதசுரபி - சுஜாதா பிலிம்ஸ் லிட் இணைந்து நடத்திய 1991-ஆம் ஆண்டில் வந்த, பாரதி இலக்கியப் போட்டியில் ரூ.5000 பரிசு பெற்ற நூல். ருஷ்யக் கவிஞர் புஷ்கினை நாம் அறியச் செய்கிறார் ஆசிரியர். முன்னுரை வழங்கியுள்ளார் டாக்டர் வே.ஞான பிரகாசம்.

அமுதசுரபி - சிறந்த சிறுகதைகள் பதினைந்து - விலை: ரூ.22.00

நவமணிக் கதைகள் வரிசையில் வந்த பத்து சிறந்த சிறுகதைகளுடன், 'அமுதசுரபி' சிறுகதைப் போட்டியில் பரிசு பெற்ற ஐந்து சிறுகதைகளுடன் (1990இல்) பிரகாசிக்கும் சிறுகதைத் தொகுப்பு நூல்.



அமுதமொழி - தொகுப்பு : அமரர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் - விலை: ரூ.20.00

பன்மொழிப் புலவர் பைங்காநாடு வெங்கட்ராம சாஸ்திரிகள் தொகுத்த ஸ்ரீ காமகோடி பீடாதிபதி ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் அருளுரைகள். ஸ்ரீ ஜயேந்திர ஸரஸ்வதி சுவாமிகளின் போட்டோக்கள் நிறைந்த சிறந்த தொகுப்பு நூல்.

அமரர் கதைகள் - விலை : ரூ.22.50

அமரர்கள் தி.ஜானகிராமன், கு.சுப்பிரமணியன், ஹேமா ஆனந்ததீர்த்தன், லக்ஷ்மி, சாண்டில்யன், ஆதவன், நா.பார்த்தசாரதி, அகிலன், அழகாபுரி அழகப்பன் முதலிய ஒன்பது எழுத்தாளர்கள் எழுதிய - அனைவரும் இன்று இல்லை - அந்தச் சிறுகதைச் சிற்பிகளின் எழுத்தாற்றலும், சமூகப் பிரக்ஞையும், கற்பனை வளமும் வாடாத புதுமலராக என்றும் விளங்கும் சிறுகதைத் தொகுப்பு.



தியாக தீபம் - நீதியரசர் ச.மோகன் - விலை ரூ.40.00

காந்திஜியின் கொலை வழக்கு விசாரணையை இளைய தலைமுறையினரும் அறியச் செய்ய நீதியரசர் தொடர்ந்து 'அமுதசுரபி' இதழில் எழுதிய நூல். டாக்டர் நா.மகாலிங்கம் அவர்களின் அணிந்துரையையும், டாக்டர் கி.வேங்கட சுப்பிரமணியம் அவர்களின் அறிமுக உரையையும் கொண்டது.

# சங்கப் பலகை



## முனிவர்களின் சுவடிகளும் முற்பிறவி உண்மைகளும்

(ஆசிரியர் - வி. ரவிச்சந்திரன். வெளியீடு - குமரன் பதிப்பகம், 2, முத்துக்கிருஷ்ணன் தெரு, தி.நகர், சென்னை - 600 017. விலை - ரூ. 25.00).

*மறுபிறப்பு என்பது உண்மையா? நாடி ஜோதிடம் என்பது என்ன? சித்தர்களாலோ முனிவர்களாலோ மட்டும் எப்படி எதிர்காலம் பற்றி கூறமுடிகிறது?" போன்ற பல சந்தேகங்களுக்கும், கேள்விகளுக்கும் விளக்கங்களுடனும், ஆதாரங்களுடனும் விரிவாக விளக்கியுள்ள நூல்.*

## கோபுர பொம்மைகள்

(ஆசிரியர் - ராஜம் கிருஷ்ணன். வெளியீடு - தாகம், 58, டி.பி. கோயில் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005).

*நம்நாட்டின் ஆண்களின் சர்வாதிகாரத் தன்மையால் மூச்சுத் திணறிக் கொண்டிருக்கும் பெண்களின் சுதந்தரத்திற்காக எழுதப் பட்ட நாவல் இது. இதில் பெண்களுக்கு ஏற்படும் பலவிதமான பிரச்னைகள் மற்றும் மனித உணர்வுகளின் பிரதிபலிப்பையும் அழகுற விளக்குகிறார் கதாசிரியர்.*

## பெண்ணாய் பிறந்தவள்

(ஆசிரியர் - கோமதி சுப்ரமணியன். வெளியீடு - அமிழ்தம் பதிப்பகம், 14 முத்துப்பிள்ளைத் தெரு, வ.உ.சி.நகர், வேலூர், வ.ஆ.அ.மாவட்டம் - 632 001. விலை - ரூ. 17.00).

*பெண்களுக்கு வாழ்க்கையில் ஏற்படும் அநீதிகளை மையமாக வைத்து எழுதப்பட்ட 4 நாடகங்கள் அடங்கிய நூல். இந்த நான்கு நாடகங்களிலும் இன்றைய இளைய தலைமுறையினர், ஆண் - பெண் இருசாராரும் இந்த நிலையைப் பற்றிச் சிந்தித்து, இனியும் இது போன்ற அவலங்கள் சமூகத்தில் நிகழா வண்ணம் செய்ய வேண்டும் என்பதை வற்புறுத்தி கூறப்பட்டுள்ளது.*

— சிவகுமார்

## அம்மா அப்பா செல்லப்பிள்ளை

(ஆசிரியர் - நெல்லை - ஆ. கணபதி. வெளியீடு - ஆண்டாள் பதிப்பகம், தபால் பெட்டி எண். 1068, சைதாப்பேட்டை, சென்னை - 15).

*'அன்பு காட்டித்தான் குழந்தைகளை வளர்க்க வேண்டும்' என்று அம்மா கொடுக்கும் செல்லத் திற்கும், 'கண்டித்துத்தான் வளர்க்க வேண்டும்' என்ற அப்பாவின் எண்ணத்திற்கும் ஏற்படும் சங்கடங்களை ஒரு குடும்பம் எப்படியெல்லாம் அனுபவிக்கிறது என்பதை சுவைபட கூறுகிறது, இந்நூல். முடிவில் அன்பு வெல்வதை 'நல்லாசிரியர்' நெல்லை ஆ. கணபதி நறுக்கு தெறித்தாற்போல் முடித்துள்ளார்.*

விலை ரூ. 10/-. பக்கங்கள் - 70.

## சிறுவர் உலகக் கதைகள்

(ஆசிரியர் - அகிலா. வெளியீடு - பல்கலைப் பதிப்பகம், 36, தெற்குச் சிவன் கோயில் தெரு, கோடம்பாக்கம், சென்னை - 24).

*பற்பல நாடுகளில் காலங் காலமாகச் சொல்லப்பட்டும், எழுதப்பட்டும் வருகிற சில சிறந்த கதைகளைத் தொகுத்து தரும் நூலில் மொத்தம் 11 சிறுகதைகள் உள்ளன. ஒவ்வொரு கதையையும் படிக்கின்றபோது ஏதோ ஒரு விதத்தில் நம் தமிழ் கதைகளிலேயே படித்து பார்த்த உணர்வு தட்டுகிறது.*

விலை ரூ. 15/-. பக்கங்கள் - 120.

## சாமர்த்தியக் கதைகள் - 4

(ஆசிரியர் - பேராசிரியர் ஏ. சோதி. வெளியீடு - நன்மொழிப் பதிப்பகம், 75, அரவிந்தர் வீதி, புதுச்சேரி - 605 001. பக்கங்கள் - 84. விலை - ரூ. 10.00).

*அறிவுக் கூர்மையின் பெருமையை விளக்கும் 22 சிறுவர் கதைகளின் தொகுப்பு. அறிவுள்ளவ ஆபத்தில் சிக்கிக்கொள்ள மா டான். அப்படியே ஆபத்து வ தாலும் எப்படியும் தப்பித்து கொள்வான் என்பதை விளக் கிறது இந்நூல். பொழு இனிமையாகக் கழிக்கவும் அறிவி ஏரளவு தெளிவு பெறவும் இந்த கதைகள் சிறுவர் - சிறுமியர்களுக் உதவலாம்.*

## மூன்று அரும்புகள்

(ஆசிரியர் - டாக்டர் மலை மான். வெளியீடு - அன்புப் பதி பகம், 63 ஏ, ரங்காச்சாரி நி யம், சென்னை - 600 018. ப கங்கள் - 88. விலை - ரூ. 12.00).

*முத்து, அப்துல்லா, ஏசுதா என்னும் மூன்று நண்பர்கள் சம தால் வேறுபட்டாலும், 'ஒன் குலம் ஒருவனே தேவன்' என் பொன்மொழியை இதய கீதமா கொண்டு வாழ்கிறவர்கள். க யில் வரும் சம்பவங்கள் இ களின் ஒற்றுமை, தொண்டு ம பான்மை, தீமைக்கும் நன்மை செய்யும் பண்பை புலப்படுத் கின்றன. ஊருக்கு ஊர் இப்படி பட்ட சிறுவர்கள் இருந்தா 'நாடெங்கும் வாழக் கேடொன்று இல்லை' என்பதை உணர்த் கிறது. எளிய இனிய சொற்றொட களில் கருத்துச் செறிவுடன் இ நூலை இயற்றியுள்ளார் ஆசிரியர்*

—நா

## "வையம் எங்கள் தோளில்"

(ஆசிரியர் - அழகு அரு சலம். விஜய் பதிப்பகம், வடக்குச் சேனியர் தெரு, கா குடி - 623 001. விலை - ரூ. 8.50).

*சிறிய வரிகளில் வ.உ. ஜீவா, குழந்தைக் கவிஞர் அ வள்ளியப்பா போன்ற 'மாலு வளர்த்த பெரியவர்களைப் றியச் சிந்தனைகளைச் சி வைக்கிறார் ஆசிரியர். இ மட்டுமா? சமுதாயச் சிந்த சாறாக ஊறும் வகையில் பெ தமிழ்ப்பற்று, நாட்டு நடப்பு இ பற்றியும் கற்பனையை பற விடுகிறார். இருப்பினும், சி கவிதைகளில் இன்னும் ஆழமா கருத்து விதைகளைத் தூவியிருக் லாமோ? என்று எண்ணத் தோன் கிறது.*

—கவிஞர் வே

# சங்கப் பலகை

## இந்தியத் தூண்கள்

(ஆசிரியர் - கவிஞர் கு. காண்டீபன். வெளியீடு - கோமளா பதிப்பகம், 2/ 198, வெங்கடேச புரம், வண்டலூர், சென்னை - 600 048. விலை - ரூ. 15.00).

இது சிறுவர்களுக்காகவே, சிறுவனாகக் கவிஞர் மாறி சின்னஞ்சிறு கைகள் சப்பாணி கொட்டிடும் ஆனந்தப் பரவசமாகப் பாடப் பெற்ற பாடல்கள் கொண்டது. 'தெருவில் விற்கும் பணியாரம் நீ தின்றால்தானே நோய் வரும்" - "அழகாய் எழுதப் பழகினால் பெண்ணே! - உன் ஆசிரியர் மதிப் பெண் (கூடத்) தருவார் கண்ணே!" - போன்ற இனிய, நல்ல அறிவுரைப் பாடலும் உண்டு.

குதிக்கின்ற அணில், மதிக்கின்ற நாடு, பேண வேண்டிய சொந்த ஊர், கூடவேண்டிய ஒற்றுமை போன்ற பற்பல சமுதாயக் கருத்துகளும் சின்னஞ் சிறுவருக்குத் தேனில் கலந்த மாத்திரைபோல தெளிவாக இந்நூலில் ஊட்டப்படுகின்றன.

குழந்தைகள் ஆனந்தமாகப் பாடத்தக்க அளவில் பெரியோர்கள் தத்தம் சிறார்களுக்கு இந்நூலைப் பரிசாக அளிக்கலாம்.

—கவிஞர் வேதம்

## தத்துவப் பாடல்கள்

(ஆசிரியர் - குரு சுராஜானந்தா. வெளியீடு - யோகாலயா ஆஸ்ரமம், 2/13, புதுமகாபலிபுரம் சாலை, நீலங்கரை, சென்னை - 600 041. பக்கங்கள் - 56.)

உரைநடையால் விளங்கும் தத்துவங்களின்பால் மனம் ஈடுபாடுறுவதைக் காட்டிலும் பாடலால் விளங்கும் தத்துவங்களின்பால் மனம் ஒன்றிப் போவது என்பது இட்டுக்கட்டிச் சொல்லப்படுவது அல்ல. சந்த வடிவில் -

மனிதன் படைப்பது சரித்திரம்

மனிதனைப் படைத்தது விசித்திரம்

இறைவன் தந்தது பொதுநலம்

மனிதன் கொண்டது சுயநலம்...

தலையைக் காக்கும் தானம் - இது

தரணியில் எங்கும் காணோம்

உயிரில் சிறந்தது மானம் - இது

உலகம் முழுவதும் காணோம்...

இவைபோன்ற பல்வேறு வகையான சிந்தனையை அள்ளும் தத்துவப் பாடல்கள் கொண்ட சிறந்த நூல்.

நீலவன்

## அருளிச்செயல் அமுதம்

(ஆசிரியர் - திருக்குடந்தை சௌரிராஜ திருவேங்கடத்தான். 4, நான்காம் குறுக்குத் தெரு, எம்.சி. நகர், சென்னை - 64. பக்கங்கள்- 124. விலை - ரூ. 12.)

வடமொழி வேதங்களுக்கு நிகராய் மதிக்கப்படுவன ஆழ்வார்களின் அருளிச் செயல்கள். வேதங்களால் தெளிவுபெறாத சமய உண்மைகள் ஆழ்வார்களது தமிழ்ப்பாடல்களால் தெளிவாகின்றன. தெளியாத மறை நிலங்கள் தெளிகின்றோமே என்பார் வேதாந்த தேசிகர்.

ஆழ்வார்களது அருளிச் செயல் பாசுரங்களை அடிப்படையாகக் கொண்டு 27 தலைப்புகளில் சிறுசிறு கட்டுரைகளாக ஆசிரியர் இந்நூலை உருவாக்கியுள்ளார்.

அங்கங்கே சம்பிரதாய மணிப்ரவாள நடை கையாளப்பட்டுள்ளது சாதாரண வாசகரை சிரமப்படுத்தும். வரும் பதிப்பில் அவற்றையும் தமிழ்ப்படுத்தி வெளியிடுவது பயன்தரும்.

அழகியார்

## கவலையை விடுங்கள் - கடவுளை நம்புங்கள்!

(தொகுத்தவர் - டாக்டர் கே.கே. இராமலிங்கம். வெளியீடு - நர்மதா பதிப்பகம், 16/1, ராஜாபாதர் தெரு, தி.நகர், சென்னை - 17. விலை - ரூ. 20.00).

'ஞானபூமி' ஆன்மிக இதழில் வெளிவந்த நல்வாழ்க்கைக்கு உதவும் ஆன்மிக, தத்துவச் செய்திகள் அடங்கிய நூல். கடவுளை எப்படி நம்புவது? விக்கிரக ஆராதனை அவசியமா? பூஜை செய்வது எதற்கு? என்பன போன்ற ஏறக்குறைய நூற்றுக்கணக்கான வினாக்களை எழுப்பி, அவற்றிற்கு ஞானிகளும் அருளாளர்களும் வழங்கிய விடைகள் தொகுத்துத் தரப்பட்டுள்ளன. படிப்பதற்கு ஏற்ற நூல்.

## அருள் தரும் தமிழக ஆலயங்கள்

(எழுதியவர் - உமா சங்கரன். வெளியீடு - நர்மதா பதிப்பகம், 16/1, ராஜாபாதர் தெரு, தியாகராய நகர், சென்னை - 17. விலை - ரூ. 30.00).

விருகம்பாக்கம் சந்தோஷி மாதா கோயில் தொடங்கி ஆம்பூர் நாகநாதேசுவரர் கோயில் ஈறாக நாற்பத்து மூன்று ஊர் கோயில்களைப் பற்றி இந்நூல் எழுதப் பெற்றுள்ளது. நூலாசிரியர் பல கோயில்களுக்கு நேரில் சென்று மகிழ்ந்ததை (பக்கம் - 186) எழுதியுள்ளார். ஒவ்வொரு கோயில்களுக்கும் உள்ள தல புராணக்கதைகள், ஆழ்வார்களும், நாயன்மார்களும் பாடிய பாடல்கள், சிறப்பான விழாக்கள் முதலானவை சுவையாக எழுதப்பெற்றுள்ளன.

தாமரைக்கண்ணன்

## ஆவிகளுடன் பேசும் முறைகள்

(ஆசிரியர் - வி. ரவிச்சந்திரன். வெளியீடு - மேகதூதன் பதிப்பகம், 7, சின்னராவுத்தர் தெரு, திருவல்லிக்கேணி, சென்னை - 600 005. விலை - ரூ. 4.00).

மனிதன் இறந்த பின்னும் வாழுகிறான். மரணம் என்பது வாழ்க்கையின் முடிவு அன்று அதன் பின்பும் வாழ்க்கைத் தொடருகிறது. இறந்தவர்கள் அனைவரும் இவ்வுலகைப் போன்ற ஒரு பெரிய உலகில் வாழ்கிறார்கள். நம்மைப் போலவே இன்பத் துன்பங்களை அனுபவிக்கிறார்கள். அந்த ஆவியுலகத்துடன் தொடர்பு கொண்டு பேச என்ன முறையை கையாள வேண்டும் என்பது பற்றி விளக்குகிறது இந்த நூல்.

— சிவகுமார்

## வரலாற்றில் ஆரிய வைசியர்

(ஆசிரியர் - ந. வேங்கடேசன். வெளியீடு – சேகர் பதிப்பகம் – 66/1, பெரியார் தெரு, எம்.ஜி.ஆர். நகர், சென்னை – 600 078. பக்கங்கள் – 104. விலை – ரூ. 15.00).

ஆரிய வைசியர் என வழங்கப் பெறும் ஓர் இனத்தார் கோமுட்டி என்று அழைக்கப்படுகின்றனர். கோமட்டி (KOMATI) என்பதே சரியான பெயர் வடிவம். தெலுங்கைத் தாய்மொழியாகக் கொண்ட இவ்வினத்தார் இந்தியாவின் எல்லா மாநிலங்களிலும் காணப்படுகின்றனர். வணிகத்தைத் தொழிலாகக் கொண்ட இவர்கள் தமக்கென ஒரு வணிகச் சங்கேத மொழியைக் கையாளுகின்றனர். அச்சங்கேத மொழி நாடு முழுவதும் பெரும்பாலும் வேறுபடாமல் இருக்கின்றது என்பது போன்ற தகவல்களுடன் கோமட்டிகளின் பெயர் வரலாறு மற்றும் சமய சமுதாயப் பழக்கவழக்கங்கள் குறித்து 'கர்ஸ்டன்' என்பவர் ஆங்கிலத்தில் 'Castes and tribes of Southern' என்னும் நூலை எழுதியுள்ளார். அந்நூலின் தமிழாக்கம் தான் இந்நூல்.

## கல்வெட்டுகளில் புதுவை மாநில ஊர்ப் பெயர்கள்

(ஆசிரியர் - ந. வேங்கடேசன். வெளியீடு - திருமுடி பதிப்பகம், 4, கிழக்கு சந்நிதி வீதி, வில்லியனூர், புதுச்சேரி – 605 110. பக்கங்கள் – 136. விலை – ரூ. 20.00).

புதுவை மாநிலத்தில் கண்டெடுக்கப்பட்ட கல்வெட்டுகளை முறைப்படுத்தி, அதில் காணப்படும் ஊர்களை எல்லாம் தெரிந்தெடுத்து, அவ்வூர்களின் பெயர் பழங்காலத்தில் வழங்கப்பட்ட வடிவத்தையும், இன்று அவ்வூர்ப் பெயர்கள் எப்படி மருவி அழைக்கப்படுகின்றன என்பதையும் விளக்குகிறார் ஆசிரியர்.

பெ.கி. பிரபாகரன்

## மாணாக்கர் ஆற்றுப்படை

(ஆசிரியர் – கடவூர் மணிமாறன். வெளியீடு - விடியல் வெளியீட்டகம், 109, மேலைத் தெரு, கிருட்டிணராயபுரம் - 639 102. பக்கங்கள் – 32. விலை – ரூ. 4.00).

முனைவர் கடவூர் மணிமாறன் இயற்றிய புதுவகைச் சிற்றிலக்கிய நூல் இம் 'மாணாக்கர் ஆற்றுப் படை'. ஆற்றுப்படைகள் பெரும்பாலும் ஆசிரியப்பாவிலேயே எழுதப் பெற்று, அம்மரபுக்கேற்ப இம்மாணாக்கராற்றுப் படையும் ஆசிரியப்பாவினால் ஆக்கப் பெற்றுள்ளது. நூற்றாண்டு கண்ட குழித்தலை அரசு ஆண்கள் மேநிலைப் பள்ளியில் பணியாற்றிய - பணியாற்றுகிறவர்களைப் பற்றி இந்நூலில் விவரிக்கிறார் ஆசிரியர்.

நாகு

## சௌபாக்யமளிக்கும் ஸ்ரீதீப வழிபாடு

(தொகுப்பு - கவிஞர் சக்தி தாசன், அம்மன் சத்தியநாதன். வெளியீடு - அருள்மிகு அம்மன் பதிப்பகம், 212, இராயப்பேட்டை நெடுஞ்சாலை, சென்னை – 14.)

எளிய முறையில் இல்லத்தரசிகள் இலட்சுமி தேவியை தீபத்துடன் வழிபடும் முறைகள், தீபத்தில் இடவேண்டிய எண்ணெய்கள், பூஜா முறைகள், தோத்திரப் பாடல்கள் அடங்கிய நூல், மங்கையருக்கு மன நிம்மதியும், வாழ்க்கைச் சிறப்பும் ஏற்பட பூஜா வழிமுறைகளும் விளக்கப்பட்டிருக்கின்றன.

க.ப.

## "ராஜசுகம்"

(ஆசிரியர் - கவிஞர் ராணி தாசன். 40, 5 ஆவது மேற்குத் தெரு, காந்தி நகர், வேலூர் 632 006. பக்கங்கள் – 76. விலை – ரூ. 20.00).

பாதிக்குமேல் இளைய தலைமுறையினருக்குச் சூடான உரையேற்றி அவர்களை நெறிப்படுத்தும் பாடல்கள் கொண்ட நூல் இது. 'இனி ஒரு விடியல் உண்டென்பது உறுதி. நரகம் ஆகும் வறுமை அழியவேண்டும். பின்பே புதிய மத்தாப்புகள் பூக்கும்' போன்ற புரட்சிக் கருத்துகள் நிறையவே உண்டு. பல பாடல் தலைப்புகளே மனதைக் கொள்ளை கொள்கின்றன.

—கவிஞர் வேதம்

## புதுவை மாநில இஸ்லாமியப் புலவர்கள்

(ஆசிரியர் - பேராசிரியர் மு. சாயபு மரைக்காயர். பதிப்பகம் பாத்திமா பதிப்பகம், 67, காஜியார் வீதி, காரைக்கால். பக்கங்கள் – 40. விலை – ரூ. 5.00).

சென்ற நூற்றாண்டிலிருந்து புதுவையில் வாழ்ந்தவர்களும் புதுவையில் பிறந்து பிற இடங்களுக்குக் குடிபெயர்ந்தவர்களுமான பல இஸ்லாமியப் புலவர்களைப் பற்றிய குறிப்புகளை ஆசிரியர் திரட்டித் தந்துள்ளார். பாரதியாருடன் தொடர்பு கொண்டிருந்தவரென்று கூறப்படும் ஜெய்னுலாபுதீன் சாயபு. 'குலே பகாவலி', 'சீதா கல்யாணம்', 'நல்ல தங்காள்', 'வனமாலிகா', 'மதிமிகு மகராஜன் சரித்திரம்' போன்ற நாடகங்களைப் படைத்திருக்கிறார். இவர் ஏன் இஸ்லாமியப் பின்னணியில் எழுதவில்லை என ஆசிரியர் வியப்பு தெரிவித்துள்ளார். இந்திய யூனியன் முஸ்லிம் லீக் தலைவர் அப்துல் ஸமது அவர்களை, இந்த தொகுப்பில் எதிர்பாராமல் சந்திக்கிறோம். நூலாசிரியர் தன்னையும், தன் மனைவியாரையும் பற்றிக்கூட படர்க்கையில் எழுதியுள்ளார்.

கே.ஏ

## புத்தஜாதகக் கதைகள் : 1&2

(தொகுப்பாசிரியர் - சிவன். வெளியீடு - பாமா பதிப்பகம், 5 சிவஞானம் சாலை, தி. நகர், சென்னை - 600 017. விலை ரூ. 10.00)

உலகம் முழுவதும் அறிந்த புகழ்பெற்ற புத்த ஜாதகக் கதைகளை மாணவமணிகள் மட்டுமல்லாது பெரியவர்களும் விரும்பிப் படிக்கும் வண்ணம் எளிய தமிழ் நடையில் இரண்டு பாகங்களில் தொகுத்துள்ளார் நூலாசிரியர். இத் தொகுப்பிலுள்ள இருபத்திரண்டு கதைகள் ஒவ்வொன்றும் அனுபவ உண்மைகளையும், நீதி நெறிகளையும் விளக்குகின்றன.

- சிவகுமார்

சங்கப்பலகை

# மனம் விட்டுப் பேசுவோம்

"அன்றும் இன்றும் என்றும் செப்டம்பர் மாதம் தோறும் அமரரான பாரதியை நினைவு கூர்ந்து அவரை கௌரவப் படுத்திட மறந்ததே இல்லை 'அமுதசுரபி' என்பதனை மீண்டும் இம்மாத அட்டைப்படம் மூலம் நிருபித்தமைக்கு என் மனமுவந்த பாராட்டுகள்" என்கிறார் திருமதி சுசந்தி நாராயண், மதுரை – 11.

சென்னை – 39, கருமலைப்பழம் நீ, 'கங்காபுரிக் காவலன்' தொடர் சரித்திரக் காலத்திற்கே நம்மை அழைத்துச் செல்வது போன்ற உணர்வை ஏற்படுத்துகிறது. 'வீர நாராயணப் பேரேரிக்குப் பெயர் ஏற்பட்டதைக் குறிக்கும் போது, 'யாரோ சிந்திக்கிறார்கள்; திட்டமிடுகிறார்கள்; யாரோ பெயரை அடையப் பார்க்கிறார்கள்' என்று வீரமாதேவி கூறுவதாக வரும் வரிகள், வைர வரிகள்" என்று புகழாரம் சூட்டியுள்ளார்.

"எழுத்தில் ஓர் இளமை, காட்சிகளில் ஒரு கம்பீரம், கவிதை போன்ற கற்பனை... உள்ளம் அடிமைப்பட்டு விட்டது – கங்காபுரிக் காவலனிடம்" என் திருபுவனம், தாமரைச் செல்வி சுந்தர் உணர்ச்சி வசப்பட்டிருக்கிறார்.

"நான் ஓர் அம்மா" சிறுகதை 26 வருடங்களுக்கு முன் 'அமுதசுரபி'யில் வெளிவந்தாலும், அது தாய்மையின் பரிபூரணமாதலால் எக்காலத்துக்கும் பொருந்தும்" என்று அன்பின் செபா களியலைச் சேர்ந்தவரும், கோக்கலாடா கிராமம், (நீலகிரி மாவட்டம்) கவிஞர் என். சண்முகனும் பாராட்டி உள்ளனர்.

'சூரியம்' தொடரை எழுதிய டாக்டர் கோவி. மணிசேகரனைப் பாராட்டி செபா களியல், "எத்தனை இனிய உவமைகள், உண்மைகள், கேள்விகள், தத்துவங்கள், படிக்கவே பிரமிப்பூட்டுவதாகவும் நிறைவைத் தருவதாகவும் இருந்தது" என்று எழுதி உள்ளார்.

"ராஜேந்திரகுமாருக்குக்கூட இத்தனை சிறந்த வர்ணனைகளுடன் ஒரு சரித்திரக் கதை எழுத வருமா என வியந்து படித்து இன்புற்றேன். 'ப்ரியம்வதா'வை கண்முன் நிறுத்திய ஓவியர் மாருதியைப் பாராட்டுவதா? கதாசிரியரைப் பாராட்டுவதா? என திணறுகிறாராம் வியாசர் நகர் சிம்மவாஹினி; கொமும்பம் ராமச்சந்திரன்; பெங்கால் வட்டம் சண்முகம்; கடையல் வாசகர்களும் 'மண்ணின் மகள்' கதைக்கு பாராட்டுத் தெரிவித்துள்ளனர்.



★ கரூர் வைஸ்யா பாங்க் லிமிடெட்டின் புதிய சேர்மனாகப் பொறுப்பேற்றிருக்கும் திரு. A.D. நவநீதன் அவர்களை 'அமுதசுரபி' வாழ்த்தி வரவேற்கிறது.

குறிப்பிட்டு சொல்லும்படியாக சேலம் – 15 கே. ஜகந்நாதன்; சென்னை – 78 எச். ராஜன்; சென்னை – 61 எம்.எஸ். தியாகராஜன்; சென்னை – 94 திருமதி ஸீதா ராகவன்; சட்டநாதபுரம் பத்மா; ஸ்ரீரங்கம் ரா. ராகவன் ஆகியோரின் கடிதங்கள் திகழ்கின்றன.

நாணயம் பகுதிக்காகவே தனியாக வரும் வாசகர் கடிதங்கள் நாளுக்கு நாள் அதிகரித்துக் கொண்டே போகின்றன. 'நாணயம்' ஆலோசனைப் பகுதிக்காக அருப்புக்கோட்டை கே. சரவணன்; நாராயண நகர் ஜகன்; கருங்கல்லூரி சி. ராமச்சந்திரன்; கடையல் அ. செபாஸ்டின்; சட்டநாதபுரம் வி. ராஜா; திருபுவனம் தாமரைச்செல்வி சுந்தர்; செய்யாறு லதா ஆனந்த்; கமுதி எஸ்.டி. பாலசுப்ரமணியன்; கொச்சின் எஸ். பாலசுப்ரமணியன் முதலானோர் நிறைய ஆலோசனைகளைத் தெரிவித்துள்ளனர். வாசகர்களின் கருத்துகள் பரிசீலிக்கப்பட்டு நிறைவேற்றப்படும்.

அருமையான பல நல்ல விஷயங்களைச் சுட்டிக் காட்டும் அனைத்து வாசக நெஞ்சங்களுக்கும் நன்றி.

வழக்கம்போல, பெயர் இடம் பெறாத வாசகர்கள் மன்னிக்கவும். மீண்டும் அடுத்த மாதம் உங்களுடன் மனம் விட்டுப் பேசுவோம்.

வணக்கம்.



மத்யே நிதி - நிதியே சக்தி

# நாணயம்

நேர்மை, நாணயம், உழைப்பு செழிக்கவும் உங்கள் பொருளாதாரம் கொழிக்கவும் வழிகாட்டும் புதிய பகுதி.

## எல்லாம் பெண்கள் மயம்

சென்னை, பாண்டி பஜாரில் FAMILY SHOP-கூட்டம் அலை மோதுகிறது. பெண்கள்.... பெண்கள்.... பெண்கள்.... விற்பவர்கள் பெண்கள். வாங்குபவர்கள் பெண்கள். விற்பனையாகும் பொருள்களும் பெண்களுக்குரியவை.

இங்கே அப்படி என்ன விசேஷம்? கூர்ந்து கவனிக்க... பணம் செலுத்தும் இடத்தில் ஒரு நடுத்தர வயதுப் பெண் மணி. நடுத்தர வர்க்கத்தைச் சேர்ந்தவரும் கூட. "மூனு மாசத்துக்கு முன்னால தாங்க வாங்கிட்டுப் போனேன். 350 ரூபாய் கொடுத்தேங்க. பாருங்க இந்த கவுன்ல இருக்கிற லேஸ் ஸோட - சாயம் கவுன்பூர ஒட்டிடிச்சு. ஒரு தடவை தான் தண்ணீர்ல போட்டேன்..."

"சரிம்மா... நீங்க அத திருப்பிக் கொடுத்துட்டு அதே விலைக்கு வேற எடுத்துட்டுப் போங்க. உள்ளே போங்கம்மா" கவுண்டரில் இருந்த பெண் எந்தவிதத் தயக்கமுமின்றிச் சொல்ல, முகம் மலர்ந்த பெண்மணி உள்ளே போனாள்.

நாம் வியந்து போனோம். அலைமோதும் கூட்டத்திற்கு இதுவும் ஒரு காரணம் என்று புரிந்தது. முக சுளிப்பில்லை. பில் எங்கே? எப்ப வாங்கினீங்க? எந்த சோப்புப் போட்டீங்க? எந்தக் கேள்விகளும் கேட்கப் படவில்லை.

("Family Shop") ஃபேமிலிஷாப் என்று புதுப் பெயர் தரித்து அயல்நாட்டு ஷோரூம்களின் பொலிவினைப் பெற்று, இன்று சென்னையின் ஷாப்பிங் சென்டர்களில் முக்கியமான ஒன்றாக விளங்குவது, 54 ஆண்டுகளுக்கு முன் 'நாயுடு ஹால்' என்ற பெயரில் ஒற்றைத் தையல் இயந்திரத்தைக் கொண்டு ஒரு தனி நபரால் ஆரம்பிக்கப்பட்ட நிறுவனம்.

சென்ற மாதம் 19 ஆம் தேதியன்று தனது 55 ஆவது பிறந்தினத்தை வெற்றியுடன் கொண்டாடிய இந்நிறுவனத்தின் ஆணிவேர், காலம் சென்ற திரு.எம்.ஜி நாயுடு அவர்கள். மனைவியின் முழு ஒத்துழைப்புடன் பெண்களுக்கான உள்ஆடைகளை மிக்க கவனத்துடன் தயாரித்து, விற்பனைக்கு அனுப்பத் தொடங்கினார் திரு.எம்.ஜி.நாயுடு.

அயல்நாட்டு உள்ளாடைகளின் அணிவகுப்பு இல்லாத காலத்தில் இவரது தயாரிப்பிற்கு அமோகமான ஆதரவு கிடைத்தது. இன்றும் 'நாயுடுஹால்' என்றால் பெண்களின் மனதில் முதலில் இடம்பெறுவது ஆரம்ப காலங்களில் இருந்த உள் ஆடை வகைகள்தாம்.

எம்.ஜி.நாயுடுவின் மறைவுக்குப் பிறகு அவரது மூன்று புதல்வர்களான திரு.ஜி.சுகுமார், திரு.ஜி. ராமசாமி, திரு.ஜி.வேணு












கோபால் ஆகியவர்கள் தங்கள் தந்தையின் குறிக்கோள்களான உயர்ந்த தரத்தையும், சிறந்த சேவையையும் பின்பற்றி, அடுத்த சில ஆண்டுகளிலேயே சென்னையில் பல கிளைகளையும் உருவாக்கியதோடு பெண்களுக்கான அனைத்துப் பொருள்களும் கிடைக்கக்கூடிய ஓர் இடமாகவும் நவீனப்படுத்தி வியாபாரத்தை வெற்றியடையச் செய்துள்ளனர்.

பெண்கள், குழந்தைகள், ஏன் ஆண்களுக்குமான ரெடிமேட் ஆடைவகைகளை இவர்களே தயாரித்துக் கொள்ளும் இந்நிறுவனத்திற்கென ஆங்காங்கே தையல் மையங்கள் இயங்குகின்றன.

பெண்களுக்கெனப் பெண்களால் நடத்தப்படும் இந்நிறுவனத்தை ஆடைகளின் உற்பத்தித் தலமாக மட்டும் கொள்ளாமல் வேலைவாய்ப்புக்களையும் உருவாக்கும் தொழிற்கூடமாகவும் கொள்ளலாம். தைக்கத் தெரிந்தவர்கள், பூ வேலை செய்பவர்கள், பட்டன் தைப்பவர்கள் என்று பல பிரிவுகளில் பெண்களுக்கு வேலை வாய்ப்பு மிகுந்த ஒரு நிறுவனம் நாயுடு ஹால்.

அறிமுகக் காலங்களில் இந்நிறுவனம் பெண்களுக்கான உள் ஆடைகளுக்காக மட்டுமின்றி, பிரசவ பெல்ட்டுகளுக்கும் பெயர் பெற்று விளங்கியது. இப்போதும் இதுபோன்ற மருத்துவம் சார்ந்த சில தேவைகளுக்கு மருத்துவர்களும் குறிப்பிட்டுச் சொல்வது இந்நிறுவனத்தின் தயாரிப்புப் பொருள்களைத்தான். உதாரணமாக, Nursing Bra எனப்படும் பாலூட்டும் தாய்மார்களுக்கான பிரத்யேக உள் ஆடையைச் சொல்லலாம். இதுமட்டுமின்றி கான்சர் நோயால் மார்பக அறுவை சிகிச்சைக்குட்படுத்தப் பட்டவர்களுக்கும் கூட இங்கே உள் ஆடைகள் தயாரித்துக் கொடுக்கப்படுகின்றன.

நாகரிகம் வளர வளர, இன்றைய நாயுடுஹால், சுடிதார்கள், மிடிகள், பர்முடா போன்ற நவ நாகரிக ஆடைகளின் உற்பத்தியில் அதிக கவனம் செலுத்திக் கல்லூரி மாணவிகளைத் தன் பால் முழுவதுமாக இழுத்துக் கொண்டுள்ளது.

அடுத்ததாக இந்நிறுவனத்தின் வெற்றித் தயாரிப்பு ரெடிமேட் பிளவுஸ்கள். தினம் ஒன்றுக்கு சுமார் 400க்கும் மேற்பட்ட பிளவுஸ்கள் விற்பனையாகின்றன. பண்டிகைக் காலங்களில் இது மூன்று மடங்காக இருக்கும்.

இந் நிறுவனத்தில் எல்லா வகையான ஆடைகளும் அனைத்து ரகத் துணிகளில் தைக்கப்படுகின்றன. உள்ளாடைகளின் விலை ரூ.15லிருந்து ரூ.60 வரை உள்ளன. பிளவுஸ்கள் ரூ.40லிருந்து ரூ.200 வரையிலும், சுடிதார்கள் ரூ.150ல் இருந்து ரூ.3000 வரையிலும் தயாரிக்கப்படுவதால் அனைத்து மட்ட வாடிக்கையாளர்களும் வாங்குவதற்கு எளிதாக இருக்கிறது.

இந்நிறுவனத்திற்குத் தேவைப்படும் துணி ரகங்கள் பம்பாய், கல்கத்தா, கோயம்புத்தூர், ஈரோடு, திருப்பூர் போன்ற இடங்களிலிருந்து பெறப்படுகின்றன.

பெரும்பாலான ஆடைகள் சென்னையிலுள்ள 'Guild of Service' என்ற அமைப்பின் மூலம் தயாரிக்கப்படுகின்றன.

இந்நிறுவனத்தின் பழைய ஸ்டாக்குகள் அல்லது சிறிது குறைப்பட்ட ஸ்டாக்குகள் பொது மக்களுக்கு 'Seconds Sales" என்று விற்கப்படாமல் பலவகையான சமுக சேவை அமைப்புகளுக்கும் வழங்கப்பட்டு விடுகின்றன.

நாயுடு ஹாலின் கிளைகள் சென்னையில் மயிலாப்பூர், தியாகராயநகர், புரசைவாக்கம், அண்ணாநகர் ஆகிய இடங்களில் இருந்தாலும் சுமார் 500க்கும் மேற்பட்ட விநியோகஸ்தர்கள் தமிழ்நாடு முழுவதிலும், ஆந்திரா, கர்நாடகா, கேரளா ஆகிய மாநிலங்களில் வட இந்தியாவில் பம்பாய், டில்லி போன்ற நகரங்களில் உள்ளனர்.

சிங்கப்பூர், மலேசியா போன்ற நாடுகளுக்கு நாகரிக ஆடைகளையும் பிளவுஸ்களையும் ஏற்றுமதி செய்கின்றனர் சிங்கப்பூரில் நாயுடு ஹால் ஷோரூம் ஒன்றும் இயங்கி வருகிறது.

வாடிக்கையாளர்களின் விருப்பத்திற்கேற்பக் குழந்தைகளுக்கான ஆடைகள், விளையாட்டுப்பொருட்கள், மற்றும் பிறந்த குழந்தைகளுக்குத் தேவைப்படும் அனைத்தும் இங்கேயே பெறுவதற்கான வசதிகளும் செய்யப்பட்டிருக்கின்றன.

ஒரு தையல் இயந்திரத்துடன் தனிநபர் ஒருவரால் ஆரம்பிக்கப்பட்ட ஒரு சிறுதொழில் இன்று ஆண்டொன்றுக்கு ஒரு கோடி ருபாய்க்கும் மேல் விற்றுமுதலைக் காணும் அளவிற்கு வளர்ச்சி அடைந்துள்ளதற்கான காரணமாக திரு.ராமசாமி கூறுவது, முழுக்க முழுக்க தந்தை எம்.ஜி. நாயுடு அவர்களின் உழைப்பும் தீர்க்கதரிசனமும்தான்.

என்று திரு.ராமசாமி கூறுகிறார். அவருடைய செயலாற்றலுடன் ஒப்பிடும் போது, எங்களுடைய பங்கேற்பு மிக மிகச் சாதாரணமானதுதான் என்று ரொம்பவும் அடக்கத்துடன் கூறுகிறார். எதிர்காலத் திட்டங்களாக மேலும் சில கிளைகளைத் திறப்பதும், பெண்களுக்கான சில பிரத்யேகமான பொருட்களைத் தயாரிப்பதுமாகும் என்று குறிப்பிடுகிறார்.

– பவானி

# இல்லத்திற்கு எழில் சேர்க்க...




இயற்கை அழகை ஊட்டி, கொடைக்கானல், சிம்லா, காஷ்மீர் என்று பயணப்பட்டு நேரடியாக ரசிக்கலாம்.

இது வாழ்நாள் முழுவதும் செய்ய இயலாத காரியம். காமிராவில் சிறைப்பிடித்து புகைப் படங்களாக ஆல்பங்களில் அடுக்கி வைத்துக் கொண்டு பார்த்துப் பார்த்து ரசிக்கலாம். இதுவும் அடிக்கடி செய்ய முடியாத செயல்.

நெஞ்சையள்ளும், இந்த இயற்கைக் காட்சிகளை 'வால் போஸ்டர்களாக' அச்சடித்து, வரவேற்பறைகளில் ஒட்டி வைத்துக் கொள்ள முடிகிறது. இது சமீப ஆண்டுகளாக மிகப் பரவலாகவும், பரபரப்பாகவும் வெற்றியடைந்த வியாபாரமாக இருந்தது. இந்த 'வால்பேப்பர்'களைப் பாதுகாப்பது சிறிது கடினமாகத்தான் இருக்கிறது. நாளடைவில் ஒளியிழந்து மங்கியும் போய்விடுகிறது.

தொழில் நுட்ப வளர்ச்சியின் காரணமாக இப்போது Tiles எனப்படும் பீங்கான் ஓடுகளில் பல வகைப்பட்ட ஓவியங்கள் அச்சிடப்பட்டு வெளிவந்துள்ளன. இவையும் இப்போது நல்ல வரவேற்பைப் பெற்று வருகின்றன.

இவற்றையும் விட அதிகத் தொழில் நுட்ப முறையில் இயற்கைக் காட்சிகளையும், லியானார்டோ டாவின்ஸி போன்ற பிரபல ஓவியர்களின் விலையுர்ந்த ஓவியங்களையும் சரித்திரக் காட்சிகளையும், தத்ரூபமாகப் பீங்கான் ஓடுகளிலும், உலோகங்களிலும், கண்ணாடிகளிலும் ஏன் மரங்களிலும் கூட அச்சடித்து வழங்கவிருக்கிறது. ஔரங்கா பாத்தைச் சேர்ந்த நார்டெக் இந்தியா லிமிடெட், இவைகளை சமீபத்தில் சென்னையில் நடைபெற்ற 'Lving in Stlye' கண்காட்சியில் கண்டு மகிழ முடிந்தது.

# புதியவை அறிமுகம்

### ஜீரோ - பீ ஆன் லைன்

அயான் எக்ஸ்சேன்ஜ் நிறுவனத்திலிருந்து மற்றுமொரு ஜீரோ - பீ - வாட்டர் ஃபில்டர் அறிமுகப்படுத்தப்பட்டு உள்ளது. இதன் விலை... மயக்கம் போட்டு விடாதீர்கள்... ரூ. 3,610 தான். இது ஒரு வருடத்திற்கான சர்வீஸ் சார்ஜையும் சேர்த்து.

### ஆக்வா கார்டு

குடிநீர்க்குழாயுடன் இணைத்து சுத்தமான குடிநீர் பெறக்கூடியது ரோமன் ஹெல்த் கேர் சென்டரின் புதிய அறிமுகம். ரூ. 3500 விலையுடைய இது எல்லாக்கடைகளிலு கிடைக்கக்கூடியது.

### ஹெக்ஸிட்

வீட்டு உபயோகத்திற்கான பூச்சிக்கொல்லி மருந்து. 'ஹோச் சாஸ்ட் இந்தியா'வின் அறிமுகம். 250ml, 500ml, அளவுகளில் ஸ்ப்ரேயருடன் கிடைக்கும் இம் மருந்து சுகமான நறுமணத்துடன் கூடியது. முறையே ரூ. 39.75, ரூ. 59 விலை கொண்டது.

### அல்ட்ரா க்ரைண்ட்

கோயம்புத்தூரைச் சேர்ந்த எல்ஜி ஃபைனான்ஸ் நிறுவனத்தின் தயாரிப்பான இந்த அல்ட்ரா க்ரைண்டு பார்ப்பதற்கு மிக அழகாகவும் பயன்படுத்த மிகச் சுலபமாகவும் உள்ளது. இட்லி, தோசைக்கு மாவு அரைத்துக் கொடுப்பதுடன் சப்பாத்தி மாவு பிசைவது. தேங்காய் துருவுவது ஆகிய பணிகளையும் செய்கிறது. விலை ரூ. 4,500. சற்று அதிகம் தான்.

### டேபிள் டாப் சால்ட்

சூப்பர் சால்ட்ஸ் பிரைவேட் நிறுவனத்தால் அறிமுகப்படுத்தப் பட்டுள்ளது இந்த அயோடைஸ்டு




'டேபிள் டாப் உப்பு'. அயோடைஸ்டு உப்புகளிலேயே சிறந்ததாகக் கருதப்படுகிறது.

### பிளாஸ்டிக் தபால் உறைகள்

பம்பாயைச் சேர்ந்த 'சுப்ரீம் மாட்ரிக்ஸ்' நிறுவனத்தினரால் அழகிய வண்ணங்களிலும் பல அளவுகளிலும் அறிமுகப்படுத்தப்பட்டுள்ளன இந்த பிளாஸ்டிக் தபால் உறைகள். பசை தேவையற்ற இந்த உறைகளின் மூலம் உங்கள் கடிதங்களை அனுப்பும்போது கூடுதல் தபால்களையும் ஒட்டத் தேவையில்லை. கசங்காமல், தண்ணீரால் பாதிக்கப்படாமல் புத்தம் புதியதாக ' உங்கள் கடிதங்களை அனுப்பலாம்.

---

இந்நிறுவனம் மேற்கு ஜெர்மனியைச் சேர்ந்த 'NORTECH CHEMIE GMBH. CO. KG' எனும் நிறுவனத்தின் முதன் முறையாக பிரின்டிங் டெக்னாலஜியில் அதிமுன்னேற்றத் தொழில் நுட்பமான 'Reproprint Impriting' முறைப்படி வண்ணங்களையும் இயற்கைக் காட்சிகளையும், இயற்கைக்கு அடுத்தபடியான தத்ரூபத்துடன் அச்சிடப்பட்ட டைல்கள் [Tiles] மார்பிள்கள், மரங்கள், கண்ணாடிகள், உலோகங்கள் ஆகியவற்றைத் தயாரிக்கவிருக்கிறது.

10 கோடி ரூபாய் முதலீட்டில் இதற்கான தொழிற்சாலை மகாராஷ்டிராவில் 'வாலூஜ்' எனும் இடத்தில் அமைந்துள்ளது. இதற்கான Reproprint இயந்திரங்களும், உபரி இயந்திரங்களும் மேற்கு ஜெர்மனியின் 'நார்டெக்' நிறுவனத்திலிருந்து இறக்குமதி



செய்யப்பட்டுள்ளது. இத்திட்டத்திற்கான நிதி உதவியை ICICI. IDBI மற்றும் ஏஷியன் டெவலப்மென்ட் வங்கியும் வழங்கியுள்ளன.

இவ்வாறு அச்சடிக்கப்பட்ட டைல்கள், கண்ணாடிகள், மரங்கள், உலோகங்கள் ஆகியவைகளை ஐந்து நட்சத்திர ஹோட்டல்கள், நீச்சல் குளங்கள், விமான நிலையங்கள், மருத்துவ மனைகள் போன்று எந்த இடத்திலும் சுலபமாகப் பதிய வைத்துக் கொள்ளலாம்.

இந்நிறுவனத்தின் உற்பத்திப் பொருட்கள் நாடெங்கிலும் பல விநியோகஸ்தர்களின் மூலம் விற்பனைக்கு வரவிருக்கிறது.

— ஜே. கே.

**SHELTERS**
A Citihome Associate

# ஒரே நாளில் உங்களுக்கென்று ஒரு வீடு




'காணி நிலம் வேண்டும் பராசக்தி
காணி நிலம் வேண்டும்
காணி நிலத்தினிடையே ஓர் மாளிகை
கட்டித் தரவேண்டும்.
பத்துப் பன்னிரண்டு தென்னைமரம்
பக்கத்திலே வேணும் நல்ல முத்துச்
சுடர்போல்
நிலவொளி முன்பு வரவேணும்...'

காணி நிலத்திலே பங்களாவும் வேணும், பத்துப் பன்னிரண்டு தென்னை மரங்களும் வேணும், நிலவும் வந்து எட்டிப் பார்க்க வேணும், குயில் ஓசை வந்து காதில் விழவேண்டும், சித்தம் மகிழத் தென்றல் வந்து வீசவேண்டும்... இன்னும் என்னென்னவோ வேண்டும் என்று பாரதியார் பராசக்தியை வேண்டிக் கொண்டது போல, இன்று ஒவ்வொருவர் மனதிலும் சொந்த வீடு பற்றி ஏகப்பட்ட கனவுகள். இதைச் செயல்படுத்துவதற்குக் குறுக்கே சீனச் சுவராகப் பொருளாதாரம்.

நினைத்தோமா... செயல்பட்டோமா... முடித்தோமா என்றிருந்தால்தான் சொந்தவீடுவாசியாக முடியும்.

எங்கே வீடு வாங்கலாம்? எங்கே கடன் வாங்கலாம்? எனக்குக் கடன் தருவார்களா? எவ்வளவு தருவார்கள்? யாரைக் கேட்பது? யார் நல்ல வீடு கட்டித் தருவார்கள்? என்னால் முடியுமா? என்று நமக்குள்ளாகவே கேள்விகள் கேட்டுக் கொண்டு பதில் பெற முடியாமல், தள்ளிப் போட்டுக் கொண்டு போவதே நாம் செய்யும் இமாலயத் தவறாகி விடுகிறது.

இந்தப் பிரச்னையையே தங்களது மூலதனமாகக் கொண்டு வெற்றிபெற்று வருகிறார்கள் 'ஷெல்டர்ஸ்' என்ற நிறுவனத்தினர். 'City Bank' என்ற அயல்நாட்டு வங்கியின் துணை நிறுவனம் இது.

வீட்டைத் தேர்ந்தெடுப்பது, கடன் தரும் நிறுவனங்களைத் தேர்ந்தெடுப்பது, கடன் பெற்றுத் தருவது, பத்திர விவகாரங்களை கவனித்துக் கொள்வது, தரமான கட்டட நிறுவனங்களைத் தேர்ந்தெடுப்பது போன்ற அனைத்திற்கான ஆலோசனைகளையும், வழிகாட்டல்களையும் ஒரே கூரையின் கீழ் பெற்றுவிடக்கூடிய இடம்தான் 'ஷெல்டர்ஸ்' (Shelters).

*144*, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை, சென்னை – 34 என்ற முகவரியில் செயல்படும் 'ஷெல்டர்ஸ்' சென்ற மாதம் சென்னை தாஜ் ஹோட்டலில் 'ஒரே நாளில் வீட்டையும் தோந்தெடுத்து கடனையும் பெற்றுத் தருவதற்கான' கண்காட்சி ஒன்றினை நான்கு நாள்கள் நடத்தினர்.

சுமார் 12,000 பேர் பார்வையிட்ட இக் கண்காட்சியில் (அலாக்கிரிட்டி ஹவுசிங், அல்சா, எஸ்.ஐ., சைத்தன்யா பில்டர்ஸ், டி.பி.எஸ். ப்ராபர்டீஸ், தூகர் ஃபைனான்ஸ், ஹீரால் கன்ஸ்ட்ரக்ஷன், நஹேஜா க்ரூப், கே.ஜி. பில்டர்ஸ், சான்மார்) ஆகிய நிறுவனங்கள் தங்களது மாதிரி வீடுகளைப் பார்வைக்கு வைத்திருந்தனர்.

இந்த நான்கு நாள்களில் 190 ஃபிளாட் வீடுகள் விற்கப்பட்டு ரூ. 24 கோடிக்கான கடன்கள் வழங்கவும் முடிவு செய்யப்பட்டுள்ளது. இவற்றில் 'அலாக்கிரிட்டி ஹ... சிங்'கில் மட்டுமே ரூ. 7.2 கோடி... கான வீடுகள் பதிவு செய்யப்பட்... முதலிடத்தையும் பெற்றது. சுமா... ரூ. 30 கோடிக்கான 400 கட... விண்ணப்பங்கள் பெறப்ப... டுள்ளன.

இந்த விவரங்களை நமக்கு... தெரிவித்த 'ஷெல்டர்ஸ்' நிறுவ... அதிகாரி, திரு. மகாலிங்கம்... அடுத்த ஆண்டும் இதே போன்... கண்காட்சி நடத்தப்படும் என்றார்... "நம்மால் முடியுமோ, முடியாதே... என்கிற தயக்கம்தான் ஒவ்வொ... வரையும் சொந்த வீடு பெற முடி... யாமல் செய்து விடுகிறது. எங்க... ளிடம் வாருங்கள். உங்களால்... முடியும் என்று உணர்த்தவே இந்தக்... கண்காட்சி ஏற்பாடு செய்யப்... பட்டது. எதிர்பார்த்த வரவேற்பு... பெற்றது" என்றார்.

மனிதனின் அடிப்படைத்... தேவைகளான இருக்க இடம்... உடுக்க உடை, உண்ண உண... என்ற மூன்றில் முதலாவதைப்... பெற உதவும் 'ஷெல்டர்ஸ்' நிறு... வனத்தை 'நாணயம்' சார்பில்... வரவேற்கிறோம்.

— பாரதி



டாக்டர் கி. வேங்கடசுப்பிரமணியன்

# "இதனை இதனால் இவன் முடிக்கும்" ..



"எல்லாப் பொருளும் இதன் பாலுள –
இதன் பால்
இல்லாத எப்பொருளும் இல்லையால்"

என்று புலவர் பெருமக்கள் போற்றிய வள்ளுவனின் பொய்யா மொழி எல்லாப் பொருளையும் தன்னுள்ளே அடக்கியுள்ளது. அதில் இல்லையென்றால் அப்பொருளே இல்லையென்பதே பொருள். நிர்வாக இயலின் (மானேஜ்மென்ட்) பல கூறுகளை 2000 ஆண்டுகளுக்கு முன்னரே அலசி ஆராய்ந்து நமக்குக் காட்டியவர் வள்ளுவர்.

இன்று Peter Dracker என்னும் நிர்வாக இயல் நிபுணர் "Right man for the right job" என்பதே நிர்வாக இயலின் முதற்படி என்கிறார். இன்று பல நிறுவனங்கள் முன்னேறாமல் நிற்பதின் காரணம் என்ன தெரியுமா? "Square Pegs in Round Holes" என்பதுதான். அதாவது அந்த அந்த வேலைக்குத் தகுதியற்றவரை அவ்வேலைகளைப் பார்க்க விடுவதால், ஏற்படுவது லாபமல்ல, குழப்பம் – கடும் குழப்பம். இதை எப்படித் தவிர்ப்பது?

இன்று ஒரு நிர்வாகத்துக்கு முதல் தேவை நல்ல உழைப்பாளிகளே. நல்ல தம்பிகள் இருந்தால், 'தம்பியுடையான் படைக்கு அஞ்சான்' என முன்னேற முடியும். அப்படி இன்றி, முதலாளி கிழக்கே பார்த்தால் மேற்கே பார்க்கும் கூட்டாளிகள் இருந்தால் என்ன நேரும்? "சாண் ஏறினால் முழம் சறுக்கும்" என்ற நிலை ஏற்படும்.

நீங்கள் "Charge of the Light Brigade" என்ற பழம் ஆங்கிலப் பாட்டைப் படித்திருப்பீர்கள். தவறுதலாக ஒரு தளபதி தன் படையை முன்னேறச் சொல்லி ஆணையிட்டு விடுகிறான்.

தளபதி ஆணை தவறு என்று தெரிந்தபோதிலும் அந்த உத்தரவுக்கிணங்க வெடிக்கும் பீரங்கிகளுக்கு எதிராக முன்னேறி வீர சுவர்க்கம் புகுந்த அந்த வீரர்களைப் பற்றிய நினைவு, அழியா ஓவியமாட நம் முன் இன்றும் பல நூறு ஆண்டுகளுக்கும் நிலைத்து நிற்கிறது.

என்ன காரணம்? ஆணைக்கு அடி பணிவதே நம் கடைமை என்று உணர்ந்தவராலேயே நாடு உயரும், வீடு உயரும். அப்படி இன்றி சாதாரண மாறுதல்கள் (Transfers) வந்தபோதுகூட நீதி மன்றங்களுக்குச் செல்பவர்களால் நாட்டை உயர்த்த முடியுமா? முடியாது.

"இரும்பு மனிதர் என்று பெயர் பெற்ற நம் மாபெரும் விடுதலை வீரர் சர்தார் படேல் வெற்றியின் இரகசியத்தைச் சுருங்கக் கூறினார். "நீ எடுத்த முடிவில் மாறாதே. உன் முடிவை நடைமுறைப்படுத்தும் மக்களாகப் பார்த்து உன்னுடன் அவர்கள் பணியாற்றுமாறு பார்த்துக்கொள்" என்றார். பல நூற்றுக்கணக்கான சமஸ்தானங்களை கத்தியின்றி ரத்தமின்றி பாரத அன்னைக்கு அடிபணிய வைத்த வீரரின் தாரக மந்திரம் "உன்னுடன் ஒத்துழைக்கும் மக்கள் உன் ஆணைகளை முழு மனத்துடன் நடைமுறைப்படுத்துவோர் மட்டும் உன்னுடன் வரட்டும்" என்றார்.

எனவே, ஒரு நிர்வாகிக்கு வேண்டிய முதற்படைக் கலன் என்ன? அவன் வெற்றிப்படிகளில் வேகமாக ஏறவேண்டிய ஏணி எது?

எந்தப் பணியையும் சிறப்பாகச் செய்வோரைத் தேர்ந்தெடுக்கும் கலையை அவன் நன்கு அறிந்திருக்க வேண்டும்.

Personnel Management – என்பதே நிர்வாகிகள் அறிந்து கொள்ள வேண்டிய முதல் பாடம்.

இருக்கும் பணிகள் பலப்பல. இதை இதை இவர் இவர் செய்வார் என்று "அறிந்து" அல்ல, "ஆய்ந்து" அவரவரைத் தேர்ந்தெடுத்தலே திறமை மிக்க நிர்வாகியின் செயல். இதை எவ்வளவு அழகாக வள்ளுவப் பெருந்தகை கூறுகிறார் என்று பாக்கலாமா?

"இதனை இதனால் இவன் முடிக்கும்
என்றாய்ந்து
அதனை அவன்கண் விடல்" (52–517)

இதில் முக்கியமானது "விடல்" தான். ஒரு பணியாளரிடம் அவர் திறமையை ஆய்ந்து ஒரு வேலையை ஒப்படைத்து விட்ட பின்னர், அடிக்கடி நட்ட செடியைத் தோண்டி வேர் விட்டிருக்கிறதா என்று நாம் பார்ப்பது போல் பார்க்காமல், அவரிடமே முழுப் பொறுப்பையும் விட்டு விடுங்கள் (விடல்). உங்களுக்கு வெற்றி நிச்சயம்.

டாக்டர் அமரர். மு.வ. அவர்கள் வாக்கில் "இந்தத் தொழிலை "இக்கருவியால் இன்னவன் முடிப்பான்" என ஆய்ந்து தெரிந்து வினையாடலே" நன்மை பயக்கும். இது இன்னாள் நிர்வாக இயலின் முக்கிய விதி. அன்றே வள்ளுவன் சொன்னது.

(இன்னும் வரும்)

## சிறப்புக் காலணிகள் கண்காட்சி

முதன்முறையாக, டில்லியில், இந்தியாவில் தயாராகும் சிறப்பு ஷூக்களின் கண்காட்சி இந்த மாத நடுவில் நடைபெறவிருக்கிறது. சுமார் 300 க்கும் மேற்பட்ட உற்பத்தியாளர்களும், ஏற்றுமதியாளர்களிடம் இதில் கலந்து கொள்ளவிருக்கின்றனர்.

# மார்கதரசி சிட்ஃபண்டு சென்னைக்குப் புதிது



முப்பது வருடங்களுக்கும் மேலாக ஆந்திர மக்களின் அமோக ஆதரவைப் பெற்று, இந்தியாவின் மிகப்பெரிய சிட்ஃபண்டு நிறுவனமாகத் திகழ்கிறது 'மார்கதரசி சிட்ஃபண்டு'.

இந்நிறுவனம் இம்மாத இறுதிக்குள் சென்னையில் தனது முதல் கிளையைத் திறந்து தமிழக மக்களுக்கும் சிட்ஃபண்டின் மூலம் சேவை செய்யவிருக்கிறது.

நேர்மை, நாணயத்திற்குப் பெயர் பெற்ற 'மார்கதரசி சிட்ஃபண்டு' நிறுவனத்தின் பின்னணி மிகச் சிறப்பானதாக உள்ளது. ஆந்திர மாநிலத்தின் புகழ்பெற்ற தெலுங்குப் பத்திரிகை 'ஈநாடு', ஆங்கிலப் பத்திரிகை 'நியூஸ் டைம்', 'பிரியா' ஊறுகாய், விசாகப்பட்டினத்திலுள்ள 'டால்பின் ஹோட்டல்ஸ் லிமிடெட்' போன்ற பல வெற்றி நிறுவனங்களின் உரிமையாளர் திரு. ராமோஜிராவ் அவர்களால் 1962இல் ஆரம்பிக்கப்பட்டது 'மார்கதரசி'.

பத்தே வருடங்களில் 10,000 உறுப்பினர்களைப் பெற்று சுமார் 1.50 கோடி ரூபாய் ஏலச்சுழற்சி (Auction Turnover) செய்யும் அளவிற்கு வளர்ச்சி பெற்ற இந் நிறுவனத்தின் நிர்வாக இயக்கத்தை திரு. ஏ. கிருஷ்ணமூர்த்தி அவர்கள் ஏற்றார். இவர் இந்தியாவில் காஸ் சிலிண்டர்களின் உபயோகம் உணரப்படும் முன்னரே அதற்கான விநியோக உரிமையைப் பெற்றிருந்ததால் 'கால் கேஸ் கிருஷ்ணமூர்த்தி' என்று செல்லமாகவும் அழைக்கப்பட்டவர்.

இவர், ஆந்திராவில் புகழ் பெற்ற பல நிறுவனங்களின் இயக்குநர், நிர்வாக இயக்குநர், பங்குதாரர் போன்ற பதவிகளையும் வகித்து வருவதோடு, Federation of Andhra Pradesh Chambers of Commerceஇன் பிளாட்டினம் ஜீப்ளி வருடத்தின் (1991-92) தலைவராகவும் பதவி வகித்தவர்.

சமீபத்தில் சென்னை வந்திருந்த திரு. கிருஷ்ணமூர்த்தி அவர்களைச் சந்தித்துப் பெற்ற மார்கதரசி சிட்ஃபண்ட் பற்றிய மேலும் சில தகவல்கள் :

"ஸ்ரீராம் நிறுவனங்களின் உப தலைவர் திரு. ஏவி. எஸ். ராஜா அவர்கள், கடந்த 4 ஆண்டுகளாகவே எங்களை சென்னையில் கிளைத் திறக்கச் சொல்லி வந்தார்.

"சரியான ~பர்களுக்காகவும், சரியான காலகட்டத்திற்காகவும் காத்திருந்த நாங்கள், இப்போது அவை திருப்திகரமாக அமை திருப்பதால் தமிழ்நாடு நோக்கி வந்துள்ளோம். முப்பது வருடங் களுக்கும் மேலாக, சீட்டு நிறுவனங் களுக்கான ஆந்திர மாநில சட்டங் களையே பின்பற்றி வெற்றிகண்ட நாங்கள், தற்போது தமிழகத்தி நடைமுறையிலுள்ள மத்திய சட்டங் களுக்கு உட்பட்டும், மகத்தா வெற்றியடைய முடியும் என்கி உறுதியான நம்பிக்கையோ செயல்பட வந்திருக்கிறோம். எங் ளுடைய அணுகுமுறையும், செ லாக்கமும் முற்றிலும் மாறுபட் தாக இருக்கும்.

"ஆந்திராவில் சென் ஆண்டில் மட்டுமே ரூ. 284 கோ ரூபாய்க்கு வணிகம் (Busine Turnover) செய்யப்பட்டிருக்கிறது என்றால் அது, மக்களுக்கு இ நிறுவனத்தின் மீதுள்ள நம்பிக் தான் காரணம். இதே அள நம்பிக்கையை தமிழக மக்களிடமு பெறமுடியும் என்ற நம்பிக் எங்களுக்கு இருக்கிறது.

"சீட்டுகளில் பெறப்படு தொகையை, முற்றிலும் புதி துறைகளில் தொழில் தொட கவோ அல்லது அதுபோன் துறைகளின் விரிவாக்கத்தி செலவழிப்பதோ என்றல்லாம மேலும் பல கிளைகளை தொடங்குவதற்கும், புதிய சீட் பிரிவுகளை அறிமுகப்படுத் வதற்கும் மட்டுமே பயன்படுத் கொள்வது என்பதையே பிரதா கொள்கையாகக் கொண்டுள்ள மார்கதரசி".

தமிழகத்தில், மார்கதரசியி செயலாக்கத்திற்கான பொறு களை ஏற்றிருப்பவர் திரு. எம். பாலசுப்பிரமணியன் அவர்க இவர் ஸ்டேட் பாங்க் ஆ இந்தியாவின் உயர் அதிகாரியா பொறுப்பேற்றிருந்தவர்.

சென்னைக்கு வரவிருக் 'மார்கதரசி சிட்ஃபண்டு' நிறுவ தின் வெற்றிக்கு, 'ஸ்ரீராம் வனங்கள்' சார்பில் வாழ் களைக் கூறி விடை பெற்றோம்.

— சாந்

# புத்தக விமர்சனம்

## ஜப்பானுக்கு ஏற்றுமதி வாய்ப்புகள்

ஆசிரியர் : து.சா.ப. செல்வம்

வெளியிட்டாளர் : அபாஸ பப்ளிகேஷன் சர்விஸஸ். உம்மிடி எக்ஸிக்யூடிவ் சென்டர், 1, கொண்டி செட்டி தெரு, சென்னை-1.

எந்த ஒரு தொழில் வளர்ச்சிக்கும், வெற்றிக்கும் இன்றளவில் இன்றியமையாததாக இருக்கும் ஒன்று ஏற்றுமதி. உள்ளூர் சந்தைகளை மட்டுமே நம்பிப் பொருள்களை உற்பத்தி செய்வது வெற்றிப்படிகளில் நாம் ஏறுகின்ற வேகத்தைக் கட்டுப்படுத்தக் கூடியதாகிவிடும். இதை நினைவில் கொண்டு எந்த ஒரு தொழிலையும் தொடங்குவது நலம். ஏற்றுமதி செய்வது சுலபமா? என்றால், உடனே ‘இல்லை’ என்று சொல்லுவதை விட அதன் நுணுக்கங்களைச் சரிவரப் புரிந்து கொண்டு முறைப்படி செயல்பட்டால் ‘சுலபம்’ என்று பதில் சொல்வது சிறந்தது.

இந்த நுணுக்கங்களை எப்படி அறிந்து கொள்வது?

ஏற்றுமதி வியாபாரம் பற்றி ஏராளமான நூல்கள் தமிழிலும் ஆங்கிலத்திலும் வெளிவந்துள்ளன. அவற்றை நன்கு பயன்படுத்திக் கொள்ள வேண்டும்.

அப்படி ஒரு அரிய வாய்ப்பை நமக்கு ஏற்படுத்திக் கொடுக்கிறது இந்த நூல்.

அதுவும் ஜப்பானுக்கு ஏற்றுமதி வாய்ப்பு! து.சா.ப. செல்வம் அவர்கள், இதற்கு முன்பு ‘நீங்கள் ஏற்றுமதி செய்யலாம்’ என்கிற நூலை எழுதி, நல்ல வரவேற்பும் பெற்றுள்ளார்.

உலகிலேயே மிக வேகமாக முன்னேறிவரும் நாடு ஜப்பான். தன் முன்னேற்றம் அதிசயக்கத்தக்க ஒன்றாகும். இந்த நாட்டுடன்




ஏற்றுமதித் தொடர்புள்ள பல நாடுகள் போட்டி போடுகின்றன.

அமெரிக்க, ரஷ்ய நாடுகளுக்கு அடுத்தபடியாக நமது பொருள்கள் ஏற்றுமதி செய்யப்படுவது ஜப்பானுக்குத்தான். நமது ஏற்றுமதியில் 10 சதவிகிதம் ஜப்பானுடன் நிகழ்கிறது. ஆனால் மற்ற நாடுகளுடன் ஒப்பிடும் போது இது மிகக் குறைவு என்கிறார் ஆசிரியர்.

இந்த நூலில் ஆசிரியர் குறிப்பிடாத விஷயமே இல்லை என்று சொல்லும் அளவிற்கு ஜப்பானின் பூகோள விவரங்கள், விடுமுறைகள் உள்பட வர்த்தகத்திற்கான அனைத்து விவரங்களும் விளக்கமாகக் கொடுக்கப்பட்டிருக்கின்றன.

ஜப்பானுக்கு எந்தெந்தப் பொருட்களை ஏற்றுமதி செய்யலாம்? அவற்றின் தரம் எப்படி இருக்க வேண்டும். அதற்காக யார் யாரை எந்தெந்த மையங்களைத் தொடர்பு கொள்ள வேண்டும்? ஏற்கனவே இந்தப் பொருளை எந்தெந்த நாடுகள் ஜப்பானுக்கு ஏற்றுமதி செய்கின்றன? அதனின்று நாம் எப்படி வெற்றி பெறுவது போன்ற அனைத்தையும் தெளிவாகக் குறிப்பிட்டுள்ளார்.

நூலில் உள்ள இருபத்தைந்து அத்யாயங்களிலும் ஒவ்வொரு தலைப்பை எடுத்துக் கொண்டு சிறப்பான முறையில் தெளிவுபடுத்தியுள்ளார்.

உதாரணமாக, ஜப்பான் மார்க்கெட்டில் வெற்றிபெறும் முறைகள், மார்க்கெட்டில் நுழைய நுணுக்கங்கள், ஜப்பானுடன் இந்திய வர்த்தகம் ஓர் அலசல் போன்றவற்றைச் சொல்லலாம்.

ஜப்பான் வர்த்தகர்கள் மற்றும் இறக்குமதியாளர்களின் சங்கங்கள், இந்தியாவுடன் கூட்டுவர்த்தகம் செய்யவிரும்பும் ஜப்பான் நிறுவனங்கள் போன்றவற்றின் முகவரிகளைக் (ஒவ்வொன்றிலும் சுமார் 50 முகவரிகள்) கொடுத்திருப்பது பயனுடையது. பாராட்டுக்குரியதும்கூட.

இந்த விவரங்கள் தவிர, ரெடிமேட் ஆடைகள், தோல், கிரானைட், கடல் பொருள்கள், துணி வகைகள், கைவினைப் பொருட்கள், பொறியியல் பொருட்கள், நகைகள் - நவரத்தினங்கள், மருத்துவப் பொருட்கள், தரைப் பதிப்புக்கள் என்று ஒவ்வொரு துறைக்கும் தேவைப்படும் புள்ளி விவரங்களையும் சீரிய முறையில் கொடுத்திருக்கிறார் ஆசிரியர்.

‘தரத்திற்கு மிகவும் முக்கியத்துவம் கொடுப்பவர்கள் ஜப்பானியர்கள். விலை குறைவாகக் கிடைக்கிறது என்பதற்காகத் தரத்தை விட்டுக் கொடுப்பவர்கள் அல்ல ஜப்பானியர்கள். மேலும் அனுப்பப்படும் பொருள்களின் வெளிப்புறத்தையும் மிகவும் கவனிக்கிறார்கள். வடிவமைப்பு, லேபிள் ஆகியவை கண்டவுடன் சுண்டியிழுக்கும் வண்ணம் கவர்ச்சியுடன் இருக்க வேண்டும்’ என்பன போன்ற ஜப்பானிய வர்த்தகர்களின் எதிர்பார்ப்புகள், மன நிலை, குணங்கள் ஆகியவையும் ஆங்காங்கே குறிப்பிடப்பட்டுள்ளன.

புதிய தொழில் தொடங்குபவர்கள், ஏற்றுமதி செய்ய வேண்டும் என்று எண்ணம் இருப்பவர்கள் அனைவரும் படித்துப் பயன் பெற வேண்டிய சிறந்த நூல்.

– எம்.எஸ்.எஸ்.



# கடன் வாங்கியும் வீடு கட்டலாம்

கடன் பட்டார் நெஞ்சம் போல் கலங்காதிருக்க கடன் எந்தக் காரணத்திற்காகவும் வாங்கக் கூடாது என்பது நமது முதாதையர் நமக்குக் கற்றுக் கொடுத்துள்ள ஒரு வாழ்க்கைப் பாடம். இது இன்றும் பொருந்துமா? வாங்கிய கடனை எப்படிப் பயன்படுத்துகிறோம் என்பதை வைத்துத்தான் நாம் செய்தது சரியா, தவறா என்பதை நிர்ணயிக்கலாம். குதிரைப் பந்தயத்திற்காக வாங்கப்பட்ட கடன் 'அதமம்'; மகளின் திருமணத்திற்காகவோ அல்லது மருத்துவச் செலவிற்காகவோ, நிர்ப்பந்தத்தினால் வாங்கும் கடன் 'மத்திமம்'; ஆனால், ஒரு நல்ல முதலீட்டிற்காக வாங்கும் கடன் 'உத்தமம்' என்றே சொல்லாம். கடன் வாங்கி வியாபாரம் செய்வதோ அல்லது கம்பெனிப் பங்குகளில் அதிக லாப நோக்கோடு முதலீடு செய்வதோ ஒரு துணிவுள்ள செயல். அந்தத் துணிவுள்ளவர்கள் சிலர் வாழ்க்கையில் வெற்றியடைகிறார்கள்; பலர் நஷ்டப்படுவது உண்டு.

ஆனால், வீடு கட்ட அல்லது வாங்க வாங்கும் கடன் ஒரு நல்ல முதலீடு. தனக்கென தன் தலைக்கு மேல் ஒரு கூரை வேண்டும் என்று நினைப்பது தேவைக்கு மட்டுமின்றி சமுதாயத்தில் சொந்த வீடு வைத்து இருப்பது ஒரு கௌரவத்தைத் தருகிறது என்பது ஒரு காரணம். திருமணப் பேச்சுவார்த்தைகளில் சம்பந்தம் செய்யப் போகும் குடும்பத்தாருக்குச் சொந்த வீடு உள்ளதா என்பது ஒரு முக்கியத் தகுதியாகக் கருதப்படுகிறது.

## விலைவாசி உயர்வுக்கு ஒரு மாற்று உபாயம்

சேமிப்புகள் சேரும் வரை காத்திருப்பது, கடலில் அலை ஓயும் வரை காத்திருப்பதற்கு ஒப்பாகும். விலைவாசி ஏற்றம் உலகெங்கும் இப்போது நிரந்தரம் ஆகிவிட்டது. முதல் உலகப் போரில் தோற்ற ஜெர்மனியில் ஏற்பட்டுள்ள கடுமையான விலைவாசி ஏற்றத்தினால் ஆயுள் பூராவும் ஒரு வீடு வாங்குவதற்குச் சேர்த்து வைத்த ஒருவர், அந்தச் சேமிப்பலிருந்து ஒரு ஆணியைத் தான் வாங்க முடிந்தது என்பதும், ஹிட்லர் பதவிக்கு வர இந்த விலைவாசியேற்றம் ஒரு காரணம் என்பதும் வரலாறு. இன்று கடன் வாங்குபவர்கள் அதை வட்டியுடன் திருப்பிக் கொடுப்பது தேய்ந்து போன நாணய மதிப்பில்தான். கடனைத் திருப்பிக் கொடுப்பது எளிதான காரியம் அன்று. ஆமினும் இன்று உலவும் அதிக பட்ச வட்டிக்கு ஓரளவு குறைவாகப் பல நிதி நிறுவனங்கள் வீடு கட்ட உதவி செய்கின்றன. மத்திய அரசு நிறுவனங்கள். மாநில அரசு நிறுவனங்கள், [HFDC], நிதிகள், பொது நிறுவனங்கள், கம்பெனிகள் ஆகியவை நேரிடையாவே ஓரளவு குறைந்த வட்டியில் கடன் கொடுக்கின்றன. ஏனெனில், இந்த நிறுவனங்கள் தாங்கள் கொடுத்த கடன்களின் மீதே அதைவிடக் குறைந்த வட்டியில் மத்திய அரசு நிறுவனங்களிலிருந்து நிதி உதவி பெறுகின்றன. அரசு தவிர, பல நிறுவனங்கள் தங்கள் ஊழியர்களுக்கு வீடு கட்ட வட்டி இல்லாமலோ அல்லது குறைந்த வட்டியிலோ கடன் கொடுக்கின்றன. வீடு இல்லாதவர்கள் இதை அவசியம் பயன்படுத்திக் கொள்ள வேண்டும். ஏனெனில், ஆண்டுக்கு குறைந்தது 10% விலைவாசி ஏற்றம் இருப்பதால் அந்த அளவிற்கு நமது சேமிப்புகளின் உண்மையான மதிப்பு குறைகிறது. நமது முதலீடு 10 சதவீதமே வருமானம் பெற்று, அந்த வருமானத்தை அப்படியே வைத்திருநதாலும் கூட நாம் நின்ற இடத்திலேயே தான் நிற்சகிறோம். ஆனால், விலையேறும் பொருள்களில் செய்யப்படும் முதலீடு நம் சொத்து மதிப்பு குறைவதற்குப் பதிலாகப் கூடுகிறது. கடன் வாங்கி வீடு கட்டுவதற்கு இதுவும் ஒரு காரணம். தவிர, வேறு பல காரணங்களும் உள்ளன.

## வரிச் சலுகைகள்

### வருமான வரி [Income-Tax]

நாம் கட்டிய வீட்டிலிருந்து வரும் வருமானத்திற்கு வரி கட்ட வேண்டும். ஆயினும், நாம் வாங்கும் கடனுக்கு நாம் கட்டும் வட்டியை நமது வருமானத்திலிருந்து கழிவாகப் பெறலாம். அதைக் கவனத்தில் கொண்டால் நாம் கட்டும் வட்டி விகிதம் நாம் கட்டும் உச்ச வரி விதிப்பின் அளவிற்குக் குறையும். நமது உச்ச வரி விகிதம் 30% ஆக (ரூ. 50,000 முதல் ரூ.1 லட்சம் வரை) இருந்தால் நாம் 20% விகிதத்தில் கட்டும் வட்டிகூட நடப்பில் 14% ஆகக் கொள்ளலாம்.

எஸ். ராஜரத்தினம்

## நிறுவன நியூஸ்

### இந்தியாவில் லீ ஜீன்ஸ்கள்

அர்விந்த் மில்ஸ் நிறுவனம், அமெரிக்க ஜீன்ஸ் உற்பத்தியாளருடன் இணைந்து இந்தியாவில் லீ-ஜீன்ஸ்களைத் தயாரிக்கவுள்ளது. இந்நிறுவனம் 'க்யூட் பீபாடி' (Cluett Peabody) எனும் அயல்நாட்டு நிறுவனத்துடன் இணைந்து ஆர்ரோ (Arrow) ஷர்ட்களை அறிமுகப்படுத்துவதற்கான முயற்சிகளில் ஏற்கனவே ஈடுபட்டுள்ளது. ●

### டால்மியா சிமெண்டின் இலவசப் பங்குகள்

டால்மியா சிமெண்டின் இயக்குனர்கள் (பாரத்) தங்களது பங்குதாரர்களுக்கு, 3 பங்குகளுக்கு 1 பங்கு என்ற விகிதத்தில் இலவசப் பங்குகளை வழங்க முடிவு செய்துள்ளனர்.

#### மாருதி உத்யோக்கின் புதிய அறிமுகம் :

மாருதி – ஜென்னுக்குப் பிறகு 'மாருதி உத்யோக்' நிறுவனம் மாருதி -1300CC வகைக் கார்களை அறிமுகப்படுத்தவிருக்கிறது. இந்தப் புதிய காருக்கு, [illegible]துஸ்தான் மோட்டார் மற்றும் [illegible]ர் ஆட்டோமொபைல்ஸ் நிறுவனங்களிடமிருந்து பலத்த போட்டியிருக்கக் கூடும் என்று கருதுகிறார் மாருதி உத்யோக்கின் நிர்வாக இயக்குனர் திரு ஆர். சிபார்கவா.

ஜூலையில் அறிமுகப்படுத்தப்பட்ட மாருதி ஜென் அக்டோபர் மாதம் முதல் இந்தியச் சாலைகளில் வலம் வரத் தொடங்கும். நாடெங்கிலிருந்தும் 73,759 விண்ணப்பங்கள் வந்துள்ளன. இவற்றின் முதல் 200 கார்களுக்கான விண்ணப்பங்கள் கம்ப்யூட்டரால் தேர்ந்தெடுக்கப்பட்டு விநியோகத்திற்குத் தயாராக உள்ளன. ●

---

நாம் கட்டும் அல்லது வாங்கிய வீட்டில் நாமே வசித்தால், அந்த வீட்டிற்கு வருமான வரி இல்லை. ஆனால், வாங்கிய கடன் ரூ. 5,000 வரை கழிவாகப் பெறலாம். நமது வீட்டின் வாடகை வருமானத்திலிருந்து நகராட்சி வரியையும் தவிர்த்து மீதத் தொகையிலிருந்து ஐந்தில் ஒரு பாகம் செலவினங்களாகவும், கழிவுகளாகவும் பெறலாம். அத்துடன், அந்த வீட்டிற்கு இன்ஷூரன்ஸ் கட்டணம், நில வாடகை முதலிய செலவுகள் செய்யப்பட்டிருந்தால் அவற்றிற்கும் கழிவு உண்டு.

இன்னொரு முக்கிய வருமான வரிச் சலுகை. வாங்கிய கடனைத் திருப்பித்தரும்போது ரூ. 10,000 வரை சிறுசேமிப்பு போன்ற முதலீடுகள் போல்20% நாம் கொடுக்க வேண்டிய வரியில் இருந்து ரூ. 2,000 தள்ளுபடி ஆகிறது. அதனால் ரூ.8,000 மட்டும் கொடுத்துக் கடன் சுமை ரூ. 10,000 குறைகிறது. இது ஒரு நல்ல சலுகை அல்லவா!

### சொத்து வரி

### [Wealth Tax]

சொத்து வரி வரம்பு ரூ. 15 லட்சமாக இருப்பதாலும், சொத்துக்களின் மதிப்பு வருமானத்தை வைத்து மதிக்கப்படுவதாலும் சொத்து வரியைப் பற்றிப் பலருக்கும் பயமில்லை. அந்த வீடு, கடை போன்ற தொழில் நிறுவனங்களுக்கு வாடகைக்குத் தரப்பட்டிருந்தால் சொத்து வரிக்கு உட்படாது. அதை வீடாகப் பயன்படுத்தினால், ஒரு வீட்டிற்கு வரிவிலக்கு அளிக்கப்படுகிறது.

### முலதன லாப வரி

### [Capital Gains Tax]

எந்த முதலீட்டைக் காசாக்கினாலும் 'முலதன லாப வரி [Capital Gains Tax] செலுத்த வேண்டி உள்ளது. ஆயினும், கம்பெனி பங்குகளாக இருந்தாலும் சரி, சொந்த ஊரிலுள்ள நிலபுலன்களாக இருந்தாலும் சரி அந்த விற்ற தொகையை ஒரு வீட்டின் மீது போடும்போது முலதன லாப வரி தவிர்க்கப்படுகிறது. அம்மாதிரியே ஒரு விட்டை விற்று அதன் லாபத்தை இன்னொரு விட்டில் முதலீடு செய்தாலும் முலதன லாப வரியைத் தவிர்க்கலாம்.

முலதன லாப வரியைத் தவிர்க்க பிரிவுகள் 54 54இன் படி உள்ள நிபந்தனைகளைக் கவனத்தில் கொள்வது அவசியம்..

### கொடை வரி [Gift Tax]

பணமாகக் கொடுப்பதைவிட வீட்டைக் கொடையாகக் கொடுத்தால் கொடை வரி குறைகிறது. அதன் காரணம் கொடை வரிக்கு அந்த வீட்டின் மதிப்பைக் கணிக்கும்போது அந்த மதிப்பு சொத்து வரியைப் போல் அதன் வருமானத்தை வைத்து நிர்ணயிக்கப் படுகிறது. ஆண்டு வருமானத்தைச் செலவு போக மீதித் தொகையில் 12.5% பங்காக விலை மதிக்கப்படுவதால் அது சாதாரணமாக விற்கப்படும் விலையை விட மிகக் குறைவாகவே இருக்கும். ஆயினும், பதிவுக் கட்டணங்களும், கொடை வரி வரிவிகிதமும் 30% ஆகவும் இருப்பதால் இந்த கொடை வரிச் சலுகை மிகவும் பயனுள்ளதாகக் கொள்ள முடியாது.

ஒரு கல்யாணத்தைப் பண்ணிப் பார்ப்பதும் வீட்டைக் கட்டிப் பார்ப்பதும் சிரமமான காரியங்கள் தான். ஆனால், கடன் வாங்கிக் கல்யாணம் செய்வது தவிர்க்க இயலாததாக இருக்கலாம். கடன் வாங்கி வீடு கட்டுதல் ஒரு விவேகமான செயல்.

ஃ



# தனியார் துறையில் தன்னிகரற்ற வங்கி தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி

## வங்கியின் வளர்ச்சி – ஒரு கண்ணோட்டம்

பாரத நாட்டின் தென் கோடியில் கடல் வாணிபத்திற்குப் பெயர் பெற்ற தூத்துக்குடியில் 1921 ஆம் ஆண்டு தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி பழைமையும் பெருமையும் கொண்ட நாடார் சமூகத்தினரால் தொடங்கப் பட்டது. துவக்கத்தில் "நாடார் வங்கி லிட்" என்கிற பெயரில் ஆரம்பிக்கப்பட்ட இவ்வங்கி, 1962 ஆம் ஆண்டில் 'தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி லிட்" என்று பெயர் மாற்றம் செய்யப்பட்டது. சுமார் எழுபது ஆண்டுகளாகத் தமிழகத்தின் வியாபார வளர்ச்சி மற்றும் சமூக முன்னேற்றத்தில் வங்கி ஆற்றிவரும் பணி அளவிலாதது. மேலும் இவ்வங்கி பல துறைகளிலும் வியக்கத்தக்க வகையில் முன்னேற்றம் அடைந்துள்ளது.



தூத்துக்குடியில் அமைந்துள்ள தலைமைச் செயலகம்

## மூலதனம் மற்றும் ஒதுக்கீடுகள்

தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் பங்கு மூலதனம் ரூ. 28.00 இலட்சம் ஆகும். இது இந்திய ரிசர்வ் வங்கியின் அங்கீகாரம் பெற்ற ஒரு "ஷெட்யூல்ட் வங்கி", வங்கியின் பிற ஒதுக்கீடுகள் (Reserves) ரூ. 24.00 கோடி ஆகும்.

## ஆதாயம்

தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி சென்ற (March 1992) வணிக ஆண்டு முடிவில் ஈட்டிய நிகர லாபம் ரூ. 4.85 கோடி ஆகும். இது இந்த (March 93) வணிக ஆண்டு முடிவில் ரூ. 6.69 கோடியாக உயர்ந்துள்ளது. வங்கியின் பங்குதாரர்களுக்குச் சென்ற ஆண்டு மூலதன லாபப் பங்கீடு (DIVIDEND) 25% வழங்கப்பட்டது. இந்த ஆண்டு லாபப் பங்கீடு 50% ஆக வழங்குவதற்கு அனுமதி வேண்டி விண்ணப்பம் செய்யப் பட்டுள்ளது.



திரு. எல்.எம். திரவியம்
(ஜெனரல் மானேஜர்
– அட்மினிஸ்ட்ரேஷன்ஸ்)

## வங்கி அடைந்துள்ள வளர்ச்சியின் முக்கிய அம்சங்கள்

### 1. வைப்பு நிதி

வங்கியில் மொத்த வைப்புத் தொகை சென்ற ஆண்டு ரூ. 408.19 கோடியாக இருந்தது. இது இந்த ஆண்டு (March 93)ரூ. 547.00 கோடியாக உயர்ந்துள்ளது. வைப்புத் தொகையில் வங்கியின்



திரு. கே. பாலகிருஷ்ணன்
(ஜெனரல் மானேஜர் - ஆபரேஷன்ஸ்)

வளர்ச்சி விகிதம் 34.17% ஆகும். இந்த வணிக ஆண்டு முடிவில் (March 93) மொத்த வைப்புத் தொகை ரூ. 766.00 கோடியாக இருக்க வேண்டும் என்று திட்டமிடப்பட்டுள்ளது.

## 2. கடன்

வங்கி பல துறைகளுக்கும் வழங்கியுள்ள மொத்த கடன் தொகை ரூ. 288.23 கோடி ஆகும். இது சென்ற ஆண்டில் இருந்த அளவை விடவும் ரூ. 81.76 கோடி அதிகம் ஆகும். இந்த ஆண்டு (March 94) முடிவில் மொத்த கடன் தொகை ரூ. 450.00 கோடியை எட்ட வேண்டும் என்று திட்டமிடப்பட்டுள்ளது.

இந்திய அரசு அறிவித்துள்ள சமூக முன்னேற்றத் திட்டங்களான "ஒருங்கிணைந்த ஊரக வளர்ச்சித் திட்டம் (IRDP)", "படித்த வேலையில்லாத இளைஞர்களுக்கான சுய வேலை வாய்ப்புத் திட்டம் (SEEUY)", "மாறுபட்ட வட்டி விகிதத்தில் கடன்கள் (DRI SCHEME)" போன்ற பல்வேறு திட்டங்களின் கீழ் ஏராளமான கடன்கள் வழங்கப்பட்டுள்ளன.

உதாரணமாக, திரு. கொண்டையா என்பவர் சொக்கன் குடியிருப்பு என்கிற கிராமத்தைச் சேர்ந்தவர். இவர் ஆதி திராவிடர் வகுப்பினர் ஆவார். இவர் வறுத்த நிலக்கடலை முதலியவற்றை வாங்கிக்கடை வீதிகளில் விற்று வந்தார். இவருக்கு தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் கொம்மடிக் கோட்டை கிளையில் ரூ. 4500/- கடன் வழங்கப்பட்டது. இவர் இப்போது சொந்தமாக நிலக் கடலை முதலியவற்றை வாங்கித்தாமே வறுத்து விற்பனை செய்கிறார். இதனால் இவரது வருமானம் பெருகியது. வங்கிக் கடனை உரிய காலத்தில் திருப்பிச் செலுத்தினார். தற்போது வங்கியில் சேமிப்பையும் செய்து வருகிறார். கூடிய விரைவில் கடை வீதியில் தனது சொந்தக் கடை ஒன்றையும் ஆரம்பிக்க எண்ணியுள்ளார். தனது இரு பிள்ளைகளையும் மேல் படிப்புக்கு அனுப்புகிறார்.

மேலும் திரு. குருசாமி என்பவருக்கு தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் தூத்துக்குடி கிளை ரூ. 35000/- கடன் வழங்கியது. இவர் S.S.L.C. வரை படித்த வேலையில்லா இளைஞர். இவரது விண்ணப்பம், தமிழ்நாடு மாவட்ட தொழில் மையத்தின் மூலம் அனுப்பப்பட்டது. வங்கியில் பெற்ற கடன் மூலம் திரு. குருசாமி அலுமினியப் பாத்திரங்கள் தயாரிக்கும் தொழிலைத் தொடங்கினார். பாத்திரங்கள் தயாரிப்பு சீராக நடைபெற்று வருகிறது. இதனால் இவர் குடும்ப வருமானம் உயர்ந்துள்ளது. இவரும் வங்கியில் பெற்ற கடனை உரிய காலத்தில் திரும்பச் செலுத்தினார்.

இவ்வாறு வங்கியின் மூலம் கடன் பெற்று வாழ்க்கையில் முன்னேற்றம் அடைந்த எண்ணற்றோர் வங்கியின் உதவிகளை நன்றியுடன் நினைவு கூர்கின்றனர்.

## 3. கிளைகள்

தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் கிளைகள் தற்போது 132 ஆகும். இந்தியாவின் எல்லா முக்கிய நகரங்களிலும் கிளைகள் உள்ளன. கடந்த ஓராண்டில் மட்டும் புதிதாக 15 கிளைகளைத் திறந்து இவ்வங்கி ஒரு சாதனையைச் செய்துள்ளது. வங்கியின் மூலதனம், முதலீடு மற்றும் ஒதுக்கீடுகள் இந்திய ரிசர்வ் வங்கி அறிவித்துள்ள "மூலதன தன்னிறைவு விதி (Capital Adequacy Norms)" களின்படி இருக்க வேண்டிய 4% என்ற அளவுக்கு அதி கூடுதலாக 8% உள்ளது. எனவே இவ்வங்கி முன் அனுமதி பெறாமலேயே புதிய கிளைகளை எங்கு வேண்டுமானாலும் திறக்கலாம். இதற்கான உத்தரவு ரிசர்வ் வங்கியிடம் இருந்து கூடிய விரைவில் வழங்கப்படும். இன்னும் ஓரிரு வருடங்களில் கிளைகளின் எண்ணிக்கை 200ஐ எட்டும் என்று திட்டமிடப்பட்டுள்ளது.

## 4. கணணி (Computer)

தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் 132 கிளைகளில் 63 கிளைகள் முற்றிலும் கணணி மூலம் இயங்குகின்றன. மேலும் இந்த 63 கிளைகளில் கேட்பு வரை (Draft) கணணி மூலம் வழங்கப்படுகிறது. இது இந்தியாவில் உள்ள வங்கிகளின் வரலாற்றிலேயே ஒரு சாதனை ஆகும். புதிய கிளைகள் துவக்க நாள் முதலே கணணி மூலம் இயங்குகின்றன. ஒரு சில கிளைகளில் வாடிக்கையாளர்கள் தாமாகவே கணணியை இயக்கித் தங்களது கணக்குகளில் உள்ள இருப்பு மற்றும் இதர விவரங்களை அறிய ஏற்பாடு செய்யப்பட்டுள்ளது. கணணி சேவை வாடிக்கையாளர்களிடையே பெரும் வரவேற்பைப் பெற்றுள்ளது. கூடிய விரைவில் வாடிக்கையாளர்களின் நிறுவனங்களில் இருந்தே தங்கள் கணக்குகளில் உள்ள விபரங்கள் அறிய ஏற்பாடுகள் செய்யப்படும். பிற வங்கிகளில் தலா ஊழியர் (Per employee) வணிகம் சுமார் 20 முதல் 30 லட்சமாக இருக்கும் போது தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியில் 51 இலட்சமாக இருப்பதற்கு வங்கி ஊழியர்களின் ஒருங்கிணைந்த உழைப்பும், கணணி முறை செயல்படுத்துவதனாலுமே என்பதைத் தலைவர் மகிழ்ச்சியுடன் நினைவு கூர்கிறார்.

## 5. CREDIT CARD

சென்ற ஆண்டு முதல் தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி சர்வ தேசப் புகழ்பெற்ற (MASTERCARD) "மாஸ்டர்கார்டு" நிறுவனத்தின் கிரெடிட் கார்டுகளை வாடிக்கையாளர்களுக்கு வழங்கி வருகிறது.

→

## 6. அந்நியச் செலாவணி வணிகம்

தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி அந்நியச் செலாவணி வர்த்தகத்தில் ஈடுபடுவதற்கான ரிசர்வ் வங்கியின் அனுமதியை 1984 ஆம் ஆண்டு பெற்று இத் துறையில் வாடிக்கையாளர்களுக்கு மிகவும் சீரிய சேவையைச் செய்து வருகிறது. வங்கியின் அந்நியச் செலாவணிப் பிரிவு தூத்துக்குடியில் எல்லாவித நவீன வசதிகளுடன் செயல்பட்டு வருகிறது. சென்ற ஆண்டில் வங்கியில் அந்நியச் செலாவணி வணிகம் ரூ. 150 கோடி அளவுக்கு நடைபெற்றுள்ளது. ஏற்றுமதித் துறைக்கு வங்கி வழங்கியுள்ள கடன் தொகை (March 92) ரூ. 18.32 கோடி ஆகும். இது சென்ற வணிக ஆண்டு முடிவில் இருந்த அளவைக் காட்டிலும் மூன்று மடங்கு அதிகம் ஆகும். தற்போது உள்ள விவரப்படி (20.8.93) ஏற்றுமதித்துறைக் கடன் தொகை ரூ. 30.24 கோடி என்ற அளவை எட்டியுள்ளது. இது இந்த வணிக ஆண்டு முடிவில் சுமார் ரூ. 92 கோடி என்ற அளவை எட்டவேண்டும் என்று திட்டமிடப்பட்டுள்ளது.



திரு. எம். ஜேசுதாசன் (சேர்மன்)

## சமூக மேம்பாட்டில் வங்கியின் பங்கு

சென்ற ஆண்டு வெள்ளத்தால் பாதிக்கப்பட்ட ஆத்தூர் மற்றும் அதன் சுற்று வட்டாரத்தில் வீடுகளை இழந்தவர்களுக்கு தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் சார்பில் 105 புதிய குடிசை வீடுகள் கட்டித் தரப்பட்டன. இதற்கான செலவு சுமார் ரூ. 1.00 லட்சம் ஆகும். இவ்வாண்டு தூத்துக்குடி நகரில் இரண்டு இடங்களில் போக்குவரத்துத் திடல் (Traffic Island) களை சீரமைத்து நிர்வகிக்கும் பொறுப்பை இவ்வங்கி ஏற்றுள்ளது.

## தலைவர்

இந்திய ரிசர்வ் வங்கியில் இணைத் தலைமை அதிகாரியாக இருக்கும் திரு. எம். ஜேசுதாசன் அவர்கள் தற்போது தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கியின் தலைவர் ஆகப் பொறுப்பு ஏற்றுள்ளார். வங்கியின் தலைவர் மற்றும் இயக்குநர் குழுவினர் வங்கியின் வளர்ச்சியினைக் கண்டு மிகவும் பெருமிதம் கொள்கின்றனர். அவர்கள் கூறுவதாவது: "வாடிக்கையாளர்களின் பேராதரவினாலும் ஊழியர்களின் அயராத உழைப்பினாலும்தான் எங்கள் வங்கி வளர்ச்சி அடைந்து முன்னேறி வருகிறது. இன்னும் ஓரிரு ஆண்டுகளில் எங்கள் தமிழ்நாடு மெர்கண்டைல் வங்கி ரூ. 1000 கோடி வைப்பு நிதியும் 200 கிளைகளையும் கொண்ட ஒரு ஒப்பற்ற நிலையை அடையும் என்பதில் சிறிதும் ஐயமில்லை".



# லையழகோடு காசு சம்பாதிக்கலாம்!

- ஸ்ரீமதி

இயற்கையை வெல்லுவது ன்பது இயலாத காரியம்தான். னால் இன்று இயற்கைக்கு கரான செயற்கைச் சாதனங் ரின் கண்டுபிடிப்புக்களால் யற்கையை ஏறக்குறைய வன்று வருகிறார்கள். உதார மாக செயற்கை மழையைச் சால்லலாம். செயற்கையாக மழையையே உருவாக்க முடி ம்போது மரம், செடி, கொடி ளை உருவாக்குவது இயலாத ரியமா என்ன? இயலுகிற காரி ம்தான் என்று நிருபித்துக் காண்டிருக்கிறார்கள் சென் னையைச் சேர்ந்த 'WF' நிறுவனத் னர்.

செயற்கைத் தாவரங்கள் றிய விவரங்களைப் பெறு தற்காக 'WF' ஷோருமிற்குள் ழைந்தால் பசுமையான டர்ந்த காட்டிற்குள் நின்று காண்டிருக்கும் உணர்வு ஏற் கிறது. சுற்றிலும் பல அளவு ளில், வண்ணங்களில் மரம், டி, கொடி வகைகள். வற்றை மிக அருகே போய் தாட்டுப் பார்த்தால் மட்டுமே யற்கை எனத் தெரியவரு து. நூறு சதவிகிதம் இயற்கைத் வரமாகவே தோற்றம் தரு து.

'WF' நிறுவனத்தின் உரிமையா திருமதி ரமணி ஜோசப், ற்கையாகவே கலை நயமும், வேலைப்பாட்டுத் திறனும் டையவர். இங்கிலாந்தில் 'பூ லங்காரம்' செய்பவராகப் ணியாற்றி, நிறையப் பயிற்சி ளை மேற்கொண்டவர். இத ல் உந்தப்பட்டு, செய்கைத் வர உற்பத்தியையே தொழி கத் தொடங்கியவர் ரமணி.

சென்னையில் 'WF' நிறுவனத் கென இரண்டு தொழிற் லைகள் உள்ளன. 100 சத தம் இயற்கையை ஒத்த செயற்



கைத் தாவரங்களைத் தயாரிக்க உதவும் மூலப்பொருள் அதற் கென பிரத்யேகமான துணி வகைகள்தான். பெரும்பாலும், உயர் தர பாலியெஸ்டர், பாலி தீன் துணிவகைகள், வண்ணங் கள், பூச்சுகள் ஆகியவை. இந்திய இயந் திரங்கள் தான் உபயோகிக் கப்படுகின்றன.

குறைந்தபட்சம் ரூ. 65லிருந்து, அவரவர்களது விருப்பத் திற்கேற்ப, அளவுகளுக்கேற்ப ரூ.10,000, ரூ.15,000 வரை கூட மரங்களும் செடி, கொடி வகைகளும் தயாரித்துக் கொடுக் கப்படுகின்றன. பெரும்பாலும் 15 வகைப்பட்ட தாவரங்களை பலவித அளவுகளில் தயாராகத் தயாரித்து வைத்திருந்தாலும், இல்லாத ஒரு வகையை வாடிக் கையாளர்கள் கேட்டால் அதற் கெனப் பிரத்யேகமான துணி வகைகள், பூச்சுகள், ப்ரோட்டோ டைப்கள் தேவைப்பட்டாலும் கூட தயாரித்துக் கொடுக்கப் படுகிறது.

பொழுதுபோக்கிற்காக மூன்று வருடங்களுக்கு முன் ஆரம்பிக்கப்பட்ட இத்தொழில், இன்று அயல்நாடுகளுக்கு ஏற்று மதி செய்யும் அளவிற்கு அகில உலகத் தரத்துடன் தயாரிக்கப் படுகிறது.

செயற்கைத் தாவரங்களின் தயாரிப்பில் 'Perfection' மிக மிக முக்கியமானது. 'மூங்கில் மரம்' என்றால் உண்மையிலேயே மூங் கில் மரம் போல் இருக்க வேண் டும். தண்டுகள், கிளைகள், இலை கள் அனைத்தும் அதே உறுதி, மென்மை ஆகியவற்றைப் பெற் றிருக்க வேண்டும். குரோட் டன்கள் என்றால் உண்மையான குரோட்டன்களைப் போலவே நிறங்களையும் வடிவமைப்பு களையும் கொண்டிருக்க வேண் டும்.

இத்தொழில் தொடங்க விரும் பும் எல்லோருமே வெற்றி பெற்றுவிடுவது என்பது மிகக் கடினம். சற்றே பண பலம் உள்ளவர்களும், உடனுக்குடன் லாபம் எதிர்பார்க்காதவராகவும், அதே சமயத்தில் ஆர்க்கி டெக்ட் டுகள், இண்டீரியர் டெகரேட்டர் களின் தொடர்பு உள்ளவராகவும் இருப்பது அவசியம். பெரும் பாலும் பெரிய பெரிய அலுவல கக் கட்டிடங்கள், பங்களாக்கள், ஹோட்டல்கள் போன்ற இடங் களில்தான் இவை வரவேற்கப் படுகின்றன. மற்ற வியாபாரப் பொருட்களைப் போல ஆயிரக் கணக்கில் கோடிக் கணக்கில் என்றெல்லாம் ஒரே நேரத்தில் விற்றுவிட முடியாது என்கிறார் திருமதி ரமணி.

இடவசதி, மண்வசதி, தட்ப வெப்ப நிலை, சூழ்நிலை மாசு ஆகியவற்றைப் பற்றியெல்லாம் கவலைப்படாமல், சிறிய வீடு களில் கூட பசுமைப் புரட்சியை செயற்கைத் தாவரங்களால் உண்டாக்க முடியும் என்பதில் ஐயமில்லை. முயன்று முயற்சித் தால் அதிகப் போட்டிகளில்லாத இந்தத் தொழிலில் வெற்றி காண லாம். ●

# காற்றுவாக்கில்

✦ அந்நியச்செலாவணி விஷயங்களில் வங்கிகளுக்குக் கொடுக்கப்பட்டுள்ள அதிகாரங்கள் சரிவர உபயோகப்படுத்தப் படுகின்றனவா என்று கவனிக்க ரிசர்வ் வங்கியின் மேற்பார்வை மிகவும் தீவிரமாக்கப்படவிருக்கிறதாம்.

✦ இந்த நூற்றாண்டின் இறுதிக்குள் அனைத்து வங்கிகளின் பெரிய கிளைகள் யாவும் கம்ப்யூட்டர் மயமாக்கப்படுவதற்கான ஏற்பாடுகள் மும்முரமாக நடைபெற்றுக் கொண்டிருக்கின்றன.

✦ வங்கிகளிலிருந்து பெருந் தொகைகளைக் கடனாகப் பெறுபவர்கள், தவணைகளைச் சரிவரச் செலுத்துகிறார்களா என்று கவனிக்க பம்பாய் ரிசர்வ் வங்கியில் ஒரு தனிப்பிரிவு அமைக்கப்படவுள்ளது.

✦ படிப்பிற்காகவோ, வியாபார நிமித்தமாகவோ அயல்நாட்டிற்குச் செல்ல வேண்டியவர்கள் இனி ரிசர்வ் வங்கியின் தயவை நாடவேண்டியதில்லை. அந்நியச் செலாவணி வழங்க, அனைத்து வங்கிகளுக்கும் ரிசர்வ் வங்கி அதிகாரம் அளித்துள்ளது. மேலும் வெளிநாட்டினரை இந்தியாவிற்கு



அழைத்து உபசரிப்பதற்கான தற்போதுள்ள கட்டுப்பாடுகளும் மிகவும் தளர்த்தப்பட்டு, ரிசர்வ் வங்கியின் தயவில்லாமல், இங்கிருந்தே அவர்களுக்கான பயணச் சீட்டையும் வாங்கி அனுப்புவதற்கும் அனுமதி அளித்துள்ளது.

✦ சிமெண்ட், சர்க்கரை உற்பத்தி மற்றும் இன்ஜினியரிங் பொருட்களைத் தயாரிக்கும் கே.சி.பி. மெட்ராஸின் இந்த ஆண்டு செயல்பாடுகள் மிகவும் சிறந்த முறையில் இருப்பதால் இதன் பங்குகளின் விலை மிகவும் உயரும் என்று பேசப்படுகிறது.

✦ எஸ்.என்.எஸ் நிறுவனத்தின் கடல் பொருள் உற்பத்திக்கான ஏற்றுமதி அதிகரித்துள்ளது. இந் நிறுவனத்தின் செயலாக்கமும் திருப்திகரமாக இருப்பதால் இந் நிறுவனப் பங்குகள் உயரக் கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

✦ பாரி கன்ஃபெக்ஷனரி நிறுவனம், பபிள்கம் தயாரிப்பில் உலகப் புகழ் பெற்ற, அமெரிக்க நிறுவனம் ஒன்றுடன் கூட்டு சேரவிருக்கிறது. தற்போதுள்ள லாப விகிதத்துடன் ஒப்பிடும் போது இதன் பங்கு விலை ரூ. 95 என்பது குறைவாக இருப்பதாக உணரப்படுகிறது. வெகு விரைவிலேயே ரூ 200ஐ எட்டக்கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

✦ சென்னையைச் சேர்ந்த ஓய்.எஸ். போர்சலீனின் செயலாக்கம் சிறப்பாகவுள்ளது. இதன் ஏற்றுமதி அதிகரித்துள்ளதால் பங்குகள் விலை உயரக் கூடும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

✦ கோயம்புத்தூரைச் சேர்ந்த பி.ஏ. காட்டன் & ஸ்பின்னிங் மில் நிறுவனத்தின் பங்கு விலை ரூ. 150ஐ எட்டக்கூடும்.

---



## சஞ்சாயிகாவில் சிறுவர்களின் வெற்றி

சென்ற இதழில் ‘சிறுசேமிப்பில் சிறுவர்களின் பங்கு’ என்ற கட்டுரையைப் படித்திருப்பீர்கள். ‘சஞ்சாயிகா’ எனப்படும் இத்திட்டத்தை மாணவர்களிடையே ஊக்குவிப்பதற்காக சென்றமாதம், 22 மாவட்டங்களில் வினாடி வினா போட்டிகள் நடத்தப்பட்டன. இவற்றில் 18 மாவட்டங்களிலிருந்து தேர்ந்தெடுக்கப்பட்ட 36 மாணவர்கள் சென்னைக்கு வரவழைக்கப்பட்டு, மாநில அளவில் திருவல்லிக்கேணி கெல்லட் மேல்நிலைப் பள்ளியில், சிறுசேமிப்புத்துறை இயக்குனர் திரு.டி.எஸ். ஸ்ரீதர் அவர்களின் தலைமையில் கால் இறுதிப் போட்டி நடைபெற்றது. இதிலிருந்து எட்டு மாவட்டங்களைச் சேர்ந்த 16 மாணவ – மாணாக்கியர்கள் அரை இறுதிப் போட்டிக்குத் தேர்ந்தெடுக்கப்பட்டனர். இந்தப் போட்டியும், இறுதிப்போட்டியும் சென்னை வானொலி நிலைய ஒலிபரப்பு அரங்கில் நடைபெற்றது. இறுதிப்போட்டியில் முதல் பரிசு எம்.வேல்முருகன், ஜி.செல்வ குமாருக்கும் (அதியமான் அரசினர் மேல் நிலைப்பள்ளி – தர்மபுரி) இரண்டாம் பரிசு டி. அருஞ்சுனைக்கனி, எஸ்.கார்த்திகேயனுக்கும் (நாடார் சரஸ்வதி மேல் நிலைப்பள்ளி, தேனி – மதுரை) மூன்றாம் பரிசு ஆர்.ஹேமலதா, ஆர்.கீதாவுக்கும் (பாய்லர் பிளாண்ட் மகளிர் மேல்நிலைப் பள்ளி, திருச்சி) வழங்கப்பட்டது. இவர்களுக்குப் பரிசுத் தொகையாக முறையே ரூ.1000, ரூ.500, ரூ.250ம் இந்திரவிகாஸ் பத்திரமாக ரூ.1000, ரூ.500, ரூ.250ம் வழங்கப்பட்டது.

போட்டியில் பங்கு பெற்ற அனைத்து மாணவ, மாணாக்கியருக்கும் சான்றிதழ்கள் வழங்கப்பட்டதோடு, முதல் மூன்று பள்ளிகளுக்கு விருதுக் கேடயங்களும் வழங்கப்படவுள்ளன.

சென்னை வானொலி நிலையத்தில் நடைபெற்ற இந்த வினாடி வினா போட்டியில் நிதியமைச்சர் உள்பட, சிறுசேமிப்புத் துறையைச் சேர்ந்த அதிகாரிகள் அனைவரும் கலந்து கொண்டனர். இவ் வினாடி – வினாப் போட்டியைச் சென்னை விவேகானந்தா கல்லூரிப் பேராசிரியர் திரு.வ.வெ.சுப்பிரமணியன் அவர்கள் நடத்திவைத்தார்.

# சிறுசேமிப்பு - குடும்பத்தின் முதல் செலவாக இருக்கட்டும்








## உங்கள் முதலீடுகளுக்கு 619 கவர்ச்சிகரமான பரிசுகள்

| | |
|---|---|
| 1 சூப்பர் பம்பர் முதல் பரிசு | மாருதி ஆம்னிவேன் (அல்லது) 25 H.P. H.M.T. டிராக்டர் (இயந்திரக்கலப்பையுடன்) |
| 1 இரண்டாவது பரிசு | - அஞ்சலக மாதாந்திர வருவாய்த்திட்டத்தில் ரூ. 24,000/-க்கான முதலீடு |
| 2 மூன்றாவது பரிசுகள் | - கலர் டெலிவிஷன் |
| 2 நான்காவது பரிசுகள் | - உலர்த்தும் வசதியுள்ள செமிஆட்டோமேடிக் வாஷிங்மெஷின் |
| 3 ஐந்தாவது பரிசுகள் | - 2 நபர்களுக்கு சென்னையிலிருந்து புறப்படும் 6 நாள் தென்னிந்திய சுற்றுலா |
| 10 ஆறாவது பரிசுகள் | - 1 சவரன் (22 காரட்) தங்கநாணயம் |
| 600 ஏழாவது பரிசுகள் | - ரூ. 100/- மதிப்புள்ள இந்திராவிகாஸ் பத்திரம் |




**இன்றே ரூ. 500/-ம் அதற்கு மேலும் தமிழ்நாட்டில் முதலீடு செய்து இலவச பரிசுக் கூப்பன் பெறுங்கள்.**

## பரிசுக் கூப்பன் பெற முதலீடு செய்ய வேண்டிய திட்டங்கள்

* இந்திரா விகாஸ் பத்திரம் (IVP)
* கிசான் விகாஸ் பத்திரம் (KVP) ▲
* தேசிய சேமிப்புப் பத்திரம் 8-வது வெளியீடு (NSC VII ISSUE) ▲
* தேசிய சேமிப்புத்திட்டம் 1992 (NSS '92) ▲
* 15 ஆண்டு பொது சேமநல நிதித்திட்டம் (PPF) ▲
* மாதாந்திர வருவாய்த் திட்டம் (MIS) ▲
* ஓய்வு பெறும் அரசு/பொது நிறுவன ஊழியர்களுக்கான சேமிப்புத் திட்டம் ▲
* 1 மற்றும் 2 ஆண்டு அஞ்சலக குறித்தகால முதலீடு (T.D.) - 1% ஊக்கத்தொகை
* 3 மற்றும் 5 ஆண்டு அஞ்சலக குறித்தகால முதலீடு (T.D.) ▲
* அஞ்சலக தொடர் வைப்புத்திட்டம் / வளரும் மாத சேமிப்புத் திட்டம் (R.D./C.T.D.)

மேலும் **2%** ஊக்கத்தொகை ▲ (குறிப்பிட்ட திட்டத்திற்கு)

**சேமிப்புப்பத்திரம் அனைத்து அஞ்சலகங்களிலும் கிடைக்கும்**

மேலும் விவரங்களுக்கு :

ஆணையாளர், சென்னை மாநகராட்சி, (சிறுசேமிப்பு பிரிவு) சென்னை-600 003. தொலைபேசி: 584440.
மண்டல இயக்குநர், தேசிய சேமிப்பு நிறுவனம், 92, அண்ணா சாலை, சென்னை-2. தொலைபேசி: 849962.
மாவட்ட ஆட்சியர், வட்டாட்சியர், வட்டார வளர்ச்சி அலுவலர், அஞ்சலக அதிகாரிகள் மற்றும் சிறுசேமிப்பு முகவர்கள்.

சிறு குடும்பம் செல்வக் குடும்பம்

**இன்றைய சேமிப்பு நாளைய பாதுகாப்பு**

வெளியீடு :
இயக்குநர் சிறுசேமிப்புத்துறை,
621, அண்ணா சாலை, சென்னை -600 006.
தொலைபேசி: 8251784 /8251685.

DIPR/729/DIS/93

சென்னை - 2இல் உள்ள ஆர்.ஜே. பிராசஸ் ஆஃப்செட் அச்சகத்தில் அச்சிட்டவர் :
ஜனார்த்தனன், ஸ்ரீராம் டிரஸ்ட், சென்னை - 600 001 சார்பில் வெளியிட்டவர் : ஏ.வி.எஸ். ராஜா.
...ரியர் - கலைமாமணி விக்கிரமன், நிர்வாக அலுவலகம், 145, லிங்கச் செட்டி தெரு,
...எண் : 5043, சென்னை - 600 001. தொலைபேசி : 5228545, 510535. அண்டுச் சந்தா ரூ. 60